The "Viveka Bodhini" Series.

# THE GREAT EUROPEAN WAR

(IN TAMIL)

PROFUSELY ILLUSTRATED

PUBLISHED BY

THE 'VIVEKA BODHINI' OFFICE,

*Triplicane, Madras, S. E.*

 1915 [*Re.* 1-8.

# முகவுரை

ஸாதாரணமாக ஐரோப்பாவைப்பற்றியும், ஐரோப்பிய விஷய ஸூக்ஷ்மங்களைப்பற்றியும், படித்தாவது கேட்டாவது அறிபவர் நந்தேசத்தில் வெகு ஸ்வல்பமே. அங்கு நடக்குங் குழப்பங்களையும், சச்சரவுகளையும், அவைகளின் உட்பொருளையும், நன்றாயறிவதற்கு, ஐரோப்பிய தேசசரித்திரமும், அந்நாடுகளின் மனோரதங்களும், அவைகளை ஸாதிப்பதற்குள்ள ஸௌகர்யாஸௌகர்யங்களும், ஸ்நேக விரோதாதி பாவங்களும் தெரியவேண்டியது அவசியம். இவை தெரிந்தாலொழிய ஐரோப்பிய விஷயங்களின் உண்மையான தத்வம் புலப்படுவது அருமை.

அவ்வாறு அறிவதற்கோ என்றால், தமிழ்மட்டுமே தெரிந்தவர்களுக்குச் சிறிதும் மார்க்கமில்லை. ஐரோப்பிய தேச ஸம்பந்தமான புஸ்தகம் இதுவரை ஒன்றும் தமிழில் வெளிவந்ததில்லை. ஜனங்களுக்கும் அவ்விஷயங்களைப்பற்றி அறிய ஆவல் வெகுவாக இல்லாதிருந்தது. ஆனால் இந்த மஹாயுத்தம் ஆரம்பிக்கவும் ஜனங்களுக்கு அதைப்பற்றிய ஸகல ஸங்கதிகளையும் விஸ்தாரமாக அறியவேண்டுமென்ற ஆவல், பல காரணங்களை முன்னிட்டு, உண்டாயிருக்கிறது. நம் ஸஞ்சிகையின் சந்தாதாரர்களில் யுத்த விஷயங்களைப்பற்றி விஸ்தாரமாக அறிய ஆவலுள்ள பலர் 'போதினி'யில் யுத்தத்தைப்பற்றி இன்னும் அதிகமாக எழுதும்படி அபிப்பிராயப்பட, அவ்வாறு செய்வதற்கு இயலாததால், அவற்றை ஒரு புஸ்தக ரூபமாக வெளியிட்டால் நலம் என்று எண்ணினோம். மேலும் தமிழில் பிரசுரமாகும் எண்ணிறந்த பத்திரிகைகளையும், சண்டைச்சிந்து போன்ற சில ஸாதனங்களையும் அளப்

பரிய ஆவலுடன் மிகுந்த ஜனங்கள் வாங்கிப் படிப் பதை அடிக்கடி பார்த்த எமக்கு, இந்த யுத்தத்தைப் பற்றிய ஸகல விஷயங்களையும் அடக்கி ஒரு புஸ்த கம் வெளியிட்டால் பொதுவாக ஜனங்களுக்கு மிகவும் உபகாரமா யிருக்குமென்று தோன்ற, அவ்வாறு தகுந்த முயற்சியுடன் செய்து முடித்தனம்.

ஆனல் "சந்தடிச்சாக்கில் தட்டினது ஆதாயம்" என்பதுபோல், கேவலம் ஜனங்களின் ஆவலை முன் னிட்டு லாபம் ஸம்பாதித்துவிடவேண்டு மென்ற எண் ணத்தைக்கொண்டு மாத்திரம் இதை நாம் செய்ய வர வில்லை. ஜனங்களுக்கு உபகாரமாயும் உபயோகமாகவு மிருக்கும்படி, ஐரோப்பிய தேசங்களின் சரித்திரத்தை யும், அதன்மூலமாய்வெளியாகும் அநேகஸூக்ஷ்மமான ரகஸ்யங்களையும், ஆதிமுதல் ஆராய்ந்துபார்த்து, இந்த யுத்தத்திற்கு ஏற்படுங்காரணங்களையும், இவைபோன்ற பல விஷயங்களையும் எக்காலத்தும், எல்லோருக்கும், உபயோகமாகும்படி எழுதவேண்டும் என்னும் நோக் கத்தையே முற்கொண்டு எழுதியுள்ளோ மாதலால், இந்த யுத்தத்தினல் ஏற்பட்ட ஆர்வமும் அமளியும் ஓய்ந்தபின்னும், ஐரோப்பிய தேசசரித்திரம், இந்த யுத்தத்தின் போக்கு, முதலிய பலவிஷயங்களையும், ஸூக்ஷ்மமாக அறிவதற்கு இப்புஸ்தகம் என்றும் சிறந்த ஸாதனமாக விளங்குமென நம்புகிறோம்.

ஐரோப்பாவிலுள்ள ஸகல ராஜ்யங்களுடைய சரித்திரமும் எழுதுவதென்றால், ஸாமான்ய ஜனங்கள் எளிதில் படித்தறிவது சற்று சிரமஸாத்யமாய்விடும். ஆகவே முக்கியமான விஷயங்களில் பெரும்பான்மை யைமட்டுங் கூறியுள்ளோம். மற்றும் அறியவேண்டிய

விஷயங்கள் யாவும் சீக்கிரம் வெளியாகும் இரண்டாம் பாகத்தில் சேர்த்துள்ளோம்.

மேலும் ஏறக்குறைய 60 படங்கள் வரை அழகாக ஆர்ட்பேப்பரில் அச்சிட்டுச் சேர்த்திருக்கிறோம். இன்னமும் கையிலுள்ள படங்களையும் சேர்ப்பதாக இருந்தோம். ஆனால் அவ்வாறு செய்வதற்குச் சில நாட்கள் பிடிக்குமாகையாலும், அதுவரை நம் அபிமானிகளைக் காலஹரணஞ்செய்து காக்கவைக்க இஷ்டமில்லாமையாலும், அந்த சித்திரப்படங்களை அடுத்த பாகத்தில் வருபவையோடு சேர்ப்பதாக உத்தேசித்திருக்கிறோம்.

கூடியவரை, சுத்தமாயும், விஸ்தாரமாயும், தெளிவாயும், படிப்பவருக்கு மனோத்ஸாகத்தை உண்டுபண்ணும் விதமாகவும் எழுதியுள்ளோம். இப்புஸ்தக மூலமாக ஐரோப்பிய விஷயங்களை நன்றாய் உணரவேண்டுமென்ற ஆவலும், ஐரோப்பாவிற்கும் நம் தேசத்திற்கும் ஏற்பட்டுள்ள நெருங்கிய ஸம்பந்தமும், இவை போன்ற பல விஷயங்களும், இதைப் படிப்போருக்கு நன்கு விளங்கி அறிவு விஸ்தாரப்பட இடமுண்டாகுமானால் இப்புஸ்தகம் வெளிவர நாம் எடுத்துக்கொண்ட முயற்சிக்குப் போதுமான கைம்மாறாகும்.

‘ விவேக போதினி ’ ஆபீஸ்.,
திருவல்லிக்கேணி, சென்னை.
1—1—1915

பதிப்பாசிரியர்.

# பொருளடக்கம்



## அநுபந்தங்கள்

## சித்திரப்படங்கள்

## தேச படங்கள்

# டால்ஸ்டாய் கண்ட காட்சி

" நான் இங்கே வெளியிடுகிற ஸம்பவங்கள் உலக முழுவதற்குமே பொருந்தியுள்ளன; அவைகள் அவசியம் சீக்கிரத்தில் நிகழவேண்டியவை. மானிடவிதிக் கடலில் ஒருபெண்மணியின் உருவம் மிதப்பதைக் காண்கிறேன். ஒவ்வொரு நாட்டாராய் வெறிபிடித்தவர் போல் அவளைநோக்கி ஓடுகிறார்கள்; ஆனால் ஒவ்வொருவரையும் அவள் அலட்சியமே செய்கிறாள். அவள் அணிந்திருக்கும் வஜ்ரவைடூர்யங்களே அவள் நாமதேயம் 'வ்யாபாரத்வம்' என்பதைக்குறிப்பிடுகின்றன. முகவசீகரமும் தேககாந்தியும் பொருந்தியவளாய் அவள் காணப்படுகிறாள்; ஆனால் நாசமும் வேதனையும் அழுகையுமே அவளைப் பின்பற்றுகின்றன. இழியசெயல்களின் நாற்றம் அவள் வாயிலிருந்து வீசுகின்றது; அவள் குரல் வெறும் உலோகத்தின் ஒலி போலிருக்கிறது; பேராசையைக்குறிக்கும் பார்வையோ அவள் மாயவலையில் சிக்குண்டஜாதியாருக்கு விஷம் போலுமுள்ளது. ப்ரபஞ்ச க்ஷீணத்வ தசையாம் (பந்தங்கள்) தீவட்டிகள்—ஒன்று போரைக்குறிக்கும், மற்றொன்று (மதவெறி) வைராக்யம், மூன்றாவது ஆதாரமற்றுக் கர்ண பரம்பரையாய் வரும் பழக்க வழக்கங்களுக்கு அபாயகரமான அஸ்திவாரம்போன்ற சட்டம்—ஆகிய பந்தங்களை உயரத்தூக்கிப்பிடிக்கிறாள். 1912--ம் வருஷத்தில் ஐரோப்பாவின் தென்கிழக்கு நாடுகளில், முதல் பந்தத்தினால் பற்றவைக்கப்பட்டு இப்பெருந் தீ பிடித்துக் கொள்ளும். 1913-ம் வருஷத்தில் அழிம்பைக் கொண்டு வரும்படியாய் இது விருத்தியாகும். ஐரோப்பா அக்னிக்கிரையாயும் இரத்தம் பெருகிக்கொண்

டும் இருப்பதைப் பார்க்கிறேன்; விசாலமான யுத்த பூமிகளிலிருந்து (ரணகளங்களிலிருந்து) கிளம்பும் கூக்குரலையும் கூடக் கேட்கிறேன். * * * *

“* * * * அப்புறம் மதவுணர்ச்சியில் மாறுதல்கள், (கிறிஸ்தவ) மதத்தின் போக்கு, மானிட நடத்தைகளுக்குரிய எண்ணங்களின் அழிவு ஆகிய இவைகள் ஏற்படுவதைக்காண்கிறேன். பிறகு ஒரு சிறந்த சீர்திருத்தம் உண்டாகின்றது. ஸர்வ தேவதைகளுக்கும் உரிய ஆலயத்திற்கு வேண்டும் மூலைக்கற்களை அச்சீர்திருத்தம்தான் அமைத்துவைக்கும். பகவான், ஜீவன், ஆத்மா, நித்யத்வம் ஆகிய இவைகள் எல்லாம் புதிய உலைக்களத்தில் உருக்கப்பட்டு, புதிய நடத்தைகளுக்குரிய அமைதிபொருந்தி, ஒரு சகாப்தத்திற்கு அடிகோலிவைக்கும் குழப்பங்களிலும் மதக்கலகங்களிலும் எல்லா ஜாதியாருடைய ஆத்மவிசாரணை ஸ்தாபனங்களும் அசைவுபெற்றுவிட்டன. ஆனால் ஒவ்வொரு நாட்டாரும் இன்னும் புத்திசாலிகளாய்விட்டதைக் காண்கிறேன். உலக நாடகத்தில் தலைமைக் காட்டிச்செல்லும் வேஷம் மாலையில் மலைகளின்மீது உண்டாகும் தகதகப்பைப்போல் மறைந்து போவதையும் வ்யாபாரத்வத்தின் கை வீச்சு ஒன்றிலேயே ஒரு புதிய சரித்திரம் ஆரம்பிக்கிறதையும் காண்கிறேன்.”



ஜ்யார்ஜ் சக்கரவர்த்தி



மிஸ்டர் பாயின்கேர், ப்ரான்ஸ்தேச ப்ரஸிடெண்ட்



# ஐரோப்பிய மஹா யுத்தம்

## முதல் அதிகாரம்

### யுத்தமூலம்: பால்கன் தீபகல்பம்



இவ்வுலகத்தில் எக்காலத்திலும் நடந்திராத பெரும்போர் ஒரு சிறு காரணத்தை முன்னிட்டுள்ளது. பாஸ்னியாவின் ப்ரதான நகரமாகிய ஸாரஜீவோவில் ப்ரின்ஸப் என்னும் ஸெர்வியமாணவன் ஆஸ்ட்ரியா தேசத்து இளமன்னராகிய ப்ரான்ஸிஸ் பேர்டிணண்டின் மீதும் அவர் மனைவியின் மீதும் குண்டுகளை எறிந்து கொலைசெய்தான் என்பதைக் காரணமாகக் கொண்டு ஜெர்மனியானது ஆஸ்ட்ரியாவுக்கு உதவிபுரிய வந்து இந்த யுத்தத்தைத் தொடங்கிவிட்டது. இந்த யுத்தத்தின் மூலமாக, தான் ஐரோப்பாவில் முதன்மையாக வந்து மற்றவைகளைக் கீழ்ப்படுத்திவிடலாம் என்பது ஜெர்மனியின் கருத்து. அநேக வருஷங்களாய் ஸெர்வியா கொஞ்சம்கொஞ்சமாய் முன்னுக்குவந்து விருத்தி

யடைவது ஆஸ்ட்ரியாவுக்குப் பிடிக்கவில்லை. இந்த ஸெர்வியாவென்னும் சிறு ராஜ்யமானது பால்கன் தீபகல்பத்தில் பல்கேரியா, டர்க்கி இவைகளுடன் போர் செய்து வெற்றியடைந்து மஹா பராக்கிரமத்துடன் விளங்கலாயிற்று. ஆனாலும் பால்கன் யுத்தத்தினாலுண்டான களைப்பிலிருந்து திரும்புகிறதற்குள் அதை அடக்கிவிடவேண்டியது நியாயமல்லவா?

இந்த விஷயத்தில் தலையிட்டுக்கொள்வதில் ஜெர்மனியினுடைய எண்ணங்களுக்கும் காலம் வெகு அனுகூலமாயிருந்தது. இங்கிலாந்திலிருந்து யாதொரு பயமுமில்லை; அயர்லாந்தின் ஸ்வராஜ்யச் சச்சரவிற்குள் அகப்பட்டு அங்கே பெருங்குழப்பமாயிருந்தது. ரஷியாவிலும் எங்கும் பெருங்குழப்பமா யிருந்தது; ஸைன்ய தோரணைகள் அப்பொழுதுதான் நடந்துகொண்டிருந்தன. ரஷியாவை எதிர்க்கவும் அதுதான் ஸமயம். ப்ரான்ஸை எதிர்த்துப் போர்செய்யத் தனக்குப்போதுமான சக்தியுள்ளதென்று நினைத்து எப்பொழுது சண்டைக்கிழுக்க ஸமயம் வாய்க்குமென்று எதிர்பார்த்துக் கொண்டே யிருந்தது. ஆம், ஆஸ்ட்ரிய இளவரசனைக் கொன்ற மஹாபாதகத்தைக் காரணமாகக் கொண்டு ஆஸ்ட்ரியா, ஸெர்வியாவை எவ்வெவ்விதத்தில் அதன் ஸ்வாதந்தர்யத்தை இழந்து விடுமோ அவ்வவ்விதமான காரியங்களைச் செய்யக்கேட்டது. பதிலுரைப்பதற்கும் இரண்டுநாளே கெடுவு வைக்கப்பட்டது. ஸெர்வியாவும் தன்னால் கூடுமானவைகளைச் செய்வதாகப் பதிலுரைத்து, முடியாத நிபந்தனைகள் விஷயமாய் ஒரு (நடுநிலை விசாரணை) ஸபை ஹேக் பட்டணத்தில் கூடி அவ்விடத்

தில் அவைகள் தீர்க்கப்பட வேண்டுமென்று கேட்டுக் கொண்டது. ஆனாலும் ஆஸ்ட்ரியா பொறுக்காமல் சண்டைக்குக் கிளம்பிட்டது.

ஸெர்வியாவிற்குத் துணையும் இனமுமான ராஜ்ய மாகிய ரஷியா அதற்கு அனுகூலமாய்ப் பரிந்து பேச வந்து சேர்ந்தது. ஆகவே ஜெர்மனியும் ஆஸ்ட்ரியா வுக்குத் துணையாக உதவ வந்து ரஷியாவின் முன்னின் றது. ஜெர்மனிக்கும் ரஷியாவுக்கும் இடையே நடந்து வந்த வ்யவஹாரங்கள் ப்ரமாதமாய் முடியும் போலிருக்கும் தறுவாயில் யுத்தம் இவ்விரண்டு ராஜ யங்களுக்கும் நேரும் பக்ஷத்தில் ' நீ எங்ஙனம் நடப் பாய் ' என்று ப்ரான்ஸை ஜெர்மனி கேட்டது. உடனே ரஷியாவிற்கும், ஜெர்மனி ஆஸ்ட்ரியாவிற்கும் யுத்தம் தொடங்கியது. போருக்கு வருவதாக எச்சரிக்கை கூடச் செய்யாமல் ஜெர்மனி ப்ரான்ஸை எதிர்க்க ஆரம்பித்து யுத்த விஷயங்களில் சிறிதும் ஸம்பந்தப் படாத தனி ராஜ்யங்களாகிய பெல்ஜியம், லக்ஸம்பர்க் இவைகள் வழியாய் தன் ஸைந்யங்களை நடத்தத்தொ டங்கியது. ஆனால் இவ்விஷயங்களில் ஜெர்மனியும் ஆஸ்ட்ரியாவும் ஏமாந்து விட்டன. அவை நினைத்த வண்ணம் இங்கிலாந்தில் உள்சச்சரவுகள் நடந்து கொண்டிருக்கவில்லை. ஸ்வராஜ்ய வாதிகளும், அல்ஸ் டர் வாதிகளும் ஒன்று சேர்ந்துவிட்டார்கள். பொது விரோதியின் மீது ஒன்றாகக் கட்சி சேர்ந்தார்கள். பார்லிமெண்டிலும் கட்சிகள் ஏற்படவில்லை. எல்லா வாதங்களும் திடீரென்று நிறுத்தப்பட்டன. பெல் ஜியநாட்டின்மீது ஜெர்மானியர் சென்றபொழுது அச்

# ஐரோப்பிய மஹா யுத்தம்

சிறு ராஜ்யம் ஒருவரும்—ஜெர்மானியரும்—எதிர்பார்த்திராதவண்ணம் வெள்ளம்போல் புரண்டு வரும் சேனையைத் தடுத்ததும் தவிர, இங்கிலாந்தும் பெல்ஜிய ஸ்வாதந்தர்யத்தைக் காத்துக் கொடுப்பதாக உடன்படிக்கை * ஏற்பட்டிருக்கிறபடியால் ஜெர்மனியின்மீது போருக்குக் கிளம்பிவிட்டது.

இம்மாதிரி உலக முழுவதும்—நாகரிகமடைந்த உலகமுழுவதும்—யாரும் இதுவரையில் கேட்டிராத, பார்த்திராத, படித்திராத பெரும் போரில் நுழைய நேரிட்டுவிட்டது. ஸாரஜீவோவில் நடந்த கொலைக்குப் பின் சிறிதுகாலத்திற்குள் ஐரோப்பாவில் உள்ள ராஜ்யங்கள் எல்லாம் யுத்தமும்முரத்தில் இருந்தன; அல்லது யுத்தஸந்நாகத்தில் இருந்தன. மான்டிநீக்ரோவென்னும் குட்டி ராஜ்யமும் ஆஸ்ட்ரியாவை எதிர்க்கும்படியாய் விட்டது. எட்டு ராஜ்யங்கள் போர்முனையில் நின்றன. நூற்றெண்பது லக்ஷம் போர் வீரர் படுகளத்தில் நின்றெதிர்த்தார்கள். ஐரோப்பா முழுவதும் ரணகளமாய் விளங்கிற்று. எல்லா வியாபாரங்களும் தடைப்பட்டு நின்றுவிட்டன. அநேக பாங்கிகள் மூடப்படவேண்

* 1839-ம் வருஷத்தில் நடந்த உடன்படிக்கையில் 7-வது நிபந்தனையின் முக்யபாகம் வருமாறு:—"நிபந்தனைகள் 1, 2, 4-ல் சொல்லப்பட்டுள்ள அத்துக்குள் பெல்ஜியம் தனிய ரசாகவும் சாசுவத நடுவு நிலைமையான தேசமாகவும் இருக்கக் கடவது. அப்படிப்பட்ட நடுவு நிலைமையை மற்ற ராஜ்யங்களுக்குக் காட்டும்படி அது உட்பட்டிருக்கிறது." இந்த உடன்படிக்கையைத்தான் ஜர்மானியர் மீறி வெறும் கடிதத் துண்டு என்று இகழ்ச்சியாய்க் கூறினார்கள்.



நிகோலஸ், ருஷ்ய சக்கரவர்த்தி



ஆல்பர்ட், பெல்ஜியம் அரசர்

டியபதாயிற்று. பண்டங்களின் விலைகள் திடீரென்று ஏறிவிட்டன. வியாபாரிகளும் லக்ஷாதிபதிகளும் நஷ்டமடைந்தார்கள். யுத்த நடவடிக்கைகள் ஒன்றன் பின் ஒன்றாய் வெகு விரைவில் நிகழலாயின. ஐரோப்பாவில் உள்ள தேசங்களில் வியாபாரவிஷயமாய்ப் போனவர்களும், கல்விகற்கச் சென்றவர்களும், விநோதார்த்தமாய்ச் சென்றவர்களும் எல்லாரும் சத்துருக்களால் சூழப்பட்டு வெளிவர முடியாமல் தவித்தார்கள். அவர்களில் சிலருக்கு உண்ணச்சோறும் இருக்க இடமும் கூட கிடைப்பதரிதாய் வருந்தினார்கள். ஐரோப்பாவில் உள்ள ப்ரதான பட்டணங்கள் எல்லாம் தம் ஸ்வயலக்ஷ்மீகரத்தை இழக்கத் தொடங்கின. எப்பொழுதும் எல்லாராலும் புகழப்பட்டு ஐரோப்பாவில் மிகச்சிறந்து விளங்கும் நகரமாகிய பாரிஸ்கூட சின்னாட்களில்பொலிவிழந்து இருளடைந்து பாழடைந்தது போலாயிற்று. எங்கு கண்டாலும் இரவில் விளக்கு ஒளியில்லாமல் போர்வீரர் அதிகாரமே அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது. இங்கிலாந்து தேசத்தின் கடற்கரையில் உள்ள சிறுபட்டணங்கள் கூட இதே நிலைமையை அடையலாயின. எந்நேரத்தில் எதிரிகள் குண்டுகள் வந்து விழுமோ, எந்நேரத்தில் நம் பீரங்கிகளை எதிரி கடற்படையின்மீது திருப்பநேரிடுமோ தெரியவில்லை. இவ்வூர்களிலிருந்து ஜனங்கள் உள் நாடுகளுக்குப் போய்விடுவது நலமென்று சொல்லப்படவே அங்கும் ஜனஸந்தடியைக் காணோம். தவிர ஆண்மக்கள்— ஆயுதம் ஏந்தத்தக்க ஆண்மக்களெல்லாரும் போருக்குப் போகவேண்டிய அவசியம் நேரிட்டதைக் குறிப்பிட்டு

நோக்கின், வியாபாரம் பலதுறைகளிலும் அழிந்ததும், எங்கும் இருள்சூழ்ந்ததும் ஆச்சர்யமாகக் காணும்.

ஒரேமூச்சில் ஐரோப்பா முழுமையும் மாறுதலடைந்து விட்டது. உலகமெங்கணும் இது வியாபிக்கும் என்பதற்கையமில்லை. அனேக ஜாதியார்கள் வேறுபாடடைவார்கள். அனேகராஜ்யங்கள் அழிந்து போகக் கூடும். இன்னம் பல சிறு ராஜ்யங்கள் உந்நத நிலைக்கு வரலாம். அனேக வீரதீர தந்திரசாலிகளால் ஒருமைப் படுத்தப்பட்ட ஜெர்மானியநாடு ஆதிகாலத்திலிருந்தது போல சின்ன பின்னப்பட்டுப் போகவும் கூடும். எப்படியிருந்தாலும் இந்த மஹாயுத்தத்தினால் உலகத்திற்கு நஷ்டம் நஷ்டமே; ஆனபோதிலும் உலகத்தில் பேராசையாலும் துர்க்குணங்களாலும் தூண்டப்பட்டுக் கேவலம் மிருகத்தன்மையாக நடத்தப்படும் போர்த்திறத்தின் பலம் குன்றிவிடும். ஆகவே அதர்மம் ஒழிந்து தர்மம் ஸத்யம் முதலியவை செழித்து ஓங்கும்.

ஒரு பள்ளிக்கூடச் சிறுவன் செய்தகுற்றத்தையே ப்ரமாதமாகக் கொண்டு போருக்கு ஆரம்பித்த ஜெர்மனியின் நடத்தை அனேக முக்யமான விஷயங்களைக் குறிப்பிடுகின்றது. ரஷியாவுக்கும் ஜெர்மனிக்கும் அதாவது ஸ்லாவ் ஜாதியாருக்கும் ட்யூடன் ஜாதியாருக்கும் எக்காலத்தும் உள்ள பகைமை; 1870-வது வருஷத்தில் ப்ரான்ஸ்தேசத்தை முறியடித்து அதனிடமிருந்து அபகரித்துக்கொள்ளப்பட்ட ஆல்ஸேஸ் லோரேய்ன் விஷயமாக ஜெர்மானியர்மீது ப்ரன்சுக்காரருக்கு உள்ள ஆத்திரம்; ஸர்வ ஸாகரங்களிலும் இங்கிலாந்து செலுத்தும் ஆதிபத்யத்தைத் தான் பிடுங்கி

அநுபவிக்கவேண்டும் என்னும் பேராவலால் தூண்டப் படுகின்றது ஜெர்மனி என்னும் இம்மூன்று விஷயங் களும் எல்லாருக்கும் இனிது விளங்கும். ஆனாலும் இப்போர்க் குழப்பத்தின் ப்ரதமபாகத்தில் இருகக்ஷி யார்கள்தாம் வெளிவந்தனர். வடகடற்கரையினின் றும் மத்யதரைக்கடல் வரையும் பரவியுள்ள ஒரு பெரிய ட்யூடன் ராஜ்யத்தை நிலை நிறுத்தவேண்டு மென்று ஜெர்மனியும், ஸ்லாவ் ஜாதியாருள் முதன்மை வஹித்து அவர்களைப் பாதுகாப்பது தன் கடமை யென்று ரஷியாவும் நோக்கங்கொண்டிருந்தன.

நிற்க, ஸாரஜீவோ விஷயங்களைச் சற்றுக் கவனிப் போம். ஆர்ச் ட்யூக் ப்ரான்ஸிஸ் பெர்டினண்ட் என் னும் ஆஸ்ட்ரிய இளவரசன் அந்நகரத்தைப் பார்வை யிடவேண்டும் என்று எண்ணங்கொண்டான். இந்த ஸாரஜீவோ என்னும் பட்டணம் ஆஸ்ட்ரியாவின் கீழ டங்கியுள்ள பாஸ்னியாவின் ப்ரதான நகரம். ஸுமார் 40-வருஷங்களுக்கு முன்னே அவ்விடத்தில் ஒருசிறு கோட்டையும் அதைச்சுற்றி துருக்கர்கள் நிறைந்த வீதிகளும் இருந்தன. அது அக்காலத்தில் டர்க்கி யைச் சேர்ந்தது. 1878-ஹில் முடிந்த ரஷிய டர்க்கி யுத்தத்தில், பாஸ்னியா, ஹெர்ஸிகோவினா இந்நாடுகள் ஆஸ்ட்ரியாவின் பார்வையின்கீழ் வந்தன. இவர்கள் ஆளுகையின்கீழ் ஸாரஜீவோவே ப்ரதான பட்டண மாக்கப்பட்டுப் பலவிதங்களிலும் சீர்திருத்தப்பட்டது. தவிர, 1909-ம் வருஷம் இவ்விரண்டு நாடுகளும் ஆஸ் ட்ரிய ஆளுகையின் கீழ் நேரே வந்தபொழுது ஆஸ்ட்ரி யாவின் பலம் அதிகரித்தது. ஆஸ்ட்ரிய பாதுகாப்பின்

சீழ் எவ்வளவு சீரடைந்தபோதிலும் பாஸ்னிய ப்ரஜைகள் ஆஸ்ட்ரியாவை வெறுத்தார்கள். அச்சிறு நாட்டு ஜனங்கள் ஸ்லாவ் ஜாதியரைச் சேர்ந்தவர்கள். அடுத்தாற் போலிருக்கும், தினேதினே செல்வாக்கடைந்து வரும் சிறு ராஜ்யமாகிய ஸெர்வியாவுடன் சேரவேண்டுமென்பது அவர்கள் எண்ணம். ஸெர்வியாவுக்கும் தம்மினத்தார்க்கு உதவி புரியவேண்டுமென்று தோன்றியது. பாஸ்னியரின் வெறுப்பு விருத்தியடைந்தே வந்து கொண்டிருந்தது. ஆஸ்ட்ரிய சக்ரவர்த்தி ப்ரான்ஸிஸ் ஜோஸப்புக்குப் பின்வரும் ஆர்ச்ட்யூக் பெர்டினண்டுக்கு இவ்விஷயம் விளங்காமல் போகவில்லை. இந்த பாஸ்னியரை எப்படியாவது தன்வசப்படுத்தி ஆளவேண்டும், தற்காலம் ஆஸ்ட்ரியாவில் எப்படி இரு அரசாங்கங்கள் நடைபெறுகின்றனவோ அதேமாதிரி பாஸ்னியர் முதலிய ஸ்லாவ் ஜாதியாரைச் சேர்த்து மூவ்விதமாய் ஆளவேமென்று கருதிவந்தான். ஆஸ்ட்ரிய ஆதிபத்யம் ஆஸ்ட்ரியா, ஹங்கேரி என்னும் இரண்டு பிரிவினையுடையது. ஹங்கேரியில் உள்ள ப்ரஜைகள் ஆஸ்ட்ரியரினும் வேறான மற்றொரு ஜாதியார். ஆகவே ஆஸ்ட்ரியர், ஹங்கேரியர், பாஸ்னியா முதலிய நாடுகளிலுள்ள ஸ்லாவ் ஜாதியார் இவர்கள் மூவரையும் அணைத்துக்கொண்டுள்ள ஒரு பெரிய ராஜ்யத்தைத்தான் ஆளவேண்டும்; பாஸ்னியருக்கும் அனுகூலங்கள் செய்து தன்வழிப்படுத்தவேண்டும் என்ற எண்ணங்களுடன்தான் இவ் விளவரசன் ஸாரஜீவோவுக்குச் சென்றது.

ஆகவே, இவ்விளவரசனின் நோக்கங்களையும்

அவன் குணகுணங்களையும் இங்கு சிறிது அறியலா யிற்று. இவரைப்போன்ற ராஜ்யதந்திர நிபுணரான இளமன்னர்கள் ஐரோப்பாவில் இருத்தல் அரிது. 1889-ம் ஆண்டில் ஆஸ்ட்ரிய சக்ரவர்த்தியின் மூத்த குமாரன் திடீரென இறந்துபோகவும் பெர்டினண்ட் எனுமிவன் இளவரசானன். அதற்குமுன் மனம்போன போக்கெல்லாம் போனவன், அது முதற்கொண்டு சில கொள்கைகளையே பின்பற்றி நடப்பவனானன். உறுதி யான கொள்கைகளும், சலிக்காத மனமும், தளர்ச்சி யடையாத ஊக்கமும் கொண்டவன். நூதன பத வியை யடைந்ததும் இவனது நடத்தைகளைக்கண்டு ஆஸ்ட்ரிய ராஜகுடும்பத்துக்குக்கூட பீதியுண்டாகிவிட் டது. குடும்ப வழக்கத்தை அறவே ஒழித்துவிட்டு பொஹிமியநாட்டு ஒரு பெருங் குடும்பத்திலுதித்த (Sophie Choteck) ஸோபி சோடேக் என்னும் குலமக ளைத்தன்னிஷ்டம்போல் மணந்துகொண்டான். ஆகவே தன்மனைவிக்கும் குழந்தைகளுக்கும் ராஜ்யத்தில் சிறி தும் பாத்யதையில்லையென்று கூறவேண்டியதாயிற்று. தன்மனைவியின் பேரை எதிலும் ஸம்பந்தப்படுத்தாம லிருக்க நேரிட்டபோதிலும், அப்படியிராமல் எல்லா விஷயங்களிலும் இருவருடைய பெயருமே விளங்கியது. அப்பெருமாட்டியும் அவமதிக்கத்தக்கவள் அல்லள். எல் லாருடைய மதிப்பையும் வியப்பையும் கிடைக்கப்பெற் றிருந்தாள். அவளுக்கு மறுக்கப்பட்டிருந்த கௌர வங்களை யங்கீகரிப்பதில் ஐரோப்பியமன்னர்கள் ஒரு வரும் தடைசொல்லவில்லை. ஆர்ச்ட்யூக் பெர்டினண் டும் அவன்மனைவியும் தம்தேச விருத்தியின்பொருட்டு

எவ்வளவோ நினைத்துக் கலந்து உழைத்தார்கள். ஆகவேதான் பெர்டினண்டு தம்மனைவியுடனும் ஸாரஜீவோவுக்குச் சென்றது. அவர்கள் இருவரும் சென்ற ஜூன்மீ 28உ ஞாயிற்றுக்கிழமை காலையில் ஸாரஜீவோவையடைந்து ஸைந்யங்களைப் பார்வையிட்டு விட்டுத் தங்களை நல்வரவேற்று உபசரிக்கக் காத்திருக்கும் நகரபரிபாலகர் தங்கியிருந்த நகரஸபாமண்டபத்திற்கு மோட்டார்வண்டியில் சென்றார்கள். போகும் வழியில் இருபதுவயதுள்ள காப்ரினோவிட்ச் என்னும் அச்சுயந்த்ரசாலை வாலிபன் இவர்கள்மீது ஒரு வெடிகுண்டு எறிந்தான். அதைக் கையால் தடுக்க இளவரசன் முயன்றனன். அதுபின்னாலே மற்றொரு மோடார் வண்டியில் உட்கார்ந்திருந்த மெய்க்காப்பாளன் ஒருவன்மீது பட்டுக் காயப்படுத்தியதுமன்றி இன்னும் அனேகருக்கும் தீங்கிழைத்ததாம். இளவரசனுக்கும் அவன் மனைவிக்கும் யாதொரு காயமும் படவில்லை. நகரஸபாமண்டபத்தில் நுழைந்ததும் அவ்வூரார் நல்வரவுகூறி வந்தனோபசார பத்திரிகைபடிக்கத் தொடங்கினார்கள். நகரபரிபாலகருக்கு நடந்த விஷயங்கள் ஒன்றும்தெரியாதுபாபம். இளவரசர் திடீரென்று அவரைப் பார்த்து “உம்முடைய வார்த்தைகளில் என்ன இருக்கின்றது? நான் ஸாரஜீவோவைப் பார்க்கவந்தால் வெடிகுண்டு எறிகிறார்கள், இது மிக்கதுஷ்டத்தனம்” என்றனராம். மறுபடியும் மண்டபத்திலிருந்து பவனி திரும்பிற்று. காவ்ரில்லோ ப்ரின்ஸப் என்னும் மாணவன் அவர் மீது வெடிகுண்டு எறிந்தான். அது வெடிக்கவில்லை; உடனே சுழல் துபாக்கியை எடுத்து சுட்டான்.

மூன்று குண்டுகள் வெளிப்பட்டன. முதல்குண்டு இளவரசரின் தொண்டையில் பட்டது. இளவரசி அவர் முன்னேவிழுந்து அவரை மூடிக்கொண்டாள். இரண்டாவது அவள் உடலில் ஊடுருவிற்று. மூன்றாவது நன்றாய் உள்ளே பட்டது. கவர்னர் மாளிகைக்கு அவர்கள் வேகமாய்ப் போய்க்கொண்டிருக்கும்பொழுது பெர்டிணண்ட் சிறிது கண்ணைத்திறந்து "ஸோபி, நம்குழந்தைகளுக்காக வாழ்ந்திருப்பாய்" என்று கூறினராம். ஆனாலும் இருவருக்கும் மரணகாயம் பட்டபடியால் உடனே இறந்துபோயினர்.

காப்ரினேவிட்ச், ப்ரின்சப் இருவர்களும் பிடிக்கப்பட்டனர். இருவரும் ஸ்லாவ் ஜாதியார். முதலில் அவர்கள் ஒருவருக்கொருவர் உள்ள ஸம்பந்த நிபந்தனைகளைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. ஆனாலும் விசாரணையில் ஒன்றன்பின் ஒன்றாய் எல்லாம் வெளியாயின. இவர்கள் இக்கொடிய முயற்சி செய்ததினமும் ஸ்லாவ் ஜாதியாருக்கு ஆனந்தத்தை உண்டு பண்ணும் ஒரு நாளாயிருந்தது. இவர்கள் செய்த சூழ்ச்சிகள் ப்ரமாதமானவையென்றும், ப்ரின்ஸப்பின் குண்டினின்று தப்பிவிட்டிருந்தாலும் அன்றையதினம் அவ்விளவரசனைக் கொன்றிருப்பார்கள் என்றும், இம்மாதிரி ஆஸ்ட்ரியாவின்மீது த்வேஷம் உண்டாகும்படி ஸெர்வியர்கள் ஆங்காங்கே கிளப்பிவிட்டிருக்கிறார்கள் என்பதும் வெளியாயின. பேர்லின், வியன்னு நகரங்களில் ஸ்லாவ் ஜாதியாரை அடக்கிவிடவேண்டுமென்ற எண்ணம் இருந்ததற்குத் தகுதியான காலதேச வர்த்தமானங்களும் ஏற்பட்டுவிட்டன.

## ஐரோப்பிய மஹா யுத்தம்

இவ்வண்ணம் ஆஸ்ட்ரியாவின்மீது ஸெர்வியாவுக்கு என்ன த்வேஷம்? எக்காரணங்கொண்டு இத்த்வேஷங் கள் ஏற்பட்டன? என்பதைக் கவனிக்கவேண்டியது அவசியம் அல்லவா ? முன்சொன்னபடி இவ்யுத்தம் இரண்டு ஜாதியாருக்குள்ள வேற்றுமையை எடுத்துக்காட்டி அவர்களுக்குள் பழமையாய் நிலைத்துள்ள பகைமையை எடுத்துக் காட்டுகின்றது. ஆஸ்ட்ரியர் ஜெர்மானியரைப் போல ட்யூடன் ஜாதியாரைச்சேர்ந்தவர்கள். ஸெர்வியர்களோ ரஷியரைப்போல ஸ்லாவ் அல்லது ஸெர்ப் ஜாதியாரைச் சேர்ந்தவர்கள். ஆகவே எக்காலத்தும், ஜாதிகளுக்கு ஜாதி உண்டாகும் சண்டைகளைப்போல் இதுவும் ஒன்று. ஆனால் இது வெளிப்படையாயும் பலத்ததாயும் வந்துவிட்டது. நம் நாட்டானொருவன் அயல் நாட்டில் குடியேறியபிறகு மூன்றாவது மனுஷ்யனொருவனால் தொந்தரை செய்யப்பட்டால் நமக்கு எவ்வளவு ஆத்திரம் வராது? எல்லாம் ஸ்வஜாதி அபிமானமே. அதுபோல ஸெர்வியாவிலும் மற்றும் ஆஸ்ட்ரிய ஆட்சிக்குட்பட்ட பாஸ்னியாமுதலிய சிறு நாடுகளிலும் உள்ளவர்கள் ரஷியருக்கு ஜாதியிலும், மதத்திலும், பாஷையிலும், அனுதாபம் செலுத்துவதிலும் அபிமானப்பட்டவர்கள். அதுபோலவேதான் ஜெர்மானியரும் ஆஸ்ட்ரியரும் இருவரும் ஒரேஜாதியைச் சேர்ந்தவர்கள். ஜர்மனி சிலகாலமாய் ஸகலவிஷயங்களிலும் விருத்தியடைந்துகொண்டே வந்திருக்கின்றது. ஆயினும் ரஷியாவினிடமிருந்து ஜெர்மனிக்குப் பயம் என்பது இல்லாமற் போகவில்லை. ஒருபக்கத்தில் ரஷியாவும் மற்றொருபக்கத்தில் ப்ரான்ஸூம் சேர்ந்து எங்கு நசுக்கி



ரஷியப் போர்வீரர்கள்



இந்தியக் குதிரை வீரர்கள்

விடுகின்றனவோ என்ற திகில் அதற்கு இல்லாமல் போகவில்லை. இப்பொழுதுதான் முன்னுக்கு வந்து கொண்டிருக்கும் ரஷியாவின் விஸ்தீரணத்தையும் ஸாதனங்களையும் கண்டு ஜெர்மானியர் திகிலடைவது நியாயமன்றோ? அதேமாதிரி ஜெர்மானியர் மேன்மேலும் அடைந்துவரும் விருத்தியைக்கண்டு ரஷியருக்கும் பயந்தான். இவர்கள் இருவரும் போராடக்கூடிய ஸ்தலம் துரதிர்ஷ்டம்பெற்ற பால்கன் தீபகல்பம் ஒன்றுதான். ஐரோப்பாவில் இந்தப்பாகமே வெகுகாலமாகக் கலகத்திற்கும் போருக்கும் இடமாக இருந்து வருகிறது. பால்கன் தீபகல்பத்தைத் தன்வசப்படுத்தி ஆட்சிசெய்து வந்த துருக்கர்களின் சீரும் செல்வாக்கும் குறைந்து சிதைந்து வரலாயிற்று. வரவே, அதன் விஸ்தீர்ணம் வெகு குறைந்துவிட்டது. அவ்வாறானதால் அது முன் அடைந்திருந்த இடத்தை யாரடைவது? என்பதுதான் இச்சச்சரவிற்குக் காரணம். ஸுமார் இருநூறுவருஷத்திற்குமுன் டர்க்கியுடன் போர்புரிந்து தங்கள் ஸ்வய ஆட்சியைக் கிடைக்கப்பெற்ற ஸெர்வியர்கள் தங்கள் வெற்றிகளைப்பெருக்கி ஸ்வயாட்சிகளாய் விசாலமான ராஜ்யங்களை ஸ்தாபித்து வாழவேண்டுமென்பது, ஸ்லாவ் ஜாதியாரின் எண்ணம். ரஷியாவின் ஜனங்களும் ஸ்லாவ் ஜாதியார் என்று சொன்னோமல்லவா? ரஷியா இதற்கு ஒத்தாசைசெய்ய மிகவும் விரும்பியது. ஆஸ்ட்ரியா ஜெர்மனி இவைகள், ட்யூடன் ஜாதியாரின் எல்லையை முன்னமேயே கூறியபடி வடகடல்முதல் மத்ய தரைக்கடல் வரையில் பரவச்செய்து பால்கன் தீபகல்பத்தில் ஸ்லாவ்ஜாதியார் இருந்தபோதிலும் அவர்கள்

தங்கள் பாதுகாவலின்கீழ் இருக்கவேண்டுமென்று எண்ணி வருகின்றன. இப்படிப்பட்ட நோக்கங்கள் ஒன்றிற்கொன்று முரண்படுவதினுலேயே இத்தகைய சில்லரைச் சச்சரவுகள் அடிக்கடி ஏற்பட்டு வந்திருக்கின்றன.

ஸெர்வியாவிற்கு இந்த ஜாதியபிமானமும் ஸ்வ யேச்சையும் சிலகாலமாகத்தான் ஏற்பட்டுள்ளன என்று சிலர் கூறுகிருர்கள். ஆனுல் இந்த எண்ணங்கள் நூதனமானவையல்ல. நாம் முன்னே கூறியபடி ஸெர்வியா ஸுமார் இருநூறு வருஷங்களுக்கு முந்தியே டர்க்கியை எதிர்த்து வெற்றிபெற்ற காலமுதற்கொண்டு தான் ஒரு பரப்பமைந்த ஸ்வாதீன ஸ்லாவோனிய ராஜ்ய அரசாட்சியை ஏற்படுத்தி தலைமைவஹிக்க வேண்டுமென்னும் பேராவல் கொண்டுள்ளது. அடிக்கடி டர்க்கியுடனும் ஆஸ்ட்ரியாவுடனும் சச்சரவுகள் நேரிட்டதற்கிதுவே தகுந்த முகாந்திரமாகும். இச் சிறு நாடுகளில் வஸிக்கும் பிரஜைகள் பயிரிடுங் குடிகளேயாயினும், பன்றிமேய்க்கும் பேதையர்களே யாயினும், கபடற்ற கசடர்களேயாயினும், வீரதீரத்திலும், புஜபலபராக்கிரமத்திலும், விடாமுயற்சியிலும் மற்றெந்த நாட்டாரினும் பின்னடைந்தவர்களில்லை. இவர்களது மனேபாவங்களை ஆஸ்ட்ரியரும் அறியாமற் போகவில்லை. 1878-ம் வூஷத்தில் நடந்த ரஷிய டர்க்கியுத்தத்தில் ஸெர்வியாவை ஆஸ்ட்ரியா பயமுறுத்தியது. ஸெர்வியா தீரத்துடன் டர்க்கியின்மேல் வெற்றியடைந்து ஸ்வாதிபத்யம் அடைந்தது. ஆயினும் ஊனம் ஒன்று அப்பொழுது ஏற்பட்டது. தான்

## யுத்தமூலம் : பால்கன் தீபகல்பம்

அப்போரில் ஸம்பந்தப்படாதிருந்ததற்காக பாஸ்னியா ஹெர்ஸிகோவினு இவைகளைத் தம் வசம் விடும்படி ஆஸ்ட்ரியா கேட்க, அந்த சிறு ஸ்லாவோனிய நாடுகளும் அதன் பார்வைக்குக்கீழ் வந்து சேர்ந்தன. அக்காலமுதற்கொண்டு ஸெர்வியாவில் அனேக குழப்பங்கள் நிகழ்ந்து வந்திருக்கின்றன. ஆஸ்ட்ரியாவும் ரஷியாவும் தம்தம் ஹோதாக்கள் ஸெர்வியாவில் ஏற்படவேண்டுமென்று முயன்றுவந்தன. ஒருமுறை, ஸெர்விய நாட்டரசன் ஆஸ்ட்ரியாவிற்கு அனுகூலமாயிருக்கிறுனென்று ஜனங்கள் உணர்ந்து அவனையும் அவன் மனைவியையும் படுகொலைசெய்துவிட, ஐரோப்பாமுழுமையும் அதன் மீதுள்ள வெறுப்பைக்காட்டிற்று. கடைசியில் அரசகுடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் பாரிஸில் இருப்பதாகத் தெரிந்து அவரை வரவழைத்து தம் ராஜ்யத்தின் அரசனுக முடிசூட்டினுர்கள். அவர்தான் பீடர் என்பவர். இம்மாதிரி ஸெர்வியாவிலேயே எத்தனையோ குழப்பங்கள் ஏற்பட்டிருக்கின்றன. எது எப்படியிருந்தபோதிலும் பாஸ்னியாமுதலிய நாடுகளை ஒன்று சேர்க்கவேண்டும் என்னும் எண்ணத்தைமாத்திரம் ஸெர்வியா மறக்கவில்லை. இவ்வெண்ணமானது ஆஸ்ட்ரியா பார்வையிலுள்ள இரண்டு சிறு நாடுகள் ஆஸ்ட்ரியாவின் மீது காட்டிவரும் வெறுப்புக்குக் காரணமாக அதிகப்பட்டுக் கொண்டே வந்தது.

ஆஸ்ட்ரியா எவ்வளவு தூரம் இந்நாடுகளுக்கு நன்மைபுரிந்து வந்தபோதிலும் அவைகள் திருப்தியடையவில்லை. அந்நாடுகள் ஆஸ்ட்ரியாவின்கீழ் வரு

தற்கு முன்னே மிக்க தாழ்ந்த நிலைமையில் இருந்தன. எங்குபார்த்தாலும் கொலை, களவு, சூது முதலானவை குடிகொண்டிருந்தன. நியாயம் என்பதே கிடையாது. குற்றவாளிகள் தண்டிக்கப்படாததால் பெருங்கொள்ளைகளுக்கும், உயிர், பொருள் இவைகள் சேதத்திற்கும் இடமேற்பட்டிருந்தது. குடியானவர்கள் எஜமானன் கேட்ட தொகையைக் கொடுக்கவேண்டியிருந்தது. நாகரிகமென்பதே சிறிதுமற்றிருந்தது. ஆஸ்ட்ரியரின் கீழ் இந்நாடுகள் வந்ததும் சட்டமென்ன, ஒழுங்கென்ன, கைத்தொழில்கள் என்ன, இவையெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாய் ஏற்பட்டன. வியாபார வசதிகள் உண்டாக்கப்பட்டன. அழகிய நகரங்களும், பாடசாலைகளும் கட்டப்பட்டன. கிருஷிகர்கள் பயிர்த்தொழிலில் அபிவிருத்தியடையும்படியான வழிகள் செய்துகொடுக்கப்பட்டன. இம்மாதிரி அனேகவகை நன்மைகள் ஏற்பட்டும் ஆஸ்ட்ரியாவின் மீதுள்ள அதிருப்தி மட்டும் நீங்கவில்லை. காரணமென்ன? வெறும் வெளிவேஷத்தால் மனிதர் திருப்தியடைவார்களா? இந்நாட்டு ஜனங்கள் ஆஸ்ட்ரியாவின்கீழ் வந்தபிறகு முன்னிலும் பன்மடங்கதிகமான கஷ்டங்களை யனுபவிப்பதாகவும் ஆஸ்ட்ரியா தங்களை நடுவுநிலைமையாக நடத்துவதில்லையென்றும் மதவிஷயத்தில் மிக்க கொடுமையாயிருப்பதாயும் ஹேக் நகரத்தில் உள்ள ஸமாதான ஸங்கத்திற்குத் தெரிவித்தார்கள். மேலுக்குமாத்திரம் உத்யோகஸ்தர்கள் நாட்டுப்ரஜைகளிலிருந்தே தெரிந்தெடுத்தவர்கள் என்றாலும் பெரும்பான்மையோர் அந்நியர்கள் தாம்; இவர்கள் ஜனங்களைக் குரூரமாய் நடத்திவந்த

தற்கு எல்லை என்பது கிடையாது; இவர்கள் விஷயத்தில் நியாயம் என்பது நசித்துப்போய்விட்டது. இந்த நாடுகளின் இனத்தார்கள் உள்ள மான்டிநீக்ரோ, ஸெர்வியா நாடுகளுக்குக் கடிதங்கள் எழுதுவதுகூட நிறுத்தப்பட்டது. இப்படி பலவிதங்களாய் உபத்திரவங்களுக்குட்படவும் இந்நாட்டார் ஓர் ஐரோப்பிய கமிஷன் ஏற்படுத்தி விஷயங்களை விசாரிக்க வேண்டும் என்று கோரினார்கள். ஆஸ்ட்ரியநாட்டார் சிறிதும் ஈவு இரக்கமின்றி தம் பார்வையின்கீழ், பாதுகாப்பின்கீழ் உள்ள இந்நாடுகளைத்தமக்குச்சொந்தமானவைகளாவே சேர்த்துக்கொண்டார்கள். இந்தவிஷயம் 1909 வருஷத்தில் நடந்தது. இவைகளைக் கவனித்துவந்த ஸெர்வியருக்கு ஆஸ்ட்ரியா செய்த அதிக்ரமத்தைக்கண்டு பொறுக்க முடியவில்லை. அவர்கள் மனக்கொதிப்பும், வீராவேசமும், ஜாதியபிமானமும் குமுறிக்கொண்டேவந்தன. ஸெர்ப்ஜாதியார் எல்லாரும் எவ்வளவு தேசாபிமானம், பாஷாபிமானம், ஸ்வஜாதியபிமானம் உள்ளவர்கள் என்பது உலகிற்கு முன்னரே தெரிந்திருந்தபோதினும்— ஆஸ்ட்ரிய அரசாங்கத்தார் கண்மூடித்தனமாய் அதை அறியாதிருந்தபோதினும்—ஆஸ்ட்ரிய அதிக்ரமம் நிகழ்ந்தபோதுதான் அதுவரையில் குமுறியிருந்த தணல் திடீரென பற்றத்தொடங்கி கொழுந்துவிட்டெரியலாயிற்று. ஸ்லாவ் நாடுகள் எல்லாவற்றிலும் தம் ஜாதியர் ஸ்வயேச்சையடைந்து தனிராஜ்யத்தை யுடையவர்கள் ஆகவேண்டும் என்ற ஒரே எண்ணம் பரவியிருந்தது. இதை முடிக்கவேண்டியதற்கு எங்கெந்த ஸாதனங்கள்வேண்டுமோ அவைகளைக் கைப்பற்றி வந்தார்

கள். தம் இனத்தாருக்கு எப்பொழுதும் அனுதாபம் காட்டிவந்தவர்கள் அவர்களுக்கு உதவியாய் வருவதற்கு வேண்டிய முயற்சிகளையும் செய்தார்கள். முன்னமேயே ஏற்கனவே இப்போர் நிகழ்ந்திருக்க வேண்டியது; தவறிக் கொஞ்சகாலம் தள்ளிவந்தது. ஸெர்வியாவிலுள்ள உத்யோகஸ்தர்கள்முதல் பஹிரங்கமாய் பாஸ்னியாமுதலிய நாடுகளில் உள்ளவர்களுக்கு அனுதாபங் காட்டிவந்தார்கள். தவிர, எங்கும் ஆஸ்ட்ரியாவின்மீது த்வேஷம் உண்டாகும்படி ரஹஸ்யமாய்த் தூண்டினார்கள். இதன் காரியம்தான் ஸாரஜீவோவில் நடந்த படுகொலை. எப்பொழுது ஸெர்வியாவை அடக்கிவிட ஸமயம் கிட்டும் என்று காத்திருந்த ஆஸ்ட்ரியாவுக்குச் சாக்குக் கிடைத்துவிட்டது. ஒன்றன்பின் ஒன்றாய் ஸம்பவங்கள் தட்டுதடையின்றி நிகழ்ந்துகொண்டே வந்தன. போரும் தொடங்கலாயிற்று. மற்ற ஐரோப்பிய வல்லரசுகளும் இதில் கைகலக்கக் காலமும் கிட்டியது. ஆஸ்ட்ரிய ஸெர்விய யுத்தத்தில் ஜெர்மனியும் ரஷியாவும் சேரவேண்டியது நியாயமல்லவா? ப்ரிட்டனைப்பற்றி என்ன? அதுவும் இக்குழப்பத்தில் புகவேண்டிய காரணம் என்ன?



# இரண்டாம் அதிகாரம்

## யுத்தமூலம் : மேல் ஐரோப்பிய நாடேகள்

ஆஸ்ட்ரியாவுக்கும் ஸெர்வியாவுக்கும் உண்டான சண்டையில் ஜர்மனியும் மற்றுமுள்ள ஐரோப்பிய வல்லரசுகளும் தலையிட்டுக்கொள்ளக் காரணமென்ன ? ஆங்கிலேயரும் ஜர்மானியரும் ஒரேஜாதியான ட்யூடன் வகுப்பினர். ப்ரஞ்சுக்காரர் லாடின் வகுப்பினர். ரஷ்யர்கள் ஸ்லாவ் வகுப்பினர்கள். ஸ்லாவ் ஜாதியாரும், ட்யூடன் ஜாதியாரும் தங்களுக்குள்ள மனஸ்தாபங்களை தீர்த்துக்கொள்ளவேண்டியிருக்க, ட்யூடன் ஜாதியாரில் இனத்தார்களுக்குள்ளும் இன்னும் மற்று வேறு சில ஜாதியாருக்கும் போர் நிகழவேண்டிய முகாந்திரங்கள் யாவை ? ஐரோப்பிய தேசங்களின் சரித்திரத்தைப் படிப்பவர்கள் எக்காலத்தும் இங்கிலாந்து பெரும்பான்மையாய் ப்ரான்ஸுடன் பகைமை பாராட்டுவதையும், ஜர்மனியுடன் நட்புரிமைகொண்டாடுவதையும், ரஷ்யாவுடன் நேசமின்மையையும் ஸாதாரணமாய்க் கண்டிருக்கலாம். அப்படியிருக்க, இந்த மஹாயுத்தத்தில் ஸாதாரணமாய் நட்புரிமை பாராட்டவேண்டியவர்கள் பகைவர்களாகவும், எதிரிகளாக இருக்கவேண்டியவர்கள் துணைவர்களாகவும் இம்மாதிரி விபரீதமான பிரிவினைகள் ஏற்பட்டிருப்பானேன் ? இதன் உண்மையை அறிதல் மிகவும் அருமையல்ல. அடிமுதற்கொண்டு ஐரோப்பிய தேசசரித்திரங்களைச் சற்று ஆழ்ந்து ஆராய்ந்தால் இப்பொழுது ஏற்பட்டிருக்கும் வியவகாரங்கள் வெளியாகுப்

# ஐரோப்பிய மஹா யுத்தம்

முற்காலத்தில் நாகரிகம் முதிர்ந்த ராஜ்யங்களில் ஐரோப்பாவில் க்ரீஸ், ரோம் இவைகள்தாம் பேர்பெற்றவை. இவைகளில் ரோமாபுரி மத்யதரைக்கடற்கரையிலுள்ள நாடுகளை எல்லாம் ஜயித்து வெகுதூரம் தன் ஆட்சியைச் செலுத்தி வந்தது. சுமார் கி. பி. 300-ம் வருஷத்தில் இந்தப்பெரிய ராஜ்யத்திற்கு, ரய்ன், டான்யூப் என்னும் இரண்டுநதிகள் வடக்கு எல்லைகளாக இருந்தன. ரய்ன் நதிக்குக் கிழக்கிலும் டான்யூப் நதிக்கு வடக்கிலும் உள்ள ப்ரதேசங்களில் ட்யூடன் ஜாதியார்—அதாவது ஜர்மானியரும், இவர்களுக்குக் கிழக்கேயுள்ள ப்ரதேசங்களில் ஸ்லாவ் ஜாதியாரும் குடியேறியிருந்தார்கள். சிலகாலத்திற்குப் பிறகு, இந்த ட்யூடன் ஜாதியார் ரோமன் ராஜ்யத்தில் உட்புகுந்து வெற்றிபெற்று குடியேறினார்கள். இந்தப்போக்கில், ரோமன் ராஜ்யமாயிருந்த இங்கிலாந்தில் குடியேறின சில ட்யூடன் வகுப்பினரே இங்கிலீஷ் ஜாதியாராவர். ட்யூடன் ஜாதியார் தாங்கள் முதலில் வஸித்திருந்த இடங்களை விட்டு மேற்கே வரவே அவர்களுக்குக் கிழக்கிலிருந்த ஸ்லாவ் ஜாதியாரும் இடம் விட்டுப் பெயர்ந்தார்கள். இப்படி வந்தவர்களில் பால்கன் தீபகல்பத்தில் வந்து சேர்ந்த ஸெர்வியர்களே முக்யமானவர்கள். அநேக நூற்றாண்டுகளாய் ஐரோப்பாவில் உண்டான யுத்தங்கள் எல்லாம் இம்மாதிரி இடம்விட்டுப் பெயர்ந்த ட்யூடன், ஸ்லாவ் லாடின் ஜாதியாருக்குள் உண்டான கலக நிகழ்ச்சியென்றே கருதவேண்டும். ஆஸ்ட்ரியாவும் ஜெர்மனியும் ஒரு கட்சியிலும் ஸெர்வியா, ரஷியாமுதலிய ஸ்லாவ் நாடுகள் எதிர்க்கட்சியி

னும் இருப்பது ஜாதி யபிமானத்தால் என்று முன்னமே கூறியுள்ளோமல்லவா ?

நிற்க, ஸுமார் பன்னிரண்டு நூற்றுண்டுகளுக்கு முன் ஐரோப்பாவின் மேல்பாகத்தில் உள்ள தேசங்களை யெல்லாம் தன் குடைக்கீழ் கொண்டுவந்து வெகு நடுவுநிலைமையுடன் ஆண்டுவந்த ஷார்லிமேன் என்னும் மஹாவீரன் ரோமன் ராஜ்யம் அழிந்துபோகும் தறுவாயில் அதைப் பரிபாலித்து ஏகசக்ராதிபதியாய் விளங்கிவந்தான். ஆனாலும் அது நீடித்து நிற்கவில்லை. அம்மன்னன் காலத்திற்குப் பிறகு அப்பெரிய ராஜ்யமானது சிறு பிரிவுகளாகப் பிரிந்துவிட்டது. அவைகளில் முக்கியமானவை மூன்று. அவையாவன: ரய்ன் நதிக்குக் கிழக்கிலுள்ள ஜெர்மானிய நாடு; அந்நதிக்கு மேற்கிலுள்ள ப்ரான்ஸ்தேசம்; இவை இரண்டிற்கும் மத்தியில் நீண்டகுறுகலான ஒரு துண்டு ப்ரதேசம். இம்மூன்று பிரிவுகளில் ஒவ்வொன்றும் ஷார்லிமேன் என்று நாம் கூறிய மன்னனின் பேரப்பிள்ளைகளுக்குக் கிடைத்தன. இவர்களின் ஸந்ததியாருக்குள் மேற் குறித்த மத்ய ப்ரதேசத்தைப்பற்றி இடைவிடாத சச்சரவுகள் ஏற்பட்டன. ஒன்றுயிருந்த இந்த மத்ய ப்ரதேசம் காலக்கிரமத்தில் இன்னும் சிறு பிரிவுகளாகப் பிரிந்துவிட்டது. இப்பிரிவுகள் தாம் இடலி, பர்கண்டி, வடக்கே ரய்னதிக்கும் ப்ரான்ஸுக்கும்மத்தியிலுள்ள ஆல்ஸேஸ் லோரேய்ன் என்பவைகள். இந்த மத்யபாகம் செழிப்பானதாயிருந்ததாலும் இரு வல்லரசுகள் இடையில் இருந்ததாலும் ஜெர்மனிக்கும் ப்ரான்ஸுக்கும் அடிக்கடி யுத்தத்தை மூட்டத்தக்க

காரணமாயிருந்தது. இருதேசங்களுக்கு நடுவில் ஒரு செழிப்பான தேசம் இருந்தால் இருதேசத்தாரும் அதை அடைய விரும்புவது ஸகஜம்தானே?

இந்த இரண்டு பெரிய ராஜ்யங்களாகிய ப்ரான்ஸ், ஜெர்மனி இவைகளில் ஜெர்மனி பலகாரணங்களைக் கொண்டு மிக்க தாழ்மையடைந்து பலம்குன்றி சிறு சிற்றரசுகளாகப் பிரிவுபட்டது. தான் ஆண்டுவந்த மத்யராஜ்யத்தின் பாகமான இடலியைக்கூட இழந்து விடும்படி அதற்குக் காலம் வந்துவிட்டது. ப்ரான்ஸ் தேசமோ பலத்தை இழந்துவிடாமல் வரவர அபி விருத்தியடைந்து வந்தது. அநேக அரசர்கள் தங்கள் புஜபல பராக்கிரமங்களினால் அதன் எல்லையை விசாலப்படுத்தி வெற்றியை எங்கும் பரவச்செய்து மத்ய நாட்டில் ப்ரஞ்சுபாஷை பேசும் ஜனங்களிருக்கும் பாகத்தை எல்லாம் கட்டியாளத் தொடங்கினார்கள். இம்மாதிரி மத்ய தேசத்தில் சிலபாகங்களை இழந்து விடவே ஜெர்மானியர் மறுபடியும் கிழக்கே திரும்பி வெற்றியடைந்து, பின்னால், ஆஸ்ட்ரியா, கீழ் ப்ரஷியா முதலியநாடுகளைக் கைப்பற்றினார்கள். இவ்வளவு வெற்றியடைந்தபோதிலும், ஸ்லாவ் ஜாதியாரால் ஸ்தாபிக்கப்பட்டுள்ள போலண்ட், போஹிமியா முதலிய நாடுகளின் வல்லமையின் முன், இவர்கள் ஜயம் செல்லவில்லை. எது எப்படி இருந்தபோதிலும் தனக்கு வேண்டும் என்று மிக்க ஆவலுடன் விரும்பிய செழித்த மத்யதேசம் ஜெர்மனிக்குக் கிடைக்கவில்லை. இது இப்படி இருக்க, இன்னம் சிறிது காலம் கழித்து, ப்ரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் ஏதாவது பகைமை உண்

டோவென்று கவனித்தோமானால் இங்கு மறுபடியும் ராஜ்ய வ்யவஹாரங்களை முன்னுக்கு வருகின்றன. முன்னமே நாம் சொல்லியபடி எல்லா விதங்களிலும் ஒற்றுமையைப் பெற்றுவந்ததும் மஹாபுகழ்பெற்ற மன்னர்களால் ஆளப்பட்டு வந்ததுமான ப்ரான்ஸ் தேசம், நாளுக்கு நாள் விருத்தியடையஅடைய அதன் அரசர்களின் ஆசையும் அதிகரித்து அவர்கள் அந்நியதேசங்களையும் கைப்பற்ற எண்ணங்கொண்டனர். அதே மாதிரி 1494-ம் வருஷத்தில் எட்டாம் சார்லஸ் என்பவன் இடலியின்மீது படையெடுத்தான். அக்காலத்தில் இடலியின்பாகங்களில் சில ஸ்பெய்ன் தேசத்தரசனுக்குச் சேர்ந்தவையாயிருந்தன. ஸ்பெய்ன்தேசத் தரசன் ஆஸ்ட்ரியநாட்டுக் கரசனாயும் ஜெர்மனிய சக்கரவர்த்தியாயும் இருந்துவந்தான். தவிரவும் ஐரோப்பாவிலுள்ள முக்ய ராஜ்யங்களுடன் ஸம்பந்தம் செய்ததனால் வட கடற்கரையிலுள்ள நெதர்லண்ட்ஸ் (ஹாலந்து, பெல்ஜியம்), நேபில்ஸ், ஹங்கரி முதலிய பலநாடுகளுக்கு அதிபதியாகவும் விளங்கினான். ஆஸ்ட்ரிய நாடுகளும், ஸ்பெய்ன்தேசமும் வெவ்வேறு வர்க்கத்தையடைந்த போதிலும் அச்சந்ததியாரின் இருவர்க்கமும் ஒரே மனத்தையுடையனவாய் ப்ரான்ஸுக்கு எங்கும் இடங் கொடாமல் சச்சரவு நிகழ்த்திக்கொண்டே வந்தன. ஆகவே பிற்காலத்திலும் முன்காலத்தைப்போலவே ப்ரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் சண்டைசச்சரவுகள் இல்லாமற்போகவில்லை. இவைகளுக்கு வெளிப்படையான காரணம், சிறு துண்டு ப்ரதேசமாகிய ரய்ன் நதிதீரநாடுகளே. இவைகள் ப்ரஞ்சுபேசும் ஜனங்க

ளாலும், பரஞ்சு நடையுடை பாவனைகளை அவலம பிப்பவர்களாலும் ஆனால் ஜர்மானிய ஜாதியரைச் சேர்ந்தவர்களாலும் குடியேறப்பெற்றுள்ளது என்றும் ஞாமறியவேண்டும். இவைதவிர நெதர்லண்ட்ஸ் என்ற முன்சொன்ன ப்ரதேசம் ஸ்பெய்ன்—ஜர்மானிய அரச குடும்பத்திற்குச் சேர்ந்ததாய் இருந்தது. ஐரோப்பா வில் பதினாறும் நூற்றாண்டில் உண்டான கிறிஸ்தவ மதக்குழப்பத்தில் நெதர்லண்ட்ஸின் ஒரு பாகமாகிய ஹாலெண்ட், ஸ்பெய்ன் ஆதிபத்யத்தினின்றும் நீங்கி அதனுடன் போர்புரிந்து ஸ்வாதிபத்யம் பெற்றது. ஆனால் ஹாலண்டுக்குத் தெற்கிலிருக்கும் மற்றொரு பாகமான பெல்ஜியம் என்னும் நாடு ஸ்பானிய ஆட்சியி லேயே இருந்துவந்தது. இன்னொரு விஷயம். ஹா லண்ட் ஜெர்மனியைப் போல ப்ராடெஸ்டண்ட் என் னும் கிறிஸ்தவப் பகுதியைச்சேர்ந்தது. பெல்ஜியமோ ஸ்பெய்ன், ப்ரான்ஸ் இவைகளைப்போல ரோமன் கத் தோலிக் பிரிவினையைச் சேர்ந்தது. ப்ரான்ஸ், கத் தோலிக் மதத்தைச் சேர்ந்தாலும் தன் காரியார்த்த மாய் ஜெர்மனியுடன் சேர்ந்து மதவிஷயமான யுத் தங்களில் ப்ரவேசித்து கடைசியில் நாம் முன்சொன்ன மத்ய ப்ரதேசத்தின் பாகங்களைப் பெற்றது. ஆனா லும் ஆல்ஸேஸ்—லோரேய்ன் முதலிய நாடுகள்மட்டும் ப்ரான்ஸின் வசத்திலேயே வெகுநாள் இருந்தன. இவைகளை ஜெர்மானியர் 1870-வருஷத்தில் உண்டான யுத்தத்தில் ப்ரான்ஸினிடமிருந்து பிடுங்கிக்கொண்டு விட்டார்கள். ஆல்ஸேஸ்—லோரேய்ன் நாட்டார் ஏறக் குறைய எல்லாரும் ஜெர்மானியரே யாயினும் ப்ரஞ்

சுக்கு அனுகுணமானவர்கள் என்று கூறியுள்ளோமல்லவா? இப்படி அவர்கள் அபகரித்தது அந்நாட்டுக் குடிகளுக்காவது ப்ரான்ஸ்தேசத்தாருக்காவது சற்றேனும் பிடிக்கவில்லை. மஹாப்ரக்யாதிபெற்ற ப்ரஞ்சுவீரனான நெப்போலியன் காலத்திலும் ப்ரஞ்சுராஜ்யம் ரய்ன்நதிக்கரை வரையில் எட்டியிருந்தது. இம்மாதிரி எக்காலத்தும், நாம் சரித்திரமூலமாய் அறிகிறவரையில், ப்ரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் உண்டான போர்கள் எல்லாம் நில விஷயமாகவே இருந்ததாக ஏற்படுகிறது. இம்மாதிரி ப்ரான்ஸின் பலம் அதிகப்பட்டுக் கொண்டு வரவே இங்கிலாந்து முதலிய தேசங்களுக்கு மிகுந்த திகில் உண்டாயிற்று. ப்ரான்ஸின் பெருமையையும் கொழுப்பையும் அடக்க வேண்டுமென்று அக்காலத்தில் இங்கிலாந்தும் ப்ரஷியாமுதலிய ஜெர்மானிய நாடுகளும் முயற்சிசெய்தன. ஐரோப்பா முழுமையும் திக்விஜயம் செய்து ஜயபேரிகை அறைந்துவந்த நெப்போலியன் யுத்தத்தில் ஆங்கிலேயரால் வாடர்லூ என்னுமிடத்தில் 1815-ஆம் வருஷத்தில் முறியடிக்கப்பட்டு ஐரோப்பிய நாடுகளின் க்ஷேமம் நிலைநிறுத்தப்பட்ட காலத்தில் அதே வருஷத்தில் ஐரோப்பிய தேசங்களில் ஒவ்வொன்றிலுமிருந்தும் ப்ரதிநிதிகள் ஆஸ்ட்ரியாவின் தலைநகராகிய வியன்னுவில் ஒன்றுகூடி எல்லா தேச நடவடிக்கைகளைப்பற்றியும் பேசி சிலதீர்மானங்கள் செய்தார்கள். இந்தத் தீர்மானங்களின் முக்கிய கருத்தென்னவென்றால் ஒரு நாடு மற்றொரு நாட்டைவிட பெரிதாக இருப்பதால் பலப்பட்டு சிறுநாடுகளின் மீது படையெடுத்து அந்நாடுகளை சேர்த்துக்கொள்ள

வழியில்லாமல் செய்யவேண்டு மென்பதேயாம். அவை களில் சில நமக்கு அவசியம்தெரியவேண்டியவை. சிறு ராஜ்யமாய் இருந்து விருத்தியடையும் வழிகளை நாடி ச்ரமப்பட்டுக் கொண்டிருக்கும் ப்ரஷியநாட்டிற்குப் பெரிய ஜெர்மானிய ப்ரதேசங்கள் கொடுக்கப்பட்டன. இதுமுதல் ப்ரஷியதேசம் வரவர உருவத்திலும் பெரு மையிலும் அதிகப்பட்டுக் கொண்டேவந்தது. ஆஸ்ட் ரிய தேசாதிபத்யத்தைச் சேர்ந்ததாயிருந்த பெல்ஜிய தேசம் அதனிடத்திலிருந்து நீக்கப்பட்டு ஹாலண்டு டன் ஐக்யமடைந்து நெதர்லண்ட்ஸ் என்னும் ராஜ்ய மாய் மாறிவிட்டது. இந்த ராஜ்யம் ஏற்பட்டபிறகு ப்ரான்ஸ்—நெப்போலியன் நீழ்—மற்ற ராஜ்யங்களின் மீது படையெடுத்ததுபோல எடுக்கவொட்டாமல் தடுத்துவிடும் என்று எண்ணினார்கள். இவ்வண்ணம் செய்த ஏற்பாடுகளின் பலாபலன்கள் என்னவென்று சற்றுகவனிப்போம். முற்கூறியபடி வாடர்லூ யுத்தத் திற்குப்பின் ப்ரான்ஸின்பலம் குறையத்தொடங்கினது. மற்ற ராஜ்யங்களின்பலம் ஸமப்படுத்தப்பட்டது. ப்ர ஷியாவின் பலம் விருத்தியடைந்தது. நெப்போலியன் திக்விஜய காலத்திலேயே அனேக நன்மைகள் ப்ரஷி யாவுக்கு அவனையுமறியாமல் செய்துவிட நேரிட்டது. எப்படியெனில் அனேக சிறுராஜ்யங்கள் நசித்துப்போ யின; இன்னம் சில சிற்றரசுகள் இவன் அதிகாரத்தை அங்கீகரித்தன. சில பட்டணங்கள் இவன் ராஜ்யத்தில் சேர்க்கப்பட்டன. இம்மாதிரி ஜெர்மனியில் உள்ள ப்ரதேசங்கள் எல்லாம் நெப்போலியனுடைய ராஜ்யத் திற்குப் பிறகு வியன்னு மஹாஸபையின் நடவடிக்கை

களின்படி ப்ரஷியாவின் பலத்தை அதிகரிக்க வந்து சேர்ந்தன. இவைகளுக்குள் முழு ஒற்றுமையில்லா மற் போனபோதிலும் ஒருவித ஸ்வேச்சையையு டைய ஐக்கிய நாடுகளாக மாறுதல் அடைந்தன. ஆக வே ஜெர்மனியும் தினேதினே ஒற்றுமையைப்பெறும் வழியை நாடிக்கொண்டேயிருந்தது. வியன்னு காங் கிரஸில் நடந்த மற்றொரு விஷயம் நெதர்லண்ட்ஸ் என்னும் ராஜ்யத்தை உண்டாக்கினது என்று குறிப் பிட்டிருக்கிறது. இம்மாதிரி யுண்டான ராஜ்யம் நீடி த்து நிலைக்கவில்லை. ஹாலண்டில் உள்ளவர்கள் ப்ராடெ ஸ்டண்ட் மதத்தவர்கள். பெல்ஜியத்தில் உள்ளவர்க ளோ ரோமன்காதலிக் மதத்தைத்தழுவியவர்கள். இப் படி யனேக வித்யாஸங்கள் இவர்களுக்குள் இருந்தன. இவைகளையெல்லாம் முன்னிட்டு இந்த இரண்டு நாடுக ளும் ஐக்கியமான ஒரு ராஜ்யமாக இருக்கமுடியாமல் 1830-ம்வருஷத்தில் பெல்ஜியர் கலகம் விளைவித்து சிலர் தம் ஸ்வயாதிகாரத்தை அபேக்ஷித்தார்கள்; சிலர் கலோ லிக் தேசமான ப்ரான்ஸோடு சேர்ந்திருக்கலாம் என்றார் கள். ஆனால் இப்படி ப்ரான்ஸுடன் பெல்ஜியம் சேர்ந் திருக்குமானால் மறுபடியும் ப்ரான்ஸ் மற்ற ராஜ்யத் தைவிட பலப்பட்டு அப்பொழுதே ஒருபெரிய ஐரோப் பிய யுத்தம் நடந்திருக்கவேண்டும். இதை யோசித்துத் தான் மற்ற ராஜ்யத்தார்கள் மறுபடியும் ஒரு ஏற்பாடு செய்தார்கள். பெல்ஜியம் ஒரு தனி யரசாகவேண்டு மென்றும், எப்பொழுதும் அது சாச்வதமான நடுவு நிலைமையுள்ள ராஜ்யமாயிருக்கவேண்டுமென்றும் அத் தகைய ராஜ்யமென்று ஐரோப்பிய வல்லரசுகள் எல்

லாம் அதை அங்கீகரித்து அதன்படி நடக்கவேண்டு மென்று ஓர் உடன்படிக்கை நடந்தது. ப்ரஷ்யாவும் அந்த உடன்படிக்கையை ஒத்துக்கொண்டு அதன்படி நடந்துவந்தது. அதுமுதற்கொண்டு தற்காலம் இந்த வருஷத்தில் ஐரோப்பிய மஹாயுத்தம் தொடங்கும் வரையில் அந்த உடன்படிக்கையை ஒருவரும் மீற வில்லை. 1870-ம்வருஷத்தில் ப்ரான்ஸுக்கும் ஜெர்ம னிக்கும் ஒரு யுத்தம் நடந்தது. அதில்கூட அத்துமீறி நடப்பதில்லையென்று இருதிறத்தாரும்கூறி அதன்படி நடந்தார்கள். ஆனால் எல்லோரும் எப்பொழுது ஜெர் மானியர் தங்கள் உறுதிமொழியைப் பாழாக்கி விடு வார்களோ* என்றிருந்தார்கள். அதற்கேற்ப தற்காலம் அவர்கள் நடந்துகொண்டுவிட்டார்கள்.

ஐரோப்பிய மேல்நாடுகளைப்பற்றிய அரசாங்க விஷயங்களை இன்னம் சற்று தீரவிசாரித்தால் இப் பெரிய யுத்தம் யாதொரு காரணமுமின்றி தனியே உண்டாகவில்லையென்பது வெளியாகும். ஆட்ஸ்ரியா வும் ப்ரஷ்யாவும் ஒரேவர்க்கத்தைச் சேர்ந்த ராஜ்யங்க ளாயினும் இரண்டிற்கும் பத்தொன்பதாம் நூற்றாண் டின் மத்யகாலத்தில் அநேக போட்டாபோட்டிகள் உண்டாயின. ஆஸ்ட்ரியாவுக்கு இடலியில் உள்ள ப்ரதேசங்கள் எல்லாம் அதன் ஆதிபத்யத்தினின் றும் நீங்கி ஸார்டினியாவின் அரசனை விக்டர் எம்மா

* ப்ரான்ஸும் ஜெர்மனியும் ஒருவர் நாட்டிற்குள் ஒரு வர் படையெடுத்துச் செல்லவேண்டுமென்றால் நடுவிலிருக் கும் இந்த பெல்ஜியநாட்டின் வழியாய்த்தான் போகவேண் டும். இந்த இரண்டு நாட்டிற்குமுள்ள வேறு மத்ய இடங் கள் மலைப்ரதேசங்கள், யுத்தத்திற்கு உபயோகப்படா.

னுயல மன்னனை யடைந்தன. இந்த ஸந்தாபபத்தில இடலிக்கு உதவிசெய்ய ப்ரான்ஸ் முன்வந்தது. ஆகவே ஆஸ்ட்ரியாவின் பலம் சற்று க்ஷீணித்தது. இந்த ஸந் தர்ப்பத்திலேயே தான் ஐரோப்பா என்றும் கண்டிராத மஹா ராஜ்ய தந்த்ர நிபுணரான ஆட்டோ வான் பிஸ் மார்க் ஜெர்மனிதேச மந்திரி யென்ற உச்சஸ்தா னத்தை வஹித்தது. இப்புண்யபுருஷர் செய்த காரியங் கள் விருத்தியைபடையவேதான் ஜெர்மானியர் முதன் மை பெற்றார்கள். ஐரோப்பியநாடுகளில், இவருடைய முயற்சியினுல்தான் ஜெர்மானிய ராஜ்யம் எங்கும், எல் லாவிதத்திலும் ஒழுங்கும் ஒற்றுமையும் பொருந்திய ஜெர்மானிய மஹாதேசம் ஜனித்தது. அரசாங்கம் அபிவிருத்தியடைய வேண்டும்; ப்ரஷ்யா முதன்மை யடையவேண்டும் என்னும் நோக்கங்களையே மனதில் கொண்டு வேலைசெய்தார். அவர் முன்னிலையில் நிற் பதற்குக் கூட பகைவரும் அஞ்சுவார்கள். ஒழுங்கு என்பதன் அவதாரமென்றே அவரைச் சொல்லலாம். இவ்வொழுங்கையே மஹா மந்த்ரமாகக் கொண்டு ஜெர்மனியின் செல்வாக்கைப் பரிபாலிக்க மிகவும் முயன்றார். ஜெர்மனி விருத்தியடைய வேண்டு மானுல் வேறு ராஜ்யங்கள் தலை எடுக்கக்கூடாது என்பது அவருடைய எண்ணம். அதற்கேற்ப அந்தந்த ராஜ்யங்களோடு தன்னரிய ராஜ்ய தந்திரங் களை உபயோகப்படுத்திவந்தார். தனக்குக் காரியத்தை ஸாதிக்க வெறும் சாதுர்யம் மட்டும் போதாதென்று நூதனவகையான ஏற்பாடுகள் ராணுவவிஷயங்களில் செய்து வந்தார். தன் ராணுவபலத்தால் மட்டும் மற்ற

ராஜ்யங்களைக் கவரமுடியாதென்று மற்ற தேசங்களைத் தனக்கு உதவும்படி செய்து, பிறகு தன்காரியம் முடிந்தவுடன் தனக்கு உதவிசெய்த ராஜ்யங்களுக்கே உலை வைத்து அவைகளையும் நாசமடையச்செய்தார். ஜெர்மனிக்கு வடக்கேயுள்ள ஷேல்ஸ்விக் ஹோல்ஸ்டீய்ன் என்னும் பூஸந்தி தேசத்தை அபகரிக்க எண்ணி ஆஸ்ட்ரியாவைத் துணைக்கழைத்து, தன் காரியத்தை முடித்துக்கொண்டு, தான் செய்த உதவிக்குப் பிரதியாகப் பங்கு கேட்டதற்கு ஆஸ்ட்ரியாவின்மீது படையெடுத்து அதை தோல்வியடையச்செய்தார். ஆஸ்ட்ரியா சில ப்ர தேசங்களை இந்தப்போரில் இழக்க நேரிட்டது. இந்த யுத்தம் முடிந்ததும் ஜெர்மனியும் ஒரு பெரிய ராஜ்யமாகிவிட்டது. ஆனால் பிஸ்மார்க் இன்னம் ப்ரான்ஸின் கொட்டத்தை யடக்கவேண்டுமென்று கருதினார். ஆஸ்ட்ரியாவுடன் போர்செய்தகாலத்தில் ப்ரான்ஸ் ஒன்றும் செய்யாது சும்மாவிருந்தால் அதற்குச் சிலநாடுகள் உதவுவதாகச் சொல்லி தன் வசப்படுத்தியிருந்தார். ப்ரான்ஸூம் ஒப்புக்கொண்டுவிட்டது. ஆஸ்ட்ரிய யுத்தம் முடிந்ததும் உடன்படிக்கைப் பிரகாரம் ப்ரஷியாவை நடக்கும்படி ப்ரான்ஸ் கேட்க, பிஸ்மார்க் அதை ஏமாற்றினதுமன்றி ப்ரான்ஸை ஐரோப்பிய நாடுகளின் முன், வேண்டுமென்றே அவமானம் அடையும்படியும் செய்தார். இப்படி ஜெர்மனி பலவழிகளிலும் பலப்பட்டுக்கொண்டுவரவும் ப்ரான்ஸூக்குப் பலம் குறையவும் மிக்க திகில் உண்டாயிற்று. ஆகவே ப்ரான்ஸ் நாட்டாரில் சிலருக்கு ஜெர்மனியின் மமதையை அடக்கவேண்டுமென்று எண்ணமுண்டாயிற்று. ஆயினும் பிஸ்மார்க்

மிக்க ஸாமர்த்யமாய் பலவித ராஜ்ய தந்திர உதவிகளி ஞல் 1870-ஆு ப்ரான்ஸுடன் போருக்குச் செல்லும் படி செய்தார். இந்த யுத்தத்தில்தான் ஆல்ஸேஸ் - லொரேய்ன் இவைகள் ஜெர்மானியருக்குக் கிட்டியது - ப்ரான்ஸின் பலம் குன்றிவிட்டது. ஆனுலும் வெகு சீக்கிரத்தில் முன்னிருந்த நிலைமையை யடைந்தது. மறுபடியும் எங்கு இருதிறத்தாருக்கும் சண்டை நேரு மோ வென்றிருந்தது. நல்ல காலம்! இதுவரையில் மும்முர சச்சரவு நடக்காமலிருந்தது யார்செய்த புண் யமோ?

1870-வது வருஷத்திற்குப் பிந்திதான் ஐரோப்பிய நாடுகளில் ஒன்றுக்கொன்று ஸம்பந்தங்கள் இத்தகைய என்று ஒருவாறு வரையறுக்கப்பட்டன என்றுசொல்ல வேண்டும். ஜெர்மனியுடன் போர்புரிந்து வலிமை குன்றியதனுல் தனக்கு யார் ஆபத்துகாலங்களில் உத விபுரிவார் என்று ஏங்கியிருந்த ப்ரான்ஸ் தேசத்திற்குத் துணையாயிருப்பதாக ரஷியா சொல்லிற்று. 1891-ம் ஆுத்தில் இவ்விரண்டு ராஜ்யங்களுக்கும் ஸ்நேக உடன் படிக்கை ஒன்று ஏற்பட்டது. இவைகள் இப்படி சேர்ந் ததினுல் ஜெர்மானியராஜ்யதந்த்ரியாகிய பிஸ்மார்க் ஆஸ்ட்ரியாவைத் தோல்வியடையச் செய்தபோதிலும் அதைக் கைவிட்டுவிட்டால் ஜெர்மனிக்கே ஆபத்தாய் விடுமென்று கருதி ஆஸ்ட்ரியாவுடன் ஒரு ஸ்நேகஉடன் படிக்கை ஏற்படுத்திஞர். ஆஸ்ட்ரியாவுக்கும் ரஷியா வுக்கும் எப்போதும் பகைமையே உள்ளது என்பதை நாமறிவோமல்லவா? பிஸ்மார்க் மஹாநிபுணராகை யால் இந்த ஆஸ்ட்ரிய - ரஷிய பகைமையைப் பாராட்

டாமல் ரஷியாவுடன் நட்புபாராட்டி அந்தரங்கமாய் ஓர் உடன்படிக்கை செய்திருந்தார். பிஸ்மார்க் உயர்ந்த பதவியைவிட்டு நீங்கியபிறகு இப்பொழுது இருக்கும் ஜெர்மானிய சக்ரவர்த்தி ரஷியாவுடன் நட்புபாராட்டு வதைவிட்டு பிஸ்மார்க் செய்த உடன்படிக்கையை மதிக்காமற்போனார். இப்படி இருக்க, வேறு சிலவிஷயங்கள் ஐரோப்பாவில் நடந்தன. நடுவில் நட்புபாராட்டியுள்ள நாடுகளாகிய ப்ரான்ஸ் இடலி இவைகளுக்கு மனஸ்தாபம் ஏற்பட்டது. இடலிக்கு நேர் தெற்கே ஆப்ரிகாவின் வடகோடியிலுள்ள ட்யூனிஸ் என்னும் ப்ரதேசத்தை ப்ரஞ்சுக்காரர் தம் வசமாக்கினர். அது இடாலியருக்குப் பிடிக்கவில்லை. சிலகாலங்களுக்கு முந்தி ட்ரிபோலீ விஷயமாகவும் இவர்களுக்கு மனஸ்தாபங்கள் நேர்ந்தது எல்லாருக்கும் ஞாபகமிருக்கலாம். ஆகையால் இந்த ஸந்தர்ப்பத்தில் ஜெர்மனி இடாலியைச் சேர்த்துக்கொள்ள எண்ணி ஆஸ்ட்ரியா ஸஹிதம் இடலியுடன் ஓர் உடன்படிக்கை ஏற்படுத்தியது. இதற்குத்தான் 'ட்ரிபில் அலையன்ஸ்' என்று பெயர்.

ரஷியாவுக்கும் ப்ரான்ஸுக்கும் ஸ்நேக உடன்படிக்கைகள் ஏற்பட்டன என்று சொன்னேனல்லவா? நாளாவட்டத்தில் இங்கிலாந்தும் இந்தராஜ்யங்களுடன் வந்து நேசம்பாராட்டும்படி எப்படி நேர்ந்தது என்று அறிய சிலர் ஆவலுள்ளவர்களாயிருக்கலாம். எப்பொழுதும் இங்கிலாந்துக்கும் ப்ரான்ஸுக்கும் நேசம் என்பது அதிகமாய்க் கிடையாது. ஆதிகால முதற்கொண்டு பெரும்பாலும் ப்ரான்ஸும் இங்கிலாந்தும்

எதிர்க்கட்சிகளிலேயே நின்றிருக்கின்றன. இதுநிற்க, பெல்ஜியம் தனிநாடாக ஏற்பட்டதுமுதல், இங்கிலீஷ் ராஜ்யம் ஸாகராதிபத்யத்திலும், வியாபாரம், கைத்தொழில் முதலிய இன்னம் மற்ற எல்லா விஷயங்களிலும் உலகத்தில் முதன்மைஸ்தானத்தை அடைந்து கொண்டிருக்கிறது. ஜர்மனிக்கு இது பொறுக்கவில்லை. இப்பொழுது ஜெர்மானியர் இங்கிலீஷ்காரருடன் பகைமைபாராட்டி அவர்களது வியாபாரம், அன்னிய ப்ரதேசங்களில் உள்ள குடியேற்றத்துக்குரிய நாடுகள், ஸாகராதிபத்யம் முதலிய அநேக விஷயங்களில் முரண் ஏற்பட்டுவிட்டது. எங்கெங்கு இங்கிலீஷ்காரர் தங்கள் ராஜ்யத்தை ஸ்தாபித்தார்களோ, எங்கெங்கு இங்கிலீஷ்காரர் குடியேறினார்களோ, எங்கெங்கு தம் பலம் ஊன்றவேண்டுமென்று நினைத்தார்களோ அவ்வவ்விடங்களிலெல்லாம் ப்ராஞ்சுக்காரரும் தோன்றினார்கள். ஐரோப்பிய ராஜ்யங்களுக்குள் பெரும்போர் மூளும் போலிருந்தது. நல்ல காலம்! இத்தகைய கோளாறுகளை யெல்லாம் நீக்கும்படியான மனிதர்கள் இருந்தார்கள். ப்ரான்ஸுக்கும் இங்கிலாந்துக்கும் உள்ள மனஸ்தாபங்களெல்லாம் காலஞ்சென்ற நம் சக்ரவர்த்தியாகிய ஏழாவது எட்வர்டினால் நீக்கப்பட்டதுமன்றி இரு தேசங்களுக்கும் ஸ்நேக உடன்படிக்கை ஒன்று ஏற்பட்டது. இங்கிலீஷ்காரா ஈஜிப்டிலும் ப்ரஞ்சுக்காரர் மொராக்கோவிலும் இருப்பதென்று ஏற்பாடாயிற்று. இப்படி ப்ரான்ஸுக்கும் இங்கிலாந்துக்கும் நேசம் ஏற்படவே ப்ரான்ஸின் நேசத்தைப்பெற்றதென்று முன்னமேயே நாமறிந்த ருஷியாவுக்கும் இங்கிலாந்தின் நட்பு

ஏற்பட்டுவிட்டது. இப்படி ப்ரான்ஸ், ரஷியா, இங்கிலாந்து இவைகளுக்குள் ஏற்பட்டுள்ள ஒருவித நட்பு உடன்படிக்கைக்குத்தான் 'ட்ரிபில் என்டென்ட்' என்று பெயர். இவ்விதம் ஜெர்மனி, ஆஸ்ட்ரியா, இடலி மூன்றும் ஒரு கக்ஷியாகவும், ரஷியா, ப்ரான்ஸ், இங்கிலாந்து மூன்றும் மற்றொரு கக்ஷியாகவும் இருக்கின்றன. இவ்வித ஸம்பந்தங்கள் ஏற்படவேதான் ஆஸ்ட்ரியாவிற்கும் ஸெர்வியாவிற்கும் எங்கோ யுத்தம் நடக்கவேண்டி நேரிட்டபோது மற்ற அரசுகளும் அதில் கலக்க நிகழ்ந்ததற்குக் காரணமாயிற்று.

'பத்தொன்பதாம் நூற்றாண்டின் முதற்பாகத்தில் இப்பொழுது நடக்கும் கொடும்போர்போன்றஒருபெரு யுத்தம் ஐரோப்பாவில் நடந்தது. தற்காலத்தில் பேராசையால் தூண்டப்பட்டு ஆடும் ஜெர்மானிய சக்ரவர்த்தியைப்போல் அக்காலத்தில் நெபோலியன் என்னும் மஹாவீரன் ஐரோப்பாமுழுமையும் திக்விஜயம் செய்தான். இவனை அடக்கவேண்டியதற்காக ஐரோப்பிய தேசங்கள் எல்லாம் ஒன்றுகூடின. இருந்தபோதிலும் ஜெர்மனிதேசத்தார் நெபோலியனால் முறியடிக்கப்பட்டார்கள்' என்று முன்னமே கூறியிருக்கிறோமல்லவா? ஜெர்மனி தன்தேசத்தை எதிரியினிடமிருந்து காப்பதற்குச் சக்தியில்லாமற் போயிருந்ததைக் கண்டு இனி மேலாகிலும் அப்படி பலங்குன்றி யிருக்கக் கூடாதென்றெண்ணி, அதுமுதல் ஸைன்யங்களைப் பலப்படுத்தும் முயற்சிகளுள் நுழைந்தது. தன் நாட்டிலுள்ள ஆண் மக்கள் எல்லாருக்கும் யுத்தப்பயிற்சி கட்டாயம் இருக்கவேண்டியது என்று எண்ணி உடனே அவ்வழியைப்

பின்பற்றத் தொடங்கிற்று. ராஜ்ய கார்யங்களை நிர்வஹிக்கவும் ஸேனுபலத்தை அதிகப்படுத்தவும் மஹா நிபுணனை பிஸ்மார்க் என்னும் பிரபு ஜெர்மனியின் ப்ரதம மந்திரியாய்வந்தபோது இம்முறையை வெகு ஒழுங்காகவே பின்பற்றிவர ஐரோப்பாவில் உள்ள ராஜ்யங்கள் எல்லாவற்றிலும் ஜெர்மனியே ஸேனுபலத்தில் முதலானதாய் இருந்துவந்திருக்கின்றது. தவிரவும் பத்தொன்பதாம் நூற்றுண்டில் உலகமெங்கும் உண்டான நாகரிகக் கிளர்ச்சியிலும் முன்னுக்குவந்து இருக்கின்றது. அறிவை விசாலப்படுத்தும் தத்துவசாஸ்திர ஆராய்ச்சிகளிலும், இலக்கிய இலக்கணங்களிலும், நவீன பூதபௌதிக ரஸாயன சாஸ்திராதிகளிலும் விருத்தியடைந்து வந்ததுமன்றி புதிய யந்திரங்களைக் கண்டுபிடித்து பலவழிகளிலும் ஜெர்மானியர் சிறந்தவரானுர்கள். அத்தேசத்தார் தங்கள் தேசத்தின் பொருள்களை உபயோகத்திற்குக் கொண்டுவந்து விருத்தியடைந்தார்கள். தங்கள் வியாபாரத்திற்கு இணையாக ஒருவருமில்லையென்று சொல்லும்படியும் செய்துவிட்டார்கள். சுருங்கச்சொல்லில் தங்கள் நாகரிகத்தையெல்லாம் தம் நாட்டிற்கே அர்ப்பணம் செய்தார்கள். கட்டாயமாய் எல்லாரும் படிக்கவேண்டுமென்றும் ஆண்மக்கள் எல்லாம் போர்ப்பயிற்சியும் பெற்றிருக்கவேண்டும் என்றும் ஏற்பட்டிருந்து, தற்காலத்திய வ்யாபார முறைகளிலும் தேர்ச்சியடைந்திருந்தால் யார்தாம் அந்நாட்டைப்பற்றிப் பெருமையாகச் சொல்லக்கூடாது? இப்படி யெல்லாம் பெற்றிருந்தும் ஜெர்மானியரது எண்ணமாத்திரம் நல்லதாகவிருக்கவில்லை. தம் பொருள்கள் எல்

லாம் விலையாவதற்கு எங்கெங்கே இடங்கள் கிடைக்கு மென்று தேடினார்கள். எப்படி மற்ற தேசங்களுடன் போட்டி செய்து தாங்களே முதன்மையடையலா மென்று பலவிதங்களில் வழிதேடினார்கள். உலகத்தில் தாம் தவிர மற்றவர்கள் ஒருவரும் விருத்தி யடையக் கூடாது; யார் முன்னுக்கு வந்திருக்கிறார்களோ அவர் களை அழித்துவிட்டு மறுவேலை பார்க்கவேண்டும் என்று கருதுவது பெரும்பாதகமல்லவா? பிஸ்மார்க் உயர்ந்த உத்யோகத்தை வஹித்து வரும்வரையில் ஐரோப்பாவில் மட்டும் ஜெர்மனியின் விஷயங்கள் முன்னுக்கு வந்தாலே போதுமானது என்றும் அப்படி ஐரோப்பாவில் மட்டும் தன் கவனத்தைச்செலுத்தினால் தான் ஜெர்மனிக்கு அனுகூலமென்றும் மற்று வெளி விஷயங்களில் தலையிட்டுக்கொண்டால் கெடுதிநேரிடு மென்றும் எண்ணினார். ஆனால், தற்காலத்து கெய்ஸர் பட்டத்திற்கு வந்தபிறகு பிஸ்மார்க்கின் எண்ணங்க ளும் நடவடிக்கைகளும் விழலுக்கிறைத்த நீராயின.

ஜெர்மனி தன் வ்யாபாரப்பொருள்களுக்கும், வர வரப் பெருகி விருத்தியாய்க்கொண்டு வரும் தன் ப்ர ஜைகளுக்கும் புதிய இடங்களைத் தேடவேண்டியதா யிற்று. எங்கு பார்த்தாலும் வேறே ஜனங்கள் இவ் விஷயத்தில் தலையிட்டிருக்கிறார்கள். என்ன செய்வது? எப்படியாவது தன் ஜனங்களுக்கு வெளியில் குடி யேற்ற நாடுகளும் வியாபாரத்திற்கு இடமும் தேட வேண்டியது என்று நிச்சயமாயிற்று. உலகத்தில் உள்ள எல்லா இடங்களும் ஏற்கனவே குடியேறப்பட் டிருந்தன. எல்லா நாடுகளிலும் மற்றவர்களுடைய



வில்லியம், II : ஜர்மன் சக்கரவர்த்தி



ப்ரான்ஸிஸ் ஜோஸப், ஆஸ்ட்ரிய சக்ரம்

வியாபாரமும் பலத்திருந்தது. இவைகளில் பெரும் பான்மை இங்கிலீஷ்காரரே விருத்தியடைந்திருந்தார் கள். ஜெர்மனி குடியேற்ற வியாபாரவிஷயங்களில் விருத்தியடைய வேண்டுமானுல் ஸமாதானவழிகளை நாடாமல் தன் கைப்பலத்தை உபயோகித்தே அவை களை அடையவேண்டும் என்று எண்ணி தன்பலத்தை அதிகரிக்கத் தொடங்கியது. இவைகளுக்கு உதவியா வதற்கு ஜெர்மன் ஸைந்யமாத்ரம் போதாதல்லவா? கப் பற்படையையும் விருத்தியாக்கினுல்தான் உலகத்தில் எந்த ராஜ்யத்திற்கும்—கப்பற்படையில் சிறந்து ஸர்வ ஸாகராதிபத்யத்தையும் வஹித்துள்ள ப்ரிடிஷ் ராஜ் யத்திற்கும்—பின்னடையாமல் இருக்கலாம் என்று நினைத்தார்கள். அப்படியே கப்பற்படையும் வருஷத் திற்கு வருஷம் அதிகமாக்கப்பட்டது. தவிர, ஜெர் மானியர் சும்மா இருப்பவர்களாகக் காணேம். அவர் கள் நோக்கங்களுக்கு இங்கிலீஷ்காரர் பெரும் தடையா யிருப்பது வெளிப்படையாயிருந்தபடியால் அவர்களுக் குத்தீங்கிழைக்கவேண்டுமென்று நினைத்தார் போலு மிருக்கின்றது. இதற்கு எவ்வளவோ அத்தாட்சிகள் வெளிவந்திருக்கின்றன. உதாரணமாக போவர் யுத்த காலத்தில் ஜர்மனி இங்கிலீஷ்காரருக்குச் சிறிதா வது அனுகூலமாயிராததுமன்றி எதிரிகளையும் உத் ஸாகப்படுத்திற்று. இங்கிலாந்து போவர்களுடன் சண் டைக்கு ஆரம்பித்த சில தினங்களுக்குள் ஜெர்மானிய சக்ரவர்த்தி கப்பற்படையை விருத்தி செய்யவேண் டும் என்று தம் மந்திராலோசனை ஸபையில் பேசினர். அதுமுதற்கொண்டு ஜெர்மானிய கப்பற்படை அதிக

மாய்க் கொண்டிருக்கிறது. இங்கிலாந்தின் பெருமையை அடக்கவேண்டும் என்னும் துர் எண்ணத்தையுடையரேனும் தங்கள் தேசப் பாதுகாப்பினிமித்தமும் வியாபார னிமித்தமும் இக்கப்பற்படை வேண்டியிருந்ததேதவிர வேறெதற்குமன்று என்று இரண்டாவது உவில்லியம் கூறினர். ஆனால் இவைகள் போருக்காகவே கருதப்பட்டன வென்பதை ராஜ்யதந்திர நிபுணர்களான சில ஆங்கிலேயர் அறிந்து தம்தேசத்திற்கு எச்சரிக்கை செய்துவந்தார்கள். ஜெர்மானியர் மாத்திரம் கப்பற்படைகள் வியாபாரம், தம் தேசப் பாதுகாப்பு இவைகளுக்காகவே அதிகப்படுத்தப்படுகின்றன என்றும் போருக்குக் கட்டப்படுகின்றனவல்ல என்றும் கூறிவந்தார்கள். எப்பொழுதும் ஸமாதானத்தையே நாடிவரும் ஆங்கிலேயர் இவைகளை யெல்லாம் ஒருபொருட்டாகக் கருதாமலிருந்து வந்தபோதிலும் தங்கள் கப்பற்படையையும் அதிகப்படுத்தும்படி ஏற்பாடு செய்தார்கள். தவிரவும் ட்ரெட்நாட் என்னும் புதியவகை போர்க்கப்பலை நிருமித்தார்கள். ஜெர்மானியர் இங்கிலீஷ்காரரினும் அதிகமாய் மறுபடியும் கப்பல்கள் சேகரித்தார்கள். ஆயினும் இங்கிலீஷ்காரர் மட்டும் எவ்வளவோ எச்சரிக்கப்பட்டிருந்தும் ஜெர்மனியின்மீது நல்லபிப்பிராயமே கடைசி வரையிலும் கொண்டிருந்தார்கள். ஐரோப்பாவில் எவ்வித சண்டைசச்சரவுகளும் வீணாய் ஏற்படக்கூடாது என்பது இங்கிலாந்தின் கருத்து. ஆயினும் ஜெர்மனி ஒன்றன்பின் ஒன்றாய் செய்துவந்த கபடச்செய்கைகளைக் கவனித்தால் யாருக்குத்தான் அதன்மீது பகைமை உதிக்காது? இங்கிலாந்

தின் நட்பையடைந்த ப்ரான்ஸுக்குப் பல தடவைக ளில் ஜெர்மனி நீங்கிழைத்துக்கொண்டே வந்தது. மொராக்கோ, ஆக்டீர் ஸம்பவங்களில் ஜெர்மனிதான் ப்ரான்ஸின்மீதுள்ள பகைமையைக்காட்டி பயமுறுத்தும் போது இங்கிலாந்து ப்ரான்ஸின் உதவிக்குவந்தது மல் லாமல் ஐரோப்பிய சச்சரவுகளில் ஸமாதானத்தையும் கொண்டு வந்தது. நாம் முன்னேயே கூறியிருக்கிற படி ப்ரான்ஸ், ரஷியா, இங்கிலாந்து இம்மூன்றுக்கும் ஏற்பட்டிருக்கிற உடன்படிக்கையின் பிரகாரம் இவை களை யாராவது வெளியிலிருந்து எதிர்த்தால் ஒன்றுக் கொன்று உதவவேண்டும். ஆகவே ஜெர்மனி எப்பொ ழுது இங்கிலாந்தின் துணை ராஜ்யங்களின்மீது போர்க் குச் சென்றதோ, அப்பொழுது அவைகளுக்கு தற்கா லம் உதவலாயிற்று. மற்றும் தனியரசாகவும் நடுவுநிலை மையாகவுமுள்ள பெல்ஜிபத்திற்கு விரோதம் ஏற்பட வும், தான் இந்த யுத்தத்தில் கலக்க வேண்டியதாயிற்று. சிறிய எளியராஜ்யங்கள் பெரிய வலிய ராஜ்யங்களுக் குக் கீழ்ப்பட்டுப் போகாமல் காப்பாற்றுவதில் இங்கி லாந்து எக்காலத்தும் ஒருபிரக்பாதியை யடைந்திருக் கிறது. இந்தப் பேரையும் ப்ரக்யாதியையும் கௌர வத்தையும் இப்பொழுதும் காப்பதற்கும், அபயம் என்று தன்னை யடைந்த பெல்ஜியநாட்டைப் பாதுகாப் பதற்கும் தன் துணையரசாகிய ப்ரான்ஸுக்கு உதவி செய்வதற்கும், தன் ஸொந்த தேசத்திற்கு யாதொரு கெடுதியும் விரோதிகளிடமிருந்து வராமல் தற்காத் துக்கொள்வதற்கும் வெறும் ராணுவ முரட்டுத்தனக் கொழுப்பை யடக்குவதற்கும் ஆகிய இத்யாதி கார

ணங்களை முன்னிட்டுத்தான் இங்கிலாந்து இந்த யுத்தத்தில் சேரவேண்டியதாயிற்று. இவைகள் சண்டையில் கடைசியாக எப்படி ஸம்பந்தப்பட்டன? என்பதையும் ப்ரிட்டிஷ் ராஜ்யதந்திர நிபுணர்கள் ஐரோப்பாவில் போர்நிகழாமல், வீண் இரத்தவெள்ளம் பெருகாமல், ஸமாதானத்தையே எல்லா தேசத்தாரும் பெற்றிருக்கவேண்டுமென்று கோரி, அதற்காக அவர்கள் செய்தமுயற்சிகளையும் அவைகள் எப்படி விருதாவாய் முடிந்தன என்பதையும் அடுத்த அத்யாயத்தில் விவரிப்போம்.



# மூன்றாம் அதிகாரம்

## முதல் ஸம்பவங்கள்

ஐரோப்பாவில் எங்கும் ஸமாதானம் நிலைத்தி ருக்கும் என்று எண்ணியிருந்த காலத்தில்—வியாபா ரங்கள் நிலைகுலைந்து எப்பொழுதும்போலவே நடந்து கொண்டிருக்கும் காலத்தில்—ஆங்கிலேயராஜ்யதந்திரி களில் சிலரும் ஸமாதானத்தையே எதிர்பார்த்திருந்த காலத்தில்—ஜெர்மன் சக்ரவர்த்தியும் ஸமாதானத் தையே நாடிவருகின்றார் என்று உலகமே நம்பியிருந்த காலத்தில்—திடீரென்று யுத்தமேகம் கவிந்துகொண் டது. இது கைபளவு சிறியதாய்க்கிளம்பியபோதிலும் அதிகவிரைவாய் எங்கும் பரவி ஐரோப்பிய நாடுகளில் முக்யமானவைகளையெல்லாம் அமிழ்த்தி மூடிவிட்டது. அப்பொழுதே வருகிறது வருகிறது என்று வருஷக் கணக்காய் எதிர்பார்த்து வராதிருக்கவே இனியும் வரப்போகிறதில்லை என்று பாமரஜனங்கள் ஏமாந்து போயினர். ஆஸ்ட்ரியாவுக்கும் ஸெர்வியாவுக்கும் எப் பொழுது பிரமாதமான மனஸ்தாபம் நேர்ந்ததோ அப் பொழுதே ப்ரிடிஷ் அந்நியமந்திரியாகிய ஸர் எட்வர்ட் க்ரே என்பவருக்கு அது தெரிந்திருந்தது. அதனால் க்ரேட் பிரிட்டனும் போரில் ஸம்பந்தப்படும்படியாக ஏற்படும் என்று தெரிந்து இங்கிலீஷ் பத்திரிகைகள் அறிவித்தபோதிலும் இங்கிலீஷ் ஜனங்களுக்குக்கடைசி வரையில் ஒன்றும் தெரியாது. ஏற்கனவே ஐரோப்பா முழுமையும் வெளிக்குக் குழப்பமற்றிருந்ததல்லவா? இங்கிலாந்தில் யுத்தம் ஆரம்பிப்பதற்குச் சின்னாட்க

ளுக்கு? முந்தி ஜுலை மீ 18உ சனிக்கிழமைதான் பிரிட்டானிய கடற்படையைப் பார்த்துக் களிக்கவேண்டுமென்று நம்காருண்யச் சக்கரவர்த்தி ஏற்பாடு செய்திருந்தார். ஆஹா, என்னகாட்சி! இங்கிலாந்தின் தெற்கிலுள்ள போர்ட்ஸ்மத் என்னும் துறைமுகத்தருகில் ஸ்பிட் ஹெட் என்னுமிடத்தில் நாற்பதுமைலுக்கு நாற்பது மைல் போர்க் கப்பல்கள் அணிவகுத்து இங்கிலாந்தின் ஸாகராதிபத்யத்தை வெளிப்படுத்தின. எவரேனும் அன்றையதினம் இக்காட்சியைக் கண்டிருப்பாராயின் அவர்மனத்தில் ஐரோப்பிய யுத்தம் என்பது சற்றேனும் உதித்திருக்குமோ? யாவரும் அயர்லாந்து விஷயமாக ஏற்பட்டிருக்கிற ஸ்வராஜ்ய சச்சரவில் ஈடுபட்டு அதையே ஸ்மரணை செய்துகொண்டு எப்பொழுது நாட்டிற்குள்ளேயே குழப்பங்கள் நேரிடுமோ என்று இருந்தனரே தவிர இப்பெரும்போரைப்பற்றிச் சிறிதேனும் கருதினவரில்லை. தவிரவும் இக்கப்பற்படையில் உள்ள உத்யோகஸ்தர்களை வெளிதேசத்தானொருவன் கண்டிருந்தால் அவன் பெருநகை செய்திருப்பான்? என்ன ஒருவராவது அனுபவம் முதிர்ந்தவராகக்காணோம்! நாற்பது வயதிற்குள்ளிருக்கும் வாலிபராயினும் அவர்களின் ஊக்கமும் உத்ஸாகமும் எவ்வளவு முதிர்ந்த அனுபவமுடையராயிருந்தாலும் வந்திருக்காது. எங்கும் அன்றையதினம் கொண்டாட்டமாகவேயிருந்தது. இந்தக்காட்சி முடிந்தபிறகு அவ்வந்த போர்க்கப்பல்கள் தத்தம் துறைமுகத்திற்குச் செல்லத்தயாராயிருந்தன.

இதேவண்ணம் வெளிக்குமட்டும் ஜெர்மனியிலும் அமைதி நிறைந்திருந்தது. ஜெர்மன் சக்ரவர்த்தி

வழக்கம்போல வினோதார்த்தமாய் வடக்கே நார்வே வரையிலும் தம் வேனிற்கால யாத்திரையாகப் போயிருந்தார். அவரது அரண்மனையைச் சேர்ந்தவர்களான உத்யோகஸ்தர்களும் வேலையாட்களும் வேனிற்கால விடுமுறை யாதலால் ஆங்காங்கே இனிமையாய்க் காலங் கழிக்கச்சென்றனர். ஸெர்வியாவின் மறுமொழியைக் கேட்டு ஆஸ்ட்ரியா ஒப்புக்கொள்ளாது யுத்தத்திற்குத் தயாராய் இருந்தபோதுதான் தம்முடைய வேனிற் கால கடல்யாத்திரையை கெய்ஸர் திடீரென நிறுத்தி விட்டு ஜெர்மனிக்குத் திரும்பினார். அதேமாதிரியாகவே தங்களுக்கு யாதொருவிஷயமும் அது வரையிலும் தெரியாதென்பதைக் காட்டும் பாவனையாக தம் வேலைக்காரர்களையும் உத்யோகஸ்தர்களையும் உடனே வந்து சேரும்படி தந்தி மூலமாய் உத்தரவு அனுப்பினார். எங்கும் இம்மாதிரி வெளிக்காயினும் ஸமாதானமே நிறைந்திருந்தது. ஆங்கிலத்தில் ‘புயலுக்கு முன் அமைதிபோலும்!’ என்றிருக்கிற பழமொழி வீணாகவில்லை.

முன்னமேயே நாம் கூறியுள்ள வண்ணம் ஸெர்வியாவை ஆஸ்ட்ரியா சில நிபந்தனைக்குள்ளாகும்படி கேட்கவும் ஸெர்வியா இரண்டு நிபந்தனைகளை மாத்திரம் ஹேக் ஸமாதானஸங்க விசாரணைக்குமட்டும் நிறுத்தி மற்றவைகளை ஒத்துக்கொள்ளவும், அந்த இரண்டு நிபந்தனைகளை ஒத்துக்கொள்ளாததே அதிருப்திகரமாயிருக்கிறதென்று சொல்லிவிட்டது. யுத்தம் உடனே தொடங்கவிடினும் போர்ப்பகைமை அப்பொழுது முதல் ஆரம்பமாயிற்று. அக்கால முதற்கொண்டு நமது

காருண்ய ஆங்கிலேய அரசாங்கத்தார் ஸமாதானத்திற்காகப் பாடுபட்டார்கள்; இச்சச்சரவு ஐரோப்பா முழுமையும் பரவக்கூடாதென்றும் எங்கு ஆரம்பித்ததோ அவ்விடத்திலேயே நடந்து முடியவேண்டுமென்றும் முயற்சிசெய்தார்கள். ப்ரிடிஷ் அந்நியதேச மந்திரியாகிய ஸர் எட்வர்ட் க்ரே இவ்விஷயத்தை எல்லா ஐரோப்பிய வல்லரசுகளுக்கும் எடுத்து எடுத்துச்சொன்னார். என்றைய தினம் ஆஸ்ட்ரியா ஸெர்வியாவுக்கு நிபந்தனைகளை ஏற்படுத்தியனுப்பியதோ அன்றைய தினமே அவர் லண்டனிலுள்ள ஆஸ்ட்ரிய ப்ரதிநிதிக்கு இந்தப் போரில் ஐரோப்பிய வல்லரசுகள் நுழையநேரிட்டால் உண்டாகும் அகண்டபொருள் நஷ்டமும், வியாபார நாசமும், உயிர்ச்சேதமும் இத்தன்மையன என்றும் ஐரோப்பிய நாகரீகத்திற்கும், தொழிலபிவிருத்திக்கும் ஏற்படும் அழிவும் அதிகமாய் இருக்குமென்றும் எச்சரிக்கை செய்தார். இந்த எச்சரிக்கைச்கு உத்தரமாய் ரஷியாவும் ஸமாதானத்தையே கோரினதாகத் தெரிவித்தது. மற்ற ராஜ்யங்களின் பூமியை ஆக்ரமிப்பது தன் உத்தேசமில்லையென்றும், பலவந்தப்படுத்தப்பட்டாலொழிய யுத்தத்திற்கு வருவதில்லையென்றும், ஆஸ்ட்ரியாவின் செய்கை பால்கன் த்வீபகல்பத்தில் ரஷியாவுக்குள்ள செல்வாக்கை நிலைகுலைப்பதையே உண்மையில் குறிப்பிடுகின்றது என்றும் ரஷியா கூறியது. இம்மாதிரியிருக்கும் காலத்தில்தான் ஸர் எட்வர்ட் க்ரே பிரிடிஷ் காமன்ஸ் ஸபையில் இவ்விஷயங்களை எடுத்துரைத்தார். தவிர, ஆஸ்ட்ரியாவிற்கும் ஸெர்வியாவிற்கு உதவியாய்வந்த ரஷியாவுக்கும் ஸந்தி செய்வித்



மேஜர் ஜனரல் ஸர் ப்ரதாப் ஸிங்

தற்காக ஐரோப்பிய அரசுகளின் பிரதிநிதி ஸபை ஒன்று கூடலாமென்றும் எடுத்துரைத்தார். ப்ரான்ஸ், இடலி, ஜெர்மனி, இங்கிலாந்து ஆகிய இவைகளின் பிரதிநிதிகள் இதில் சேரவேண்டியவை - ஜெர்மனி தவிர மற்றவைகள் எல்லாம் இவரது ஆலோசனைக்கு உடன்பட்டன. ஆனால் ஜெர்மனிமாத்திரம் இதற்கு ஒப்பவில்லை; மொத்தத்தில் இது நல்லதாமென்றும் ஆனால் உள்விஷயங்களில் தாம் ஒத்துக்கொள்ளக்கூடா தற்குக் காரணம் ஆஸ்ட்ரியாவும் ரஷியாவும் தமக்குள்ளேயே பேசித் தங்கள் காரியங்களை முடித்துக்கொள்ள வழிகள் இன்னும் உள்ளன என்றும் சொல்லிற்று. வெளிக்கு இவ்விஷயம் உண்மையாகப் பட்டபோதிலும் உள்ளுக்குள் ஜெர்மனியின் சூதுகளையும் கபடத்தையும் காட்டிற்று. ரஷியாவோ, தான் விஷயங்களை விட்டுக்கொடுக்கிறதில்லையென்றும் ஸெர்வியாவின் மீது படையெடுப்பதற்கு முன் ஏதாவது முடிவுக்குவர வேண்டியது தன் நம்பிக்கையென்றும் தெரிவித்தது. மறுநாளே, ஆஸ்ட்ரியா ஸெர்வியாவின்மீது யுத்தத்திற்கு வருவதாய் கிரமப்படி தெரிவித்துவிட்டது. ஜெர்மனி இன்னும் ஸமாதானத்தையே விரும்பினதாகக் காட்டி வந்தது. இங்கிலாந்திலும் எல்லோரும் அதை நம்பினார்கள். அந்தரங்கமாய் நடக்கும் விஷயங்களையும் அந்நிய தேசங்களில் ஜெர்மனியினது நடவடிக்கைகளையும் அறிந்திருப்பார்களானால் அப்படி நம்பியேயிருக்கமாட்டார்கள். இன்னும் ரஷியா ஆஸ்ட்ரியாவுடன் பேசி ஸமாதான முயற்சிகள் முடிக்கவேண்டும் எண்ணத்தைத் தெரிவித்தது. அதேகாலத்தில் பாரிஸிலிருக்கும் ஆஸ்ட்

# ஐரோப்பிய மஹா யுத்தம்

இங்கிலாந்துக்கும் ப்ரான்ஸுக்கும் ஏற்பட்டுள்ள உடன் படிக்கை ரஹஸ்யமானதல்ல. உலகமே அதை அறியும். அப்படியிருக்க தன் நட்பைக்கொண்ட ப்ரான்ஸ் தேசத்தை வேறொரு பலத்தநாடு எதிர்த்துதன்கீழடக்குவதை எப்படி கைகட்டி பார்த்திருக்கமுடியும்.? இப்படிக்ரேட்பிரிடன் ப்ரான்ஸின் உதவிக்குவந்து சேரும் என்பதை ஜெர்மானிய சான்ஸலர் டாக்டர் பெத்மான் ஹால் உ(வெ)க் என்பவர் அறிந்து: ரஷியா ஆஸ்ட்ரியாவைத் தாக்குவதாயிருந்தால்தான்—ஸமாதானத்தைக் காப்பதற்கு எவ்வளவோ முயற்சி செய்தபோதிலும்—ஓர் ஐரோப்பியக் குழப்பம் நேரிட்டேதீரும் * * * * ப்ரிட்டிஷ் ராஜயத்தின் நோக்கங்கள் தனக்குத் தெரிந்தவரையில் எந்த சச்சரவிலேனும் ப்ரான்ஸ்அகப்பட்டு அழிந்துபோய்விடும்படி விட்டுக்கொடுக்காது. ஆயினும் அத்தகைய எண்ணங்கள் ஜெர்மனிக்குக் கிடையாது. க்ரேட்பிரிட்டன் மாத்திரம் நடுவு நிலைமையாய் இருந்துவிடுவது நிச்சயமானால், யுத்தம்நேரிட்டு ஜயம் ஜெர்மனியின் பக்கம் இருக்கும்பக்ஷத்தில் ப்ரான்ஸுக்கு அழிவுநேரும்படி ராஜ்யத்தை ஆக்ரமிப்பது ஜெர்மானிய அரசாங்கத்தின் நோக்கமல்ல என்றும் ப்ரான்ஸ் குடியேற்ற நாடுகளைப்பற்றி அமேதமாதிரி சொல்லமுடியாதென்றும் ஆலோசனை சொன்னார். ப்ரான்ஸை எதிர்க்கவேண்டுமாயின் பெல்ஜியத்தின் நடுவு நிலைமையும் லக்ஸம்பர்க் என்னும் சிறு நாட்டின் நடுவு நிலைமையும் அந்தரத்தில் பறக்கவேண்டியதுதான் - இம்மாதிரி நிகழ்ச்சிகள் ஏற்பட்டால் யார்தான் சும்மாவிருப்பார்கள் ? ஸர் எட்வர்ட் க்ரே இன்னும்

பொறுத்துக்கொண்டிருந்து ஸமாதானப் பேச்சுகள் நடக்கட்டும் என்றிருந்தார்—ஜெர்மனியின் ஆலோசனைக்கு இவர் இடங்கொடாதபோதிலும், ஐரோப்பாவில் ஸமாதானத்தை நிலைநிறுத்த ஜெர்மனியும் ஆஸ்ட்ரியாவும் பாடுபடுகிறதாயிருந்து அதற்கு ரஷியாவும் ப்ரான்ஸூம் உடன்தையாயிராவிட்டால் அவைகளுடன் தனக்குள்ள உடன்படிக்கையினின்றும் நீங்கிவிடுவதாயும், அப்படியில்லாதபட்சத்தில் ப்ரான்ஸூக்கு உதவியாக இங்கிலாந்தும் வந்துசேரவேண்டியதுதானென்றும் கூறினார். இந்த விஷயத்தைப்பற்றிக் காமன்ஸ் ஸபையில் பேசியபோது ப்ரான்ஸை எதிர்ப்பதற்கு ஜெர்மானிய கப்பற்படை வடகடலிலும் இங்கிலீஷ் வாய்க்காலிலும் தோன்றினால் தங்கள் கப்பற்படை ப்ரான்ஸைக் காக்கத் தயாராயிருக்கும் என்று ப்ரான்ஸூக்கு உறுதிமொழி எழுதியனுப்பினதாகவும் தெரிவித்தார். தவிர பெல்ஜியம் ஹாலண்ட் இவைகளை எந்த ராஜ்யமாவது பிடிப்பதாயிருந்தால் இங்கிலாந்து வேடிக்கைபார்த்துக்கொண்டிராதென்றும் பேசினார். அன்றையதினமே பெல்ஜியத்தின் நடுநிலைமையைக் காப்பீர்களாவென்று ப்ரான்ஸையும் ஜெர்மனியையும் தந்திமூலமாய்க்கேட்டதற்கு, வேறு அரசாங்கங்கள் அதைக் காப்பாற்றுததினிமித்தம் தாங்கள் பலவந்தமாய்தூண்டப்பட்டாலொழிய தாங்கள் பெல்ஜியத்தின் நடுவுநிலைமையைக் காக்கத் தயார் என்று ப்ரான்ஸினிடமிருந்து பதில்வந்தது. ஜெர்மன் மந்திரியோ சக்ரவர்த்தி சான்ஸலர் இவர்களது ஆலோசனையைக் கேட்டபிறகுதான் பதில்சொல்லக்கூடுமென்றும், யுத்த ஏற்

பாடுகளைப்பற்றி வெளியிடாமல் யாதொருபதிலும் கூற முடியுமோவென்று தான் ஸந்தேகப்படுவதாகவும், ஏற்கெனவே பெல்ஜியம் விரோதமாய் நடந்திருக்கின்றதென்றும் தெரிவித்தனர். இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கும்போதே ஜெர்மனி தன் ஸேனைகள் ப்ரான்ஸுக்குப்போவதற்கு வழிவிடவேண்டுமென்று பெல்ஜியத்தைக் கேட்டதாகத் தெரியவந்தது. இந்த ஆலோசனைக்கு அடுத்தாற்போல் பெல்ஜியம் இதற்கு ஒத்துக்கொள்ளாத பக்ஷத்தில் அதை நாசஞ்செய்துவிடுவதாயும் பயமுறுத்தினார்கள். பெல்ஜியம் பதில் கூறுவதற்கும் அவகாசம் கொடுக்கவில்லை. பன்னிரண்டு மணி நேரத்திற்குள் மறுமொழியளிக்கும்படியாக இருந்தது. இங்கிலீஷ் கவர்ன்மெண்டுக்கு இவ்விஷயம் தெரிந்ததும் பெல்ஜியத்தின் நடுவுநிலைமையைக் காக்கவேண்டுமென ஜெர்மனி உறுதி உடனே கூறவேண்டுமென்று தந்தி மூலமாய்த்தெரிவிக்க, ஜெர்மானிய அன்னியதேச மந்திரி "பெல்ஜியத்துடன் கைகலந்து போர்நேரிட்டால், எது எவ்விதம் இருந்தபோதிலும், பெல்ஜியத்தில் சிறிதாவது தம் ராஜ்யத்துடன் சேர்ப்பதில்லை என்ற மிகவும் கிரமமான உறுதிமொழியை வற்புறுத்திக் கூறுவதாகச்" சொன்னார். இப்படிப்பட்ட ஸமாதானப்பேச்சுகளின் விஷயமான நடவடிக்கைகளையெல்லாம் ப்ரிடிஷ் பிரதம மந்திரி மிஸ்டர் ஆஸ்க்வித் எடுத்துக்கூறினதுமன்றி ஜெர்மனியின் பதில் திருப்திகரமாயில்லை யென்றும் பெல்ஜியத்தின் விஷயமாய் ப்ரான்ஸைப்போலவே உறுதிமொழி கூறவேண்டுமென்றும் ஆகஸ்ட்மீ 4-ம் தேதி காலை தந்திக்கு திருப்திகரமான

பதில் அன்றிரவு 11-மணிக்குத் தரவேண்டியது" என்று தெரிவித்திருப்பதாகவும் கூறினர்.

ஆகஸ்ட் மாஸம் நாலாம் தேதி மாலை பதினொரு மணிக்கு ஜெர்மனிக்கும் ப்ரிடிஷ் ராஜ்யத்திற்கும் பகைமை ஏற்பட்டுவிட்டதாக விளம்பரப்படுத்தப்பட்டது.

"யுத்த நிலைமை"

"பெல்ஜியத்தின் நடுவுநிலைமையைக் காப்பதாக ஜெர்மன் அரசாங்கம் உறுதிகூறவேண்டுமென்று நம் மாட்சிமை தங்கிய மன்னரது அரசாங்கம் கோரின தற்குத் திருப்திகரமான பதில் 1914-ம௵ ஆகஸ்ட்மீ 4உ இரவு பன்னிரண்டு மணிக்குள் வராதபட்சத்தில், மாட்சிமைதங்கிய மன்னரது ராஜாங்கம் அந்நடுவுநிலைமையைக் காப்பதற்கும், க்ரேட் ப்ரிடனைப்போல தாங்களும் பத்தப்பட்டிருக்கும் உடன்படிக்கையின்படி நடப்பதற்கும் தங்கள் சக்திக்குட்பட்ட எல்லா வழிகளையும் தேட நேரிடும் என்று ஜெர்மன் துரைத்தனத்திற்கு மாட்சிமைதங்கிய மன்னரது அரசாங்கம் அன்றையதினம் தெரிவித்தது. இந்த ஸமாசாரத்தைத் தெரிவித்ததின்பேரில் பெர்லின் நகரிலுள்ள மாட்சிமைதங்கிய மன்னரின் ப்ரதிநிதி தம்முடைய (பாஸ்போர்ட்டுகளை) பயணச்சீட்டைக் கேட்கும்படியாக நேரிடவும், அதற்கேற்ப 'இரண்டு தேசங்களுக்கும் இன்றையதினம் இரவு 11-மணி முதல் யுத்த நிலைமை ஏற்பட்டிருக்கிறது' என்று ஜெர்மன் அரசாங்கத்திற்கு மாட்சிமைதங்கிய அரசரின் துரைத்தனம் அறிவித்துவிட்டிருக்கிறது."

அன்றைய தினமே மிஸ்டர் ஆஸ்க்வித் பெல்ஜியத்தின் (அப்பொழுது தலைநகராயிருந்த ப்ரஸல்ஸிலுள்ள) ப்ரிடிஷ் பிரதிநிதியிடமிருந்து வந்த தந்தியையும் வாசித்துக்காட்டினார் :—

" சக்ரவர்த்தி துரைத்தனத்தார் பெல்ஜிய அந்நிய மந்திரிக்குத்தெரிவித்த நல்லபிப்ராயமுள்ள ஆலோசனையை பெல்ஜிய கவர்ன்மெண்டார் அங்கீகரிக்காமல் போனதால், ஜெர்மன் கவர்ன்மெண்டார் ப்ரான்ஸிலிருந்து உண்டாயிருக்கும் பயத்தைமுன்னிட்டு தாங்கள் அத்யாவசியமென்று கருதுகிற ஏற்பாடுகளை—அவசியம் ஏற்பட்டால், கைப்பலத்தின் உதவியைக்கொண்டாவது கட்டாயம் முடிக்கும்படி நேருவதைக்குறித்து விசனப்படுவதாக ஜெர்மன்மந்திரி ஒரு குறிப்புமூலமாய் இன்றையதினம் தெரிவித்திருக்கிறார். "

அன்றையதினமே பெல்ஜியத்தின் நடுவுநிலைமையை ஜெர்மானியர் மீறிவிட்டதாகவும் இன்னும் சற்றுப் பிறகு ஜெர்மானியப்படைகள் பெல்ஜியத்தில் புகுந்து சென்றுகொண்டிருக்கிறதென்றும் ஸமாசாரம் வந்தது. அன்றையதினம் காலையிலேயே லண்டன் நகரிலுள்ள ஜர்மன் ப்ரதிநிதியின் மூலமாய், பெல்ஜியருடன் யுத்தாயுதங்களைக்கொண்டு போர் நிகழ்ந்தபோதிலும் பெல்ஜிய ராஜ்யத்தில் சிறிதாவது தாங்கள் எக்காரணம்பற்றியும் அபஹரிக்கிறதில்லையென்றும், இதை ப்ரிடிஷ் கவர்ன்மெண்டார் நன்றாய் நம்பலாமென்றும், இவர்கள் வார்த்தைகளின் உண்மைக்கு உதாரணமாய் தாங்கள் ஹாலண்டினிடம் நடந்துகொண்டதைக் கவனிக்கவேண்டுமென்றும், ஜெர்மனி

## முதல் ஸம்பவங்கள்

பெல்ஜியத்தின் ப்ரதேசங்களை அதிக்ரமித்தால் ஹாலண்டிற்கு ஹானிவிளைக்கவேண்டியிருக்குமென்றும், ஜெர்மானியப் படைகள் ப்ரஞ்சுக்காரரால் எதிர்க்கப்படும்படியாய் விட்டுவிடக் கூடாதென்றும், பெல்ஜியத்தின் வழியாய் ஜெர்மனியை எதிர்க்கும்படி ப்ரான்ஸில் வெகு மும்முரமாய் ஆலோசனைகள் நடந்து வந்திருக்கின்றன என்று தங்களுக்கு வெகு நன்றாய்த் தெரியுமென்றும், இவ்விஷயங்கள் ப்ரிடனுக்கு ஸ்பஷ்டமாய்த் தெரிவிக்கவேண்டுமென்றும் ஸமாசாரம் வந்தது.

இம்மாதிரி யாதொரு பாபமுமறியாத பெல்ஜிய நாட்டின்மீது படையெடுப்பதற்கு வெறும் புரளிகளை எல்லாம்பேசி ஏமாற்றினார்கள். அவர்களுக்குத் தங்கள் படைகள் பெல்ஜியம், லக்ஸம்பர்க் இவைகளில் புகுந்துவிட்டன என்று தெரிந்தபோதிலும் எல்லாவித சாக்குப்போக்குகளையும் சொல்லி காலத்தை ஓட்டினார்கள்.

ஆங்கிலேய கவர்ன்மெண்டாரும் ப்ரிடிஷ் ப்ரஜைகளும் யுத்தத்தை நிறுத்தி எவ்விதத்திலாவது ஸமாதானம் பேசவேண்டுமென்று பலவகை முயற்சிசெய்தும் பயன்படாமற் போயிற்று. கொடியபோரும் தொடங்கிவிட்டது. யுத்தத்திற்கு வரும்படியாய் எதிர்க்கக்ஷியும் கூறிவிடவே தானும் யுத்தத்தை நடத்தியே ஜயசாலியாய்த் திரும்பவேண்டியதென்று தீர்மானம் செய்யப்பட்டது. அயர்லாந்து ஸ்வராஜ்ய சச்சரவில் ஏற்பட்ட கக்ஷியின் தலைவர்களும் இனி, ஒரு பொதுப்பகைவன் தங்கள் முன்வந்து எதிர்த்தபோது தங்களுக்குள் வித்யாஸங்கள் பாராட்டுவதில்லை யென்றும், இந்த யுத்தவிஷயத்தில் தாங்கள் ஐகபத்யத்தைக்காட்டிப்

பகைவனை ஒழிப்பதில் முயற்சி செய்வோம் என்றும், வேண்டுமானால் அயர்லாந்திலிருந்து வேண்டிய ப்ரிடிஷ் ஸேனைகளைக் கூட்டிக்கொண்டு போகலாமென்றும், அயர்லாந்தின்கரைகளை பகைவர் படையெழுச்சிகளினின்று காப்பதற்கு இரு பிரிவினையைச் சேர்ந்தவர்களும் ஒன்று சேர்ந்து ஆயுதபாணிகளாய்த் தயாராய் இருப்பதாகவும், இவையெல்லாம் ஆங்கிலேயராஜ்யத்தின் நன்மையைத் தவிரவும் அயர்லாந்தின் எதிர்கால கௌரவத்தையும் நன்மையையும் உண்டாக்குமென்பதில் யாதொரு ஐயமுமில்லை யென்றும், வெகு உருக்கமாயும் கம்பீரமாயும் பேசி, தங்கள் ஒற்றுமை எக்காலத்தும் நிலைத்திருக்கும் என்பதைக் காட்டினார்கள். பாபம், ஜெர்மானியர் இவைகளை அறியவில்லை. தவிர யுத்தம் தொடங்கிற்றோ இல்லையோ, ப்ரிடிஷ் ராஜ்யம் முழுமையும் ஏககோஷத்துடன் இங்கிலாந்து எடுத்துக் கொண்ட கார்யம் எல்லாராலும் ஆமோதிக்கப்பட்டு அதற்கு வேண்டிய உதவியை மனப்பூர்த்தியாய்ச் செய்வதாக முன்வந்தன. கானடா, ஆஸ்ட்ரேலியா இவைகளிடமிருந்து ஒத்தாசையும், தேன் ஆப்ரிக்கா, நம் ஜன்ம பூமியாயும் ஆங்கில முடியில் உள்ள இணையில்லா காந்தி மணியாகிய பரதக்கண்டத்தினின்று உண்டான குதூஹல வார்த்தைகளும், தாம்தாம் தமது உடல்பொருள் ஆவிகளை ஆங்கிலமாதாவின் பாதங்களில் ஸமர்ப்பித்த கோலாஹல வைபவ விமர்சைகளின் சிறப்பையும் இங்கெடுத்தெழுதல் ஸாத்யப்படாதென அஞ்சி அவைகளுக்கென்று தனியே இடம்விட்டிருக்கிறோம். இங்கிலாந்திலும் மற்றும் ஐரோப்பியநாடுகளிலும் அச்சில

தினங்களுக்குள் நடந்த நாடகப்பெருங்கதையை ஒரு வாறு சுருக்கி எழுதுகிறோம்.

இங்கிலாந்தில் ஸேனுபலத்தை அதிகப்படுத்த வேண்டுமென்றும் ஆங்காங்கே சிதறுண்டுகிடக்கும் பகுதிகள் எல்லாம் கூடவேண்டும் என்றும் உத்தரவு பிறந்திருப்பதை ஜனங்கள்கேட்டு கூட்டங்கூடி தேச கீதத்தைப் பாடினார்கள். இரவு முழுவதும் லண்டன் பட்டணத்து ஜனங்கள் கூடி தேசகீதத்தைப் பாடிக் கொண்டும் "ப்ரிடானியா ஆட்சிபுரிக" என்னும் பாட்டையும் ப்ரஞ்சுதேச கீதத்தையும் கீர்த்தனம்செய்து கொண்டும், கொடிகளைப் பறக்கவிட்டுக்கொண்டும் பவனிவந்தார்கள். அரசனும் தம் தேவி, இளவரசர் ஸஹிதம் பக்கிங்ஹாம் அரண்மனையின் மேன்மாடித் தாழ்வாரத்தில் தோன்றி தங்களுக்காக அவர்கள் காட்டும் மரியாதை ஆடம்பரங்களை அங்கீகரித்தார். பார்லிமெண்ட் ஸபையும் தம் உத்ஸாகத்தை மிகுந்த பரபரப்புடன் காட்டிற்று. யுத்தத்திற்காக ஆயிரத்தைம்பது லக்ஷம் பவுன் சேகரிக்கலாமென்று ஐந்து நிமிஷநேரத்தில் காமன்ஸ் ஸபையில் தீர்மானிக்கப்பட்டது. வெகு பரபரப்புடன் யுத்தத்திற்கு வேண்டியவைகள் ஆயத்தம் செய்யப்பட்டன. யுத்தத்தில் தேர்ந்த புலிகள்தாம் ஸைன்யங்களைத் தயார் செய்வதிலும் தலைமைவஹித்து அவைகளை நடத்துவதிலும் உத்யோகங்கள் கொடுக்கப்பட்டனர். இந்தியாவில் பிறந்து அதற்காக ஸுமார் நாற்பதுவருஷகாலம் உழைத்து போவர் யுத்தத்தில் கீர்த்தியடைந்து யுத்த விஷயங்களைக் கையாடுவதில் ஸமர்த்தரெனப்பெயர்பெற்று, தம் இனத்தார்போலவே

மதித்து, கண்ணிற்கருமணியாய் பாவித்து வந்த இந்தியராணுவங்களும் தம் சக்ரவர்த்தியினிடம் பரம விச்வாஸத்துடன் ஐரோப்பாவிற்கு வந்து தம் பிரதாபங்களை நிலைநிறுத்துவதைத் தன் கண்ணால் கண்டு களிகூரச் சென்று, சுத்தவீரருக்கே தகும் தகும் என்று சொல்லும்படியாய் ரணகளத்திலேயே தம் உயிரினை நீத்த லார்ட் ராபர்ட்ஸ் ஆலோசனை மேற்பார்வையின் கீழ், அவருக்குக்கீழ் உத்யோகம் வஹித்தும் இந்திய ஸேனாதிபதியாகவும் இருந்து கீர்த்திபெற்ற எர்ல் கிச்சனர் யுத்தமந்திரியாய் நியமிக்கப்பட்டனர். ரணகளத்திற்கே ஸேனாஸமூகங்களை நடத்தும் தளகர்த்தராக ஸர் ஜான் ப்ரேஞ்ச் என்னும் வீரர் நியமிக்கப்பட்டார். கப்பற்படைக்குத் தலைவராய் வைஸ் அட்மிரல் என்னும் பதவியிலிருந்த ஸர்ஜான் ஜெலிகோ என்னும் ப்ரக்யாதிபெற்ற தீரர் அமர்த்தப்பட்டார். நாம் முன்னே கூறியுள்ளபடி தம்தம் சொந்த துறைமுகங்களுக்குச் செல்லத் தயாராயிருந்த கப்பற்படைகள் 'யுத்தம் ஜெர்மனிக்கும் ப்ரிடனுக்கும் கிளம்பி விட்டது' என்று தெரிந்தபிறகு அப்படியே நிறுத்தப்பட்டதுமன்றி மாட்சிமைதங்கிய நமது மன்னரும் கப்பற்படைகளுக்கு தமது நாட்டு கப்பற்படையின் பழைய பேரையும் ப்ரக்யாதியையும் மறுபடியும் கொண்டுவருவார்கள் என்பதும், ப்ரிடனுக்கு நேரிட்டிருக்கும் கஷ்டகாலத்தில் அதைக்காப்பாற்றக் கூடியவர்கள் என்பதை அவர்கள் காட்டுவார்கள் என்பதும் அவரது நம்பிக்கையென்று உத்ஸாகமான செய்தியையும் சொல்லியனுப்பினார். கப்பற்படையிலுள்ள உத்யோகஸ்தர்களும் மற்று

வீரர்களும் மிகுந்த உத்ஸாகத்துடன் தம் பக்தியையும் தீரத்தையும் தெரிவித்தார்கள். பெல்ஜியம், ப்ரான்ஸ் முதலிய தேசங்களிலும் இதேமாதிரி ப்ரஜைகளும் அரசாங்கத்தாரும் சற்றேனும் பின்வாங்காது ஏகோபித்து ஜெர்மனியின் அக்ரமவழிகளையும் கொடிய எண்ணங்களையும் ஒருபொருட்டென மதியாமல் யுத்த முஸ்தீப்புகள் செய்துவந்தனர். பெல்ஜிய ஆலோசனை ஸபையில் கூடியுள்ள ஜனப்ரதிநிதிகளை நோக்கி பெல்ஜியமன்னர் "நம் நிலத்தின்மீது வரும் படைகளை நாம் எதிர்த்து நிற்கவேண்டியதாயிருப்பின் நாம் எவ்வளவு யுத்த ஸந்நாகத்துடனும் எவ்வளவும் இழக்கவேண்டியதற்கு தயாராகவும் இருக்கிறோம். நமது நாட்டின் மேலான நன்மையைக் காக்கவேண்டியே தைரியத்துடனும் ஒற்றுமையுடனும் ஓரேபிடியாய் நாம் தடுத்துவரவேண்டியதே நம் கடமையாய் ஏற்பட்டிருக்கின்றது" என்று வெகு உருக்கமாயும் கம்பீரமாயும் பேசினார். ஸபையில் உள்ளவர்கள் வெகு கவனத்துடன் தம் மாசராது வார்த்தைகளைக் கேட்டு கரகோஷம் செய்து குதூஹலமடைந்ததுமன்றி தம் தேசத்தைக் காப்பதன் செலவுக்காக எண்பது லக்ஷம் பவுன் சேகரிப்பதற்கு விடைகொடுத்தனர். ப்ரான்ஸிலும் இதேமாதிரியான ஸம்பவங்கள் நேர்ந்தன. ப்ரான்ஸின் ஆலோசனைஸபையில் ப்ரான்ஸ் போருக்கு எவரையும் அழைத்ததில்லை என்றும், நியாய நடுவு நிலைமைகளையே எப்பொழுதும் அபேக்ஷித்துள்ளது என்றும், அபாண்டமான கேவலம் மிருகத்தன்மையான கெட்ட எண்ணங்களை மனத்தில் வளர்ந்துவந்த பழிகளை தன்மீது ஜெர்மனி சுமத்

துவதாகவும், கடைசிவரையும் இப்பாழும் போரை நிறுத்துவதற்கு ப்ரம்மப்ரயத்னம் செய்துவந்ததாக வும், இக்கொடியபோருக்கு ஜெர்மனியே உத்தரவாதி யென்றும் ப்ரான்ஸ்தேசத்து ப்ரஸிடெண்ட் ஆகிய ரேமண்ட் பாயின்கேரிடமிருந்து வந்த ஸமாசாரம் சொல்லப்பட்டு யுத்த ஸந்நாகங்கள் செய்யப்பட்டு வந் தன. அனேக ப்ரஞ்ச் வீரர்கள் தம் தேசத்திற்கு உதவி யாகும்பொருட்டு படைகளில் சேர்ந்தார்கள். ப்ரஞ்ச் ஸேனைத் தலைவர் ஜாப்ரே என்பவரும் போர்முனைக் குத் துரிதமாய்ச் சென்றார். இவைகள் இப்படியிருக்க ஜெர்மனியிலும் இதேமாதிரியாக விஷயங்கள் அரங் கேற்றப்பட்டன. ஆகஸ்ட் மீ 4வ ரீச்ஸ்டாக் என்னும் ஸபையில் ஜெர்மன் சான்ஸலர் பின்வருமாறு பேசி னார் :—" கனவான்களே! நமக்கு அத்யாவச்யமான நிலைமை ஒன்று ஏற்பட்டுவிட்டது. அத்யாவச்யமென ஒன்று ஏற்பட்டபொழுது அதற்கு ஏதாவது சட்டம் பேச முடியுமா! நமது ஸேனைகள் லக்ஸம்பர்க்கை அடைந்துவிட்டன; ஒருக்கால் (அவருக்கு உண்மை யாய் அது முடிந்துவிட்டது என்று நன்றாய்த்தெரியும்) பெல்ஜிய நிலத்திலும் கால்வைத்து இருக்கின்றன. ப்ர புக்களே, அது தேசாதேச சட்ட நிபந்தனைகளுக்கு விரோதம்தான். ப்ரான்ஸ்தேசம் பெல்ஜிய நடுவுநிலை மையைத் தன் பகைவர் மதித்து வரும்வரையில் தானும் மதித்துவருவதாக ப்ரஸ்ஸல்ஸ் நகரத்தில் ப்ரஞ்ச் கவர்ன்மெண்டார் சொல்லியிருக்கிறார்கள் என் பதும் வாஸ்தவம்தான். ஆனபோதிலும் ப்ரஞ்சு காரர் படையெடுக்கத் தயாராயிருந் திருக்கிறார்கள்

என்று தெரியும். ப்ரான்ஸ் காத்திருக்கக்கூடும், நம் மாலோ அது முடியாது. நம் ஒருபாகத்தில் கீழ் ரய்ன் நதியின்மேல் ப்ரஞ்சுகாரர் எதிர்த்து வருவார்களா ஞல் நமக்கு எவ்வளவோ ஸங்கடங்கள் உண்டாகும். ஆகவே லக்ஸம்பர்க், பெல்ஜிய அரசாங்கங்கள் நியாய மாய்ச் செய்த மறுதளிப்புகளைத் தள்ளிவிடும்படி நமக்கு நேரிட்டிருக்கிறது. நம் ராணுவநோக்கங்களை முடித்துவிட்டபிறகு நாம் செய்த அக்கிரமத்தை—நான் பஹிரங்கமாய்ச் சொல்லுகிறேன்—தீர்த்து ஸரிப் படுத்திவிட முயற்சிசெய்வோம். நம்மைப்போல் பய முறுத்தப்பட்ட எவனுவது—பயமுறுத்தப்பட்டு தனக் கென்றே சொல்லத்தகும் உயர்ந்த உரிமைப்பொருள்க ளுக்காகப் போர்புரிபவன்—எப்படி கஷ்டப்பட்டு முடிப்பது என்ற ஒரே ஒரு எண்ணத்தைத்தான் கொண்டிருப்பான்."

இவ்வாறு ஜெர்மானியரே தாங்கள் செய்வது தப்புதான் என்று அறிந்திருந்தார்கள்.



# நான்காம் அதிகாரம்

## நகர்க் குழப்பங்கள்

ஜெர்மனி யுத்தத்திற்கு வெகுகாலமாய்த் தயாராய்க்கொண்டே வந்திருக்கிறது என்று முன்னமேயே குறிப்பிட்டிருக்கிறோம். யுத்தம் ஆரம்பமாவதற்கு வெகுநாளைக்குமுன்னமேயே ஜெர்மன் பத்திரிகைகள் இனிவரும் கஷ்டங்களை எதிர்பார்த்து எல்லாவற்றையும் சேகரித்துவைத்துக்கொள்ள வேண்டுமென்று முழக்கம் செய்துவந்தன. தவிரவும், ரஷியாவுடன் யுத்தம் நேரிடுமானால் அது பகவானுக்குத் திருப்திகரமாக இருக்குமென்றும் பறையறைவித்தன. ஆகவே ஆஸ்ட்ரியாவுக்கும் ஸெர்வியாவிற்கும் உண்டான சச்சரவுகளைப்பற்றியும், ஆஸ்ட்ரியா ஸெர்வியாவின்மீது படையெடுக்கச் செய்த முயற்சிகளையும் கேட்டபோது அந்த ராஜ்யத்திலுள்ள ப்ரஜைகள் எல்லாரும் ஆனந்தப் பேய்க்கூத்தாடினார்கள். ரக்தவெறிகொண்டு எங்கும் திரிந்தார்கள். ஜெர்மானியர் மிக்க நாகரிகமடைந்தவர்; எல்லாவித கல்விகேள்விகளிலும் பயிர்ச்சிபெற்றவர் என்று பெருமையுடனிருந்த அநேகருக்கு இதைக்கண்டு ஆச்சரியமுண்டாயிற்று. இவ்வளவுதானா? இதற்குத்தான் ஆச்சரியமா? பின்னால் ஜெர்மானியர் செய்த அத்புத விஷயங்களைக்கண்டால்—கேட்டாலேபோதும்—ஆச்சரியம் மாத்திரமா? இவர்கள் எடுத்த மனுஷ்ய ஜன்மத்தைக்குறித்து துக்கிக்கவேண்டும். சண்டையின் ஆரம்பத்தைக்கேட்டதும் ஜனங்கள் திரள்திரளாய் பேர்லின் நகரத்தின் ப்ரதான தெருக்க

ளில் கும்பல்கூடி கோலாஹலம் செய்துவந்தார்கள். தெருக்களைச்சுற்றி அநேக ஊதுகுழல்களை முழங்கிக்கொண்டு பேரிரைச்சல் செய்துவந்ததும் தவிர, வெளி மைதானங்களில் தங்கள் குதூஹலத்தைக் காண்பித்தார்கள். ஸெர்வியக் கொடிகளைக் கொண்டுவந்து தெருக்களில் தீப்பற்றவைத்ததுமன்றி அவ்வூரில் குடியிருந்த ஸெர்வியரது வீடுகளை இடித்து நாசம்செய்து அவர்களை உபத்திரவம்செய்து அவமானப்படுத்தினார்கள். ஸெர்விய ப்ரதிநிதியிருக்கும் வீட்டையழிக்க அவர்கள் செய்த ப்ரயத்னம் போலிஸ்காரரால் தடுக்கப்படவேண்டியதாயிற்று. ரஷியர்களைக் கண்டாலே வைது அடித்துத் துரத்தினார்களாம்.

ஜனங்கள்செய்த அக்ரமங்களைப் போலீஸார்வந்து தான் அடக்கவேண்டுமென்ற அவசியமும் நேரிட்டுவிட்டது. இங்கிலாந்திலும் மற்றராஜ்யங்களிலும் வ்யாபாரம், தொழில்கள், பணச்செலவு முதலியவைகள் ஏற்பட்ட பலவித மாறுதல்கள்போல ஜெர்மனியிலும் ஏற்படலாயிற்று. ஸாதாரண—பாமர ஜனங்கள் சண்டையில் ஈடுபட்டுள்ளவர்களாயினும் தங்கள் தொழில்கள், பண்டங்கள், மற்றும் பற்பல வியாபாரங்கள் ஆகிய இவைகளில் உண்டான கொடிய ஸம்பவங்களைக் கண்டவுடனே திகிலடைந்து தம்தம் ஸொத்துக்களைக் காப்பாற்றும்படியாயும் வேண்டிய ஸாமக்ரியைகளைச் சேர்க்கும்படியும் படாதபாடெல்லாம் பட்டார்கள். ஜெர்மானிய ஜனங்கள்—குடியானவர்கள்—ஸாதாரணமாய் வேலைசெய்து பிழைத்துவரும், யாதொரு பாபமுமறியாத ஜெர்மானியர்—இந்தப்

போருக்கு உத்தரவாதியரல்லரே! பணக்கொழுப்புப் பெற்று, கௌரவஸ்தானங்களையடைந்து ராணுவ பலத்தைப்பெற்று, வணங்காமுடியென்று பலரும் இகழும்படியான ப்ரஷியா தேசத்து ராணுவஜாதியாரே இந்தப்போருக்கு முன்வந்தவர்கள். தமக்கு வியாபாரம் வேறு கிட்டாமல் யுத்தாயுதங்கள் செய்து உலகத்தில் தம்மோடொத்த தம்மினத்தார்களை யழிப்பதற்கு வழி தேட முயன்ற பெரிய வர்த்தகர்களும், அவர்களுக்கு உடந்தையாய் இருந்து தாம்கற்ற நற்சாஸ்திரங்களை துர்வழியில் விநியோகம்செய்த சாஸ்திர விற்பன்னர்களும் இவர்களுக்கு இடங்கொடுத்த பேராசைத் துரைத்தனத்தாரும் இப்போரை ஆரம்பத்திலேயே நிறுத்தியிருக்கலாம். அவ்வாறு எவராவது முயன்றதாக ஒன்றும் தெரியவில்லை. ஜெர்மானிய சக்ரவர்த்தியின் மூத்தகுமாரரே இந்தப் பெரும் யுத்தநெருப்பை மூட்டினதாகக் கூறப்படுகிறது. ஜெர்மன் சக்ரவர்த்தி, தம்மகனைப்போல வெளிப்படையாய் ஒன்றும் முதலில் சொல்லாவிடினும் தாம் ஸமாதானம் பேசுகிறது போலவே கடைசிவரையிலும் காட்டியிருந்து திடீரென தம் நிஜஸ்வரூபத்தைக் காட்டிவிட்டார். இதற்கு முன் 1870-ம் வருஷத்தில் ஜெர்மனி ப்ரான்ஸ் இவைகளுக்குண்டான போரில் நடந்தவைகள்போல எல்லாவற்றையும் நடத்தவேண்டுமென்பது அவர் எண்ணம். அதுபோலவே முதலிலிருந்துகடைசிவரையில் நடத்தி வந்தார். வடக்கே தம் விநோத யாத்ரையிலிருந்து அவர் ஜெர்மனி வந்துசேர்ந்ததும் எல்லா விஷயங்களையும் தம் மந்திரி பிரதானிகளிட மிருந்து கேட்டறிந்து

ஆலோசனைசெய்து எல்லாவற்றையும் தயார் செய்தார். ரஷியாவின் நடவடிக்கைகளைக் கேட்டபின்பே தாங்களும் யுத்தத்திற்குத் தயார்செய்வதாகச் சொன்னார்கள். ரஷியரின் எண்ணங்கள் இன்னின்னவை என்று தாம் எப்படியோ கண்டுபிடித்து விட்டதாகப் பெருமை பேசினார்கள். இப்படி இரண்டொரு நாள் சென்றன. ரஷியாவிற்கும் ஜெர்மனிக்கும் யுத்தம் கிளம்பிவிட்டது என்று கிரமமாய் வெளிப்பட்டபிறகு பேர்லின் நகரத்திற்கு கெய்ஸர் வரப்போகிறார் என்று ஒரு விளம்பரம் வெளிவந்திருந்தது. ஜனங்கள் இவைகளைக்கேட்டு தம் வேலை என்னவாயிருந்தபோதிலும் சிறிதேனும் கவனியாது தள்ளிவிட்டு தலைநகரான பெர்லின் வந்து சேர்ந்தார்கள். எக்காலத்தும் அவ்வளவு அதிகமான கும்பல் அங்கு சேர்ந்ததில்லை. எள் ளுபோட்டால் எள்ளு விழாது என்றே சொல்லவேண்டும்; குறிப்பிட்டநேரத்தில் சக்ரவர்த்தியின் வண்டி வந்துகொண்டிருந்தது. அதைக்கண்டதும் ஜனங்கள் ஆனந்தமடைந்து ஆரவாரம்பண்ணி கரகோஷம் செய்தார்கள். கெய்ஸரைக் காணும்போதெல்லாம் பெருமையாய்ப் பேரிரைச்சலிட்டார்கள். வெகுநாளாய்த் தான் வந்திராத பெர்லின் அரண்மனையில் புகுந்தார்.

ஜெர்மன் சக்ரவர்த்தி ராஜதானி வந்துசேர்ந்து நாட்டில் யுத்தம் கிளம்பிவிட்டதென்று தெரிவித்தவுடன் ஸேனைகளை ஒன்று சேர்க்கவேண்டுமென்னும் உத்தரவு பிறக்குமென்று எதிர்பார்த்தார்கள். அப்படி ஒன்றும் நடக்கவில்லை. எல்லாம் ரஹஸ்யமாயும் துரிதமாயும் நடத்தப்பட்டு ஜனங்களுக்கு ஒருவித ப்ரமை

யையும் ஆச்சர்யத்தையும் உண்டுபண்ணவேண்டு மென்று காத்திருந்தார்கள். அன்றையதினம் மாலை நாலரைமணிக்கெல்லாம் நகர பரிபாலன ஸபையின் ஆட்சிநிறுத்தப்பட்டது. ராணுவ அரசாங்கம் ஏற்பட்டது. எல்லாக் கச்சேரிகளும், பாங்கிகளும், ஸ்டேஷன்களும், அரண்மனைகள் மண்டபங்களும் கையில் கத்திகள் ஏந்திய போர்வீரர்களால் தாக்கப்பட்டன. எங்கு பார்த்தாலும் ராணுவ அமுலாகவேயிருந்தது. இதைக் கண்டதுதான் தாமஸம். பெர்லின்நகர் வாஸிகளில் சில ஆறுயிரம் பேர் அரண்மனை வாயிலை யடைந்தனர். நடக்கப்போகும் விஷயங்களை அவர்கள் முன்னரே அறிந்தனர்போலும். அங்கு கண்கொட்டாமல் மஹா கவனத்துடன்யாரையோ எதிர்பார்ப்பவர்போல்நின்று கொண்டிருக்கவும் அதற்கேற்ப ஜர்மன் சக்ரவர்த்தி தம் அரண்மனை மாடித் தாழ்வாரத்தில் தம் குடும்ப ஸஹிதம் தோன்றி ஜனங்களுக்குக் காட்சியளித்தார். இவர்களைக்கண்ட ப்ரஜைகள் உடனே கரகோஷம் செய்து ஆரவாரித்தனர். அவர்களை அடக்கவும் முடியாதுபோல் காதுசெவிடுபடும் போலிருந்தது. கடைசியில் அடால்பர்ட் என்னும் அரசகுமாரன் தாழ்வாரத்தினின்றும் முன் வந்து இரண்டுகைகளையும் தூக்க உடனே மழை ஜோவென்றுபெய்து ஓய்ந்ததுபோல் ஆரவாரமும் அடங்கிற்று. உடனே எதிரே கூடியிருக்கும் கூட்டத்திற்கெல்லாம் தெளிவாய்க் கேட்கும்படியாக கணீர்கணீர் என்னும் த்வனியில் மிகவும் தெளிவாகவும் உருக்கமாகவும் கெய்ஸர் பேசினார் :—“ என்ன கொடிய தினம்! என்ன கெட்டவேளை! நம்மேல் தள்

ளப்பட்டிருக்கிற இந்த கண்டமானது எந்த ராஜ்யதந்திரியின் செய்கையாலுமன்று. ஜெர்மனியை வெகு காலமாய்ப் பின்பற்றிவந்தவர்களது பொறுமையின் பலனாய் இப்படி வந்திருக்கிறது. அஸம்மதத்துடன் நான் வாளேந்தவேண்டியிருக்கிறது. இந்தக் கடைசி நிமிஷத்தில் நம் எதிரிகளோ நான் ஸ்வாதீன சித்தத்திற்குக் கொண்டுவரச்செய்யும் ப்ரயத்னங்கள் வியர்த்தமாய்ப் போனால், எல்லாம் முடிந்த பிறகு நம் வாளாயுதத்தை கண்ணியத்துடன் உறையிற்போடும்படி, பகவான் அருளால், அப்படி அவ்வாயுதத்தை நாம் உபயோகிக்க வேண்டும் என்று நம்புகிறேன். இந்த யுத்த விஷயமாய் அளவிறந்த பணம், உயிர் இவைகளை நாம் இழக்க வேண்டிவரும்; ஆனபோதிலும் ஜெர்மனியின் கோபத்தை மூட்டிவிடுதல் என்பது என்னவென்று நம் பகைவருக்குக் காண்பிப்போம். நான் உங்களுக்காக கடவுளை மன்றாடுகிறேன். நீங்கள் எல்லாரும் ஆலயம் சென்று முழந்தாளிட்டு நம் வீரர்கள் அடங்கிய ஸைன்யத்திற்கு உதவும்படி பகவானைப் பிரார்த்திப்பீர்கள்.''

இம்மாதிரி பேசிவிட்டுச் சென்றதும் கும்பல் கொஞ்சம் கொஞ்சமாய்க் கலைந்தது. அரண்மனையிலிருந்து அரசகுடும்பத்தாரும் ஒவ்வொருவராய் தத்தம் இடங்களுக்குச் சென்றனர். சக்ரவர்த்தி மாத்திரம் சென்றதாகத் தெரியவில்லை. அன்றைய இரவெல்லாம் ஜனங்களுக்கு மிகவும் கலக்கமும் ஆச்சரியமும் இடையிடையே மாறிமாறி வந்துகொண்டேயிருந்தன. எல்லாரும் எப்பொழுது, எந்த நிமிஷத்தில் எது எப்படியாகுமோ என்று மனக்குழப்பமும் போர் நடக்கப்

போவதென்பதைக்குறித்து மனமகிழ்ச்சியும் அடைந்த வர்க ளானார்கள். இரவானபோதிலும் தெருக்களி லெல்லாம் ஜனங்கள் குறைந்தபாடில்லை. நாழிகையும் கொஞ்சங்கொஞ்சமாய்க் கழியலாயிற்று. ரஷியாவுக்கும் ப்ரான்ஸூக்கும் அனுப்பியிருக்கும் கடைசிவார்த்தை களுக்கு என்ன பதில் கூறுகின்றன என்பது அவர் களுக்குத் தெரியவேண்டுமென ஆவல் அதிகமாயிற்று. இந்த ஸந்தர்ப்பத்தில் இங்கிலாந்து என்ன செய்யும் என்ற பேச்சும் அதிகமாய்க்கேட்டது. ஜனங்கள் பற்பல விதங்களாய்ப் பேசிக்கொண்டார்கள். ரஷியா வுக்கு தூதர்களாய்ப்போனவர்கள் போய்ச் சேரவில்லை யென்றும், ரஷியர்களே இந்த யுத்த ஸமாசாரங்களை அடக்கிவிட்டார்கள் என்றும் வதந்தி பரவிற்று.

எங்கு பார்த்தாலும் ஜனங்களின் ஆரவாரமும் மோடார் முதலிய நவீன வண்டிகளில் ராஜாங்க உத்தி யோகஸ்தர்கள் போவதும் வருவதுமாகவேயிருந்தது. எப்பொழுதுதான் யுத்தத்திற்குக் கிளம்புவார்கள் என்று ஜனங்கள் எதிர்பார்த்தது வீணாகும்போலிருந் தது. அரண்மனையிலிருந்து ஒரு ஸங்கதியும் வெளி வருவதாகக் காணோம். ஜனங்கள் மறுபடியும் கலையத் தொடங்கவே மாணவப்பிள்ளைகளின் கூட்டங்கள்தாம் தென்பட்டன. அவர்கள் தேசகீதத்தையும், ஸ்வதே சாபிமானத்தைக்குறிக்கும் வேறு சில பாடல்களையும் பாடினார்கள். அப்பாடல்களின் ஒலியும் சிறிது சிறி தாகத் தாழ்ந்து அடங்கிவிட்டது. ஜனங்கள் அரண் மனையை நோக்கியவண்ணமாக இருந்தார்களே தவிர வேறு எதையும் செவிகொடுத்துக் கேட்பவராகக்

காணும். எப்பொழுது யுத்தம் உண்மையாகவே வந்து விடுமோவென்று சிலர் எதிர்பார்த்தார்கள். அரசன் யுத்தத்தில் ஜயத்தைவிரும்பி ஆலயங்களுக்குச் சென்று செய்யும் பிரார்த்தனை பூஜைகளையும் நிறுத்தி விடச் சொல்லப்பட்டிருக்கிறது என்று ஒரு வதந்தி திடீரென உண்டாயிற்றும். ஸ்திரீ ஜனங்களும், பாமரஜனங்களும் போர்நிகழவேண்டியதில்லையென் றும் கருத்தைக்கொண்டவராய் இந்த வதந்தி உண்மை யென்று சொல்லிவிடும்படியும் கெஞ்சிக்கேட்டுக்கொண் டார்கள். மாணவச்சிறுவர்களின் பாடல்களும் நின்று விடவே எங்கும் அமைதி நிறைந்திருந்தது. இப்படி யிருக்கும்போது திடீரென பெருங் காற்று எடுத்தது போலும் அதில் நாணற்புற்கள் அசைவதுபோலும் ஜனங்கள் இங்குமங்கும் அசைந்தாடி வெளியே வர முயன்றார்கள். அவ்விடத்தில் வர்த்தமான பத்திரிகை கள் விற்கும் சிறுவர்கள், கையில் அவைகளை வைத்துக் கொண்டு அவைகளின் பேரைச்சொல்லிக் கூவவும் உடனே அவைகளுக்காக ஜனங்கள் ஒருவர்மேல் ஒரு வர் விழுந்து அவைகளைப்பெற்றுக்கொள்வதில் கண்ணு யிருந்தார்கள். சிறிதுநேரத்திற்குள் அக்கூட்ட முழு தும் 'பேபர்' மயமாய் இருந்தது. அந்த வர்த்தமான பத்திரிகையில் தடித்த எழுத்தில் "ராஜ்யத்தில் ஆயுத பாணிகளாயுள்ள ஸைந்யங்கள் ஒன்று சேரும்படி சக்ரவர்த்தி ஆக்ஞாபித்திருக்கிறார்கள்" என்று எழு தப்பட்டிருந்தது. ப்ரஜைகளுக்கு ராஜ்யம் இருக்கும் நிலைமை நன்றாய்த் தெரிந்துவிட்டது. இத்தனைநாளும் சண்டையோ ஸமாதானமோ என்றிருந்தவர்கள் இப்

பொழுது போர்நிகழும் என்பதை அறிந்ததும் முன் போலவே தங்கள் தங்கள் வேலைக்குச்சென்றார்கள். முன் மூடியிருந்த கடைகளும், மண்டபங்களும், நாடக சாலைகளும் எல்லாம் திறக்கப்பட்டு அவ்வவர் தொழில்கள் கிரமமாக நடந்துவந்தன. ஆனால் இதற்கு முன்னும் பின்னும் நடந்த அமளியையும் ஜனங்களில் சிலரின் ஆரவாரத்தையும் ஆக்ராவேசத்தையும் மற்றும் சிலரின் பீதியையும் மனவிரக்கத்தையும் ஒருவரும் எப்பொழுதும் கண்டிருக்கமாட்டார்கள்.

இது நிற்க. அரண்மனைவாயிலில் கூடியிருந்த கூட்டமும் கலைக்கப்பட்டது. சக்ரவர்த்தி நிம்மதியாய்ச் சற்று இளைப்பாறினார். இவையெல்லாம் ஜெர்மன் அரசாங்கத்தார் முன் 1870-வருஷத்திய போரில் நடந்தது போலவே எல்லாசிறுவழிகளிலும் நடந்துகொண்டார்கள் என்பதைக் காட்டுவதற்காகவாம்! அன்றையதினம் நடந்த பகவத் பிரார்த்தனையே மிக்க உருக்கமானதாயும் ஜனங்களுக்குத் திருப்திகரமாயும் இருந்தது. ஸ்திரீபுருஷர்களும், போர்முனைக்குச்செல்லும் யுத்த வீரர்களும் அவர்கள் பந்துவர்க்கங்களுமாய் ஸுமார் முப்பதினாயிரம் பேர் ஓரகன்றமைதானத்தில் கூடவும் அதுவே யுத்தகளம்போல் காணப்பட்டது. அரண்மனையைச்சேர்ந்த ஓர் சாப்லென் (Chaplain) நடத்தவேண்டிய பூஜாபிரார்த்தனைகளைச் செய்ய வந்துசேர்ந்தார். "மரணபரியந்தம் நீ ஸத்தியமாய் மாத்திரம் இருப்பாயானால் ஆத்மாவிற்குரிய முடியை உனக்குச் சூட்டுவேன்" என்றுள்ள விஷயமாய் மிகுந்த உத்ஸாகத்துடனும் பரபரப்புடனும் உபன்யாஸம் செய்தார். ஆகா!



யுத்தகளத்தில் காயமடைந்தவர்களுக்கு ஆஸ்பத்திரியாய் உபயோகப்படுத்தப்பட்ட

ப்ரஸ்ஸல்ஸ் அரண்மனை



பார்லிமெண்ட் மஹாஸபை, லண்டன்

ஜனங்கள் இவைகளைக்கேட்டு 'என்ன மனமுருகினூர் கள்! பிஸ்மார்க்கின் சிலையினடியில் அமைத்திருக்கும் மேடையில் நின்றுகொண்டு கைகளை உயரத்தூக்கி பகவத் ப்ரார்த்தனையை ஸ்பஷ்டமாயும் கம்பீரமாயும் அந்தப் பெரிய கூட்டமுழுவதும் கேட்கும்படி சொல்ல வும், அங்கு கூடியிருந்தவர்களும் கூடவே சொல்லி முடித்தனர். இது முடிந்ததும், ராணுவ வாத்யங்கள் முழங்கின. மஹா நல்லகாரியங்களைத் தாம் செய்ய ஆரம்பிப்பவர்கள்போல் கெப்போலியனுடைய பயங்கர அரசாட்சி வாட்டர்லூவில் முடிந்தது என்று அறிவித்த கானமானது வாசிக்கப்பட்டது! இது முடிந்ததும் ஈக் கள்போல் மொய்த்துக்கொண்டிருந்த அச் சனத்திரள் நாலா திசைகளிலும் கலைந்துபோகத் தொடங்கிற்று. மின்சாரவண்டிகள், மோடார் வண்டிகள், பூமியின்அடி யில் செல்லும் புகைவண்டித்தொடர்கள் ஆகிய எல்லா வண்டிகளிலும் யுத்தத்திற்குச் செல்லவேண்டிய ராணு வவீரர்கள் நிரம்பியிருந்ததால் அவர்கள் எல்லாரும் தங்கள் வீடுகளுக்கு நடந்தேசென்றூர்கள். இதற்கு முன்னமேயே கூறியபடி நகரத்திலுள்ள நாடகசா லைகள், ஹோடல்கள், கடைகள், நர்த்தனசாலைகள் முதலிய எல்லாம் இப்பொழுது எப்பொழுதும் போலத் தத்தம் தொழிலில் புகுந்தன. எல்லாம் யாரோ ஒருவர் ஆக்ஞாபித்து நடக்கின்றதுபோலிருந்தது.

இது இப்படியிருக்க நகரத்திற்கு வெளியில் வேறு விதமான ஸங்கதிகள் நடந்துகொண் டிருந்தன. யுத்தயாரம்பித்துவிட்டு முற்றுகை நிலைமை யென்று வெளியானவுடனே ராணுவ அதிகாரிகள் தூண்டுத

வின்பேரில் முக்ய பத்ரிகைகள் எல்லாம் ஜெர்மன் ராஜ்யத்தில் உள்ள அந்நியர்களுக்கு விரோதமாய்ப் பேசி ஜனங்களின் பகைமையையும் பொருமையையும் கிளப்பிவிட்டன. நாட்டினுள்ளே ஒற்றுப்பார்க்கும்படியாயும் மற்று இருப்புப்பாதை, பாலங்கள், ஸ்டேஷன்கள், கச்சேரிகள், தபாலாபீஸுகள், தந்தி, டெலிபோன் ஆகிய இவைகளை நாசஞ்செய்வதற்கு வந்திருக்கும் அந்நிய நாட்டார்களைக் கண்டு சும்மாயிராமல் அவர்களைக் கண்டுபிடித்து அவர்கள் அந்தரங்கங்களை அறிந்து அவ்வந்நியர்களை ராணுவ அதிகாரிகளிடம் சேர்ப்பிக்க வேண்டும் என்றும் அவைகள் முறையிட்டன. இவைகளைக் கேட்ட, படித்த ஜனங்கள் எல்லாருக்கும் ஒரு வித வெறிபிடித்துவிட்டது. அந்நியநாட்டு ஒற்றர்களைப் பிடித்து அவர்கள் தண்டனை யடையும்படி செய்ய வேண்டும் என்ற எண்ணம் மண்டைக் கேறிவிட்டது. எவ்வளவு நாகரிகத்தை யடைந்தவர்களா யிருந்தாலும், எவ்வளவு ஸூக்ஷ்மபுத்தியை யுடையவர்களா யிருந்தாலும், எவ்வளவு தத்வசாஸ்திர நிபுணர்களா யிருந்தாலும், எவ்வளவு கல்வித் தேர்ச்சியைப் பெற்றவர்களாயிருந்தாலும் இந்தஸமயத்திலும் இதற்குப் பின்னும் கொண்ட வெறி அவர்கள் அநாகரிகத்தையும் மந்தபுத்தியையும் மிருகத்தன்மையையும் கொண்டுள்ள மக்களாயுள்ளார்கள் என்பதை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெரிவிக்கிறது. எந்த வேஷத்தில் இருந்தாலும் தன்னைச் சேர்ந்தவனை அறிவது மஹாகஷ்டமோ? எவ்வளவு பெரியமந்தையாயிருந்தாலும் பசுங்கன்று தன் தாயையறியும்; தாயும் கன்றை யறியும்,

என்று சொல்லியிருப்பது நமக்கு பிரத்தியக்ஷமல்லவா? இப்படியிருக்க ஜெர்மானியர் ஜெர்மானியரையே அறிய முடியவில்லை யென்று சொன்னால் அது நகைப்புக்கிடம் தானே ? ஒருஜெர்மன் உத்யோகஸ்தன் பழைய உடுப்புகளுடன் ஓரிடத்தில் நின்று கொண்டிருக்க, அவன் சண்டைக்கு முன் உத்யோகஸ்தர் தரித்துவரும் புதிய உடுப்பு இல்லாததால் ஜனங்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு அவமானப்படுத்தி அவன் உடைகளைச் சின்ன பின்னமாய்க்கிழித்து, போலீஸ் புலிகளிடம் ஒப்புவித்தனர். இவன் தான் பலானவனென்று சொல்லி ரூபித்த பிறகு 'ஒரு ஒற்றனாவது தப்பித்துப்போகாமலிருக்கும் படி இப்படி சில தவறுதல்கள் நேரிடுவது உத்தமம் தான்' என்று அவனுக்கு இரக்கமின்றி அறிவித்தார்கள். மற்ற தேசங்களிலும்ஒற்றர்களை இம்மாதிரி பிடித்து சிக்ஷைசெய்யவேண்டும் என்று முயற்சி செய்யவில்லையோ என்றால், ஆம், அப்படி பிரயத்னம் செய்தார்கள்; ஆனபோதிலும் ஜெர்மானியரைப்போல இவ்விதம் ஒருவரும் வெறிபிடித்துத் திரியவுமில்லை. 'ஒற்று வேட்டை' யாடவுமில்லை. அன்னியனோ இல்லையோ, சற்று கௌரவமான உடையைத் தரித்து தன் சட்டைப் பையில் குறிப்புப் புத்தகம் ஒன்று வைத்திருந்தால் போதும்; அதிலும் மோடார் வண்டிகளில் ஏதாவது ஒன்று அவனுக்கிருந்தால் அதிலும் உத்தமம். அவன் நாட்டில்புலனறியவந்த வேற்றுநாட்டு வேவுகாரன். இவனை அவசியம் தண்டிக்க வேண்டியது நியாயம் என்று இப்படி யெல்லாம் மனஸுக்கு வந்தபடி யெல்லாம் எண்ணினவர்களாய் அந்நியரை வருத்தினர்

கள். இவர்கள்செய்த அக்கிரமம் இது மாத்திரமா? முன்னமேயே நாம் கூறியுள்ளபடி நகர துரைத்தனம் ராணுவ அதிகாரிகள் கையில் அகப்படவும் அவர்கள் தலை பம்பரமாய்ப்போயிற்று; என்ன, எதிரில்வருபவர் கள்கூடவா தெரியாமல்போய்விடும்? சாலையின் ஓரங் களில்போகும் போர்வீரர்கள் எதிரில் ஸ்திரீகள் வந் தால் அவர்களுக்கு வழிவிட்டுவிலகாமலும், கூட்டங் களில் அப்படியே செய்தலும் தவிர அடிக்கவும் அடித் தார்கள் என்றும் சொல்லப்படுகிறது. நடக்கச் சக்தி யற்ற வயோதிகர்கள் இவர்களது வழியைவிட்டுவிலகச் சற்று தாமஸப்பட்டால் அவர்கள் வயோதிகத்தைக் கூடப்பாராட்டாமல் கீழ்பிடித்துத் தள்ளிவிட்டுப் போ வார்களாம். இம்மாதிரி ராணுவத்தில் உத்தியோகம் பெற்றுள்ள எவனும் தானே முக்கியமானவனென்றும் தானிட்டது சட்டமென்றும் தன் ராணுவ உடையில் லாதவர்கள் எல்லாம் அவமதிக்கப் பட்டவர்கள் என் றும் கருதலானான். இம்மாதிரியே போர் ஆரம்பித்து எல்லா நாடுகளும் கைகலப்பதற்கு முன்னிருந்த விஷ யமானால் யுத்தம் என்று நன்றாய்த் தெரிந்தபிறகு அத் தேசம் இருந்த நிலைமையை நன்கு அறிதல் ஸுலபம் தானே? ஆனபோதிலும் ஜெர்மானிய குண குணங்களை நன்றாயறிதற் பொருட்டு சில வர்த்தமா னங்களைக் கண்டெழுதுகிறோம்.

முன்னமேயே கூறியபடி அந்நியர் என்று கண் டாலேபோதும்; அவர்களுக்கு அவமானமும் சிறைச் சாலையும்தான் கதியென்று சொல்லாமலே அவர்கள் அறிந்துகொள்ளவேண்டியது. பழையகாலங்களில்கேட்

பார பாருமின்றி யிருந்ததினால் கள்ளர்கள் வழியில் வருபவர்களைக் கொள்ளையடித்து அவர்களைக் கொன்று விட்டதினும் கொடுமையான செயல்களைச் செய்திருக்கின்றனர். ஹா! ஹா!! என்னகஷ்டம். சண்டை ஏற்பட்டபிறகு எத்தனைபேர் ஆங்கிலேயர் தம்மனைவிமக்களுடன் இவர்கள் கையிலகப்பட்டு தம்மனைவி மக்களினின்றும் பிரிக்கப்பட்டு கொடிய ஹிம்ஸைகளுக்கு ஆளாயினர். தூதர்களையும் ராஜ ப்ரதிநிதிகளையும் ஹிம்ஸைசெய்யவும் அவர்களுக்கு எத்தகைய தீங்குகள் இழைக்கவும் கூடாது என்று நம் சாஸ்திரங்கள் முறையிடுவதின் எதிரொலியே போல மேல் நாடுகளில் பரவியுள்ள தேசாதிதேச சட்டங்களும் விதிகளும் கூறுகின்றன. இவைகளையும்மீறினார்கள் நாகரிகத்தேர்ச்சிபெற்ற ஜெர்மானியர். ஹாலண்டு எல்லையை நோக்கிப்பயணம் செய்துவந்த ஒரு ஆங்கில ப்ரதிநிதி தம் மனைவி மகன் இவர்களுடன் வழியில் நிறுத்தப்பட்டனர். அவர் மனைவியை வேறொரு சிறைச்சாலையில் அடைத்துவிட்டு அவரும் அவரது குமாரனும் காற்றுவெளிச்சமில்லாத ஓர் இருட்டறையில், கீழே படுப்பதற்கும் வசதியில்லாத ஓர் அறையில், தள்ளப்பட்டனர். இம்மாதிரி பல நாட்கள் அடைக்கப்பட்டு கடைசியில்—நல்லகாலம்—விடுவிக்கப்பட்டார்.

ஜெர்மனியிலுள்ள அனேக சுகவஸதியுள்ள நகரங்களுக்குச் சென்றவர்கள், போர் ஏற்பட்டதும் திரும்பி வர எண்ணியும் வழியில் தடைப்பட்டவராய்த் திண்டாடினர்; ராணுவத்தில் உத்யோகம் வஹிக்கக்கூடிய வயதாயிருந்தவர்கள் விசேஷமாய் நிறுத்தப்பட்டனர்.

இப்படி நிறுத்தப்பட்டுப் பலவித துன்பங்கள் அனுபவித்ததற்குக் காரணமாயிருந்தவர்கள் போலீஸ் உத்யோகஸ்தர்களும் கேவல மிருகத் தன்மைக்கும் முரட்டுத்தனத்துக்கும் பிறப்பிடமான ராணுவ அதிகாரிகளும் அவர்களின் கீழ்உள்ள போர்வீரர்களும் என்று தெரிகிறது. மெய்தான், எவ்வளவு படித்திருந்தபோதும் எப்பொழுதும் ராணுவத்திலிருந்துவிட்டு போலீஸ் முதலிய வேலைகளுக்குப் போயிருப்பவர்கள் அந்த ராணுவமுரட்டுத்தனத்தைக் காட்டுவது ஸஹஜமல்லவா ? நல்லகாலம்! ஸாதாரண ஸிவில் உத்தியோகஸ்தர்களாவது நன்ருய் நடந்துவந்தார்களே! அதுவே போதும். ஆனால் பிரிட்டிஷ் எம்பெஸி என்னும் ஆங்கிலேய ப்ரதிநிதியின் வாசலில் ஜனங்கள் செய்த அக்ரமங்களுக்கு என்ன பதில்? அடடா, என்னபுரளி, என்ன முட்டாள்தனம், குழந்தையை ஏமாற்றுவது போலவா ஏமாற்றப் பார்க்கிருர்கள்! அருகில் சில இங்கிலீஷ்காரர் ஜனக்கூட்டத்தின் மத்தியில் நாணயங்களை எறிந்துவிட அதனல் ஜனங்களுக்கு ஆத்திரம் பொங்கிவிட்டதென்று கூறினர்கள். ஆனலும் உண்மையில் இங்கிலாந்திற்கும் ஜெர்மனிக்கும் யுத்தம் ஏற்பட்டிருக்கிறது என்று தெரிவதற்கு மூன்றுநிமிஷத்திற்கு முந்தி அந்த இடத்திற்கருகில் ஜனங்கள் கிடையாது. இந்தப் போர் தொடங்கிற்றென்று தெரிந்தபிறகுதான் அனேக மாணவர்களும் மற்ற ஜனங்களும் இன்னும் அனேக ரஹஸ்ய ராஜ்ய தந்திரிகளுடன்கூட அங்குவந்து சேர்ந்தனர். இப்படியெல்லாம் நடந்திருக்கிறது உண்மையில். இதை ஒளிக்க ஏன் ஆயிரம் புளுகவேண்டும்? தங்கள்

கல்வித்தேர்ச்சியே இவ்வளவுதான் என்று ஒத்துக் கொள்ளட்டுமே? தங்கள் படிப்பு மிகவும் சிரேஷ்டமானது, ஆனால் இவர்களில் சிலருக்கு இந்தப் படிப்பு ஏறவில்லையென்று கூறுவானேன்?

பின் வரும் ஸம்பவங்கள் இவர்கள் நடத்தைகளை இன்னும் ஸ்பஷ்டமாய் எடுத்துக்காட்டுகின்றன :—

ஒரு ஆங்கிலேய கனவான் எம்ஸ் என்னும் துறைமுகப்பட்டணத்தில் தம்மனைவியையும் முறையே ஏழு, ஒன்பது, வயதுள்ள தம் மக்களையும் அவர்கள் வேலைக்காரியையும் விட்டுவிட்டு நார்வே தேசத்திற்கு விநோதமாய்க் காலங்கழிக்கச் சென்றனராம். யுத்தம் ஏற்பட்டதும் அவர் தம் மனைவி மக்களிடம் திரும்பிவரமுடியவில்லை. அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் அவர்களை நோக்கி, பயந்து ஓடவேண்டாமென்றும் சற்றுப் பொறுத்துப்போனால் ஸௌகர்யமாய்ப் போகலாமென்றும் சொன்னபோதிலும் வரவர கஷ்டங்கள் அதிகரிக்கவே அந்நகரைவிட்டு ப்ரஸல்ஸ் மார்க்கமாய் ரெயிலில் சென்று ஊர்போய்விடவேண்டுமென்று அவ்வாங்கில மாது தீர்மானித்தனளாம். அப்படியே மாலை நாலுமணி வண்டியில் புறப்பட்டார்கள். ஜெர்மனி எல்லையை அணுகினதும் ஒரு சிறு ஸ்டேஷனில் இவர்கள் இறங்க வேண்டுமென்றும் பெல்ஜியத்திற்கு வண்டிகள்கிடையாதென்றும் கூறினார்கள். ஆகையால் இவர்கள் இறங்கி பெல்ஜிய எல்லைக்குள்ளிருக்கும் ஒரு ஊருக்கு நடக்க வேண்டியதாயிற்று. ஆ! கஷ்டம் அன்றிரவு, ஒரே மழையாயிருந்தது. யுத்தம் தொடக்கமானபடியால் பற்பலதேச ஜனங்கள் அவ்வூரில் நிறைந்து நிற்கவும்

அனேகர் இடங்கிடைக்கப்பெறுமல் கொட்டுகிற மழையில் நனையலானுர்கள். இவர்களுக்குவந்த கஷ்டத்திற்குக் கணக்கில்லை; கையிலும் பணமில்லை. குழந்தைகளைக்கண்டு மனமிரங்கி ஒரு வீட்டில் இடங்கொடுத்தார்கள். நம் தேசங்களைப்போல அவ்வளவு தாராள மனஸும் தர்ம சிந்தையும் அங்கு ஏது? அவர்கள் தங்க விடுதிகொடுத்தற்காக, சில நகைகளை அப் பெண்மணி கொடுக்கலாயிற்று. வோர்வியர்ஸ் என்ற பட்டணம் சென்ருல் ஆஸ்டேன்ட் நகரை அடையலாமென்று சொல்லப்படவே ஒரு வண்டியை வாடகைக்கமர்த்தினுர்கள். இப்பொழுது இவர்களுடன் சென்றவர்கள் மூன்று அமெரிக்காநாட்டுப் பெண்மணிகளும், எழுபத்தெட்டு வயதுள்ள மெகன்ஸி என்னும் ஸ்காட்லண்ட்தேச கனவானும், ஜெர்மனியிலிருந்துவரும் ரோட்டில் பெல்ஜியத்திற்குப் போய்க்கொண்டிருக்கும் ஜெர்மானிய ஸேனைகளைக் கண்டார்கள். இவர்கள் தக்ஷணமே நிறுத்தப்பட்டார்கள். வண்டி பிடுங்கிக்கொள்ளப்பட்டது. இவர்கள் எல்லாரும் ஒரு கிராமத்திற்கு நடந்து சென்று காலத்தைப் போக்கினுர்கள். பிறகு பெல்ஜியம்வழியாய்ப் போகமுடியாதென்று அமெரிகர்கள் திரும்பி வந்தவழியே போய்விடுவதென்று தீர்மானித்தார்கள். மெகன்ஸி கிழவனுடையாலும் இந்த ஆங்கில மாது தம் குழந்தைகள் படும் கஷ்டத்தாலும் அப்படி திரும்பமுடியவில்லை. இப்படியிருக்கும் போது திடீரென்று அந்தக் கிராமத்தில் வெடிசப்தம் கேட்டது. அந்தஸ்திரீயும் குழந்தைகளும் தாம் இருந்த மேல்மாடியிலிருந்து கீழே ஒடி அறையில் புகுந்து



காமன்ஸ் மஹாஸபை, லண்டன்



லக்ஸம்பர்க நாட்டு மஹாராணி

கொண்டனர். மெகன்ஸியும் அவ்வீட்டுக்காரரும் அப்ப
டியே ஓடினர். கீழே வரும்போது பக்கத்தில் உள்ள
வீடுகள் தீப்பற்றி எரிவதைக் கண்டார்கள். இவர்கள்
வீட்டு மேன்மாடியிலும் இப்பொழுதும் துப்பாக்கி
குண்டுகள் விழுந்ததாகக் கேட்டது. சற்று நேரத்திற்
கெல்லாம் இவர்கள் ஜன்னல்களும் கதவுகளும் உடைக்
கப்பட்டதும் தவிர வீட்டிற்கே நெருப்பு வைக்கப்
படுவதையும் கண்டு திகிலடைந்தார்கள். குழந்தை
களை அழைத்துக்கொண்டு வீதியில் வரிசையாய்
நின்றுகொண்டிருக்கும் போர்வீரர்களிடம் சென்று
"எங்களைச் சுடப்போகிறீர்களா?" என்று ஜெர்மன்
பாஷையில் கேட்க இவளை ஒருபுறம் நிற்கும்படி உத்த
ரவுசெய்தார்கள். இவள் பின்னாலேயே அந்த வீட்டுக்
காரர் வந்தனர். அவரைக்கண்டார்களோ இல்லையோ
அந்தக்ஷணமே அவரைச் சுட்டுக்கொன்றனர். மெகன்ஸி
என்ற கிழவன் வாயிற்படிவழியாய் வந்துகொண்டிருப்
பதைக்கண்டு, அவர் ஒருபாபமுமறியாத ஒருபெரியவர்,
அவரைக்கொல்லவேண்டாம் என்று எவ்வளவு மன்று
டியும் ஒரே குண்டினால் அவருயிரைப் போக்கினர்.
இப்படிப் பலவித உபத்திரவங்களுக்கும் ஆளாகி வெகு
ச்ரமப்பட்டு கடைசியில் ஒரு டச்சுக்காரனுடைய உதவி
யால் இங்கிலாந்து வந்துசேர்ந்தனளாம். இதனினும்
கொடியதாய் இந்த ஜெர்மன் ராணுவங்கள் நடந்திருக்
கின்றனவாம். இங்கிலீஷ்காரர், பெல்ஜிய நாட்டார்,
ப்ரஞ்சுக்காரர், ரஷியர்கள் முதலிய எல்லா நாட்டா
ரும் ஜெர்மன் கொடுமைக்கும் அக்கிரமத்திற்கும் இலக்
கானார்கள். அவைகளை விவரித்தல் நம்மனதுக்கே அரு

வருக்கத்தக்கதாயும் நினைக்கவொண்ணு கொடுமை யினதாயும் இருக்கிறதால் இவ்வளவோடு நிறுத்தியுள்ளோம். பின்னுலே அவர்கள் செய்த அழிம்புகளையும் கொடுஞ் செயல்களையும் ஆங்காங்கே எடுத்துக் காட்டுவோம். முதலிலிருந்தே ஜெர்மன் ராணுவ அதிகாரம் பலத்திருக்கிறதென்றும் ராணுவத்தின் முன் நகர அதிகாரிகள் ஜபம் சாயவில்லையென்பதும் வெளிப்படை.

எங்கு அன்னியர்களைக்கண்டாலும் அவர்களைத் தக்க மரியாதையாய் நடத்தாமல் கொடுமையாகவே நடத்திவர வேண்டுமென்று அவர்கள் மனத்திலே நன்ருய்ப் பதிந்தது. அந்நியதேசத்தாருடைய கடைகள், வியாபார ஸ்தலங்கள், அந்நிய பதார்த்தங்கள்கூட அவர்களால் நிராகரிக்கப்பட்டன. இவைகள் ஸாதாரண காலங்களில் நடந்திருக்குமானுல் பார்க்கும் எவரும் ஏளனம்செய்து கைகொட்டுவார்கள். ஜனங்களுக்கு என்னமோ பித்தம் தலைக்கேறிவிட்டது என்றே சொல்லவேண்டும். கல்விச்சாலைகளில் இதுவரையில் படித்துவந்த அந்நியபாஷைகளும் நிறுத்தப்பட்டன என்று சொன்னுல் யார்தான் நம்புவார்கள். இம்மாதிரி யுத்தக்கிளர்ச்சியில் பலவித உணர்ச்சியால் ஆட்டப்பட்டது ஜெர்மனி தேசம்.

அத்தேசத்தின் மற்ளுெரு நிலைமையையும் நாம் கவனிக்கவேண்டும். சிலஸமயங்களில் இவர்கள் கண்டபடியெல்லாம் துள்ளிக் குதித்தபோதிலும் தாங்கள் மிகுந்த ஆர்வத்துடன்—ஆனுலும் அதிக வைராக்யம் இல்லாமல் தங்கள் நாட்டின் பெருமையைப்பற்றியும் வெற்றியைப்பற்றியும் எண்ணினுர்கள். நகர அதிகாரி

கள் தங்களால் கூடுமானமட்டும் வெளிதேசத்தி லிருந்து தம் நாட்டில் பிரயாணிகளாய் இருப்பவர்க ளுக்கும் அந்நியதேச ப்ரதிநிதிகளுக்கும் வேண்டிய ஸௌகர்யங்களைச்செய்துதான் கொடுத்தார்கள். ஆனு லும் யுத்தம் தொடங்கிய பிறகு எங்கும் ராணுவசட் டம் அமுலுக்குக் கொண்டுவரப்படுகிறதல்லவா ? மொத் தத்தில் நாட்டிற்கு உழைப்பதற்கு ஒருவரேனும் பின் வாங்கவில்லை. இதுவரையில் வாயால் இரைந்து சச்சரவு செய்துகொண்டு தெருக்கள், நாடகசாலைகள், பொது மண்டபங்கள், வியாபாரஸ்தலங்கள் ஆகிய இவைகளில் நிறைந்திருந்த ஜனத்திரள் கொஞ்சம் கொஞ்சமாய் குறையத்தொடங்கியது. உத்யோகஸ்தர்களும், வ்யா பாரிகளும், சிறு குமாஸ்தாக்களும், உபாத்தியாயர்க ளும், வண்டிக்காரர்களும் ஆகிய எல்லாரும் யுத்தத் திற்குத் தயாராஞர்கள். என்ன விநோதம்! மின்சார வண்டிகளைச் செலுத்துவதற்கும் அதில் டிக்கட் முத லானவைகள் கொடுத்து வருவதற்கும் ஸ்திரீகள் வந் திருக்கிறார்களே ? இம்மாதிரி எத்தேசத்திலாயினும் உண்டா ? இதற்குக் காரணம் என்ன ? பெர்லின்நகரத் தில் ஸுலபமாயும் விரைவாயும் செல்வதற்கு உதவி யானது இந்த மின்சாரவண்டிகள்தாம். இவைகளில் ஸுமார் ஆயிரம்பேர் முதலிலே யுத்தத்திற்குக்கிளம்பி விட்டார்கள். பிறகு இன்னும் இவர்கள் சென்றபொ ழுது வண்டிகளில் (கண்டக்டர், மோடார்மென்) வேலை களுக்குப் போர்முனைக்குச் சென்றவர்களின் மனைவிமார் களே நியமிக்கப்பட்டுச் சம்பளம்பெற்றார்கள். ஸாதா ரண வண்டிகள் ஓட்டுவதற்குக்கூட மனுஷ்யர்கள் இல்

லாதுபோய்விடவே வண்டிக்காரரின் மனைவிகள் வண்டி யோட்டுவதற்கு லைஸென்ஸ் பெற்றார்கள். இது இவ்வாறு இருக்க, வயல் வெளிகளில் அறுவடையான காலமாதலால் அதைக் கவனிப்பதற்கு மனுஷ்யர்களும் இல்லை. தேசத்திற்கு அவசியம் வேண்டியது, தான்ய வகைகள் தானே ? அதைச் சேகரிக்க கவர்ன்மெண்டாரும் அநேக வழிகள் ஏற்படுத்தினார்கள். எங்கெங்கு அறுவடைக்குக் கூலியாட்கள் வேண்டியிருக்கிறதோ அங்கங்கு வேண்டியவர்கள் சார்ஜ் இல்லாமல் போகலாமென்று தெரிவித்து அப்படியே கொண்டுபோய் விட்டார்கள். இதனால் கவர்ன்மெண்டுக்கு யாதொரு கஷ்டமுமில்லாமல் போய்விட்டது. யுத்தம் ஆரம்பிக்கவும் அநேக தொழிற்சாலைகளும், வியாபாரஸ்தலங்களும், மற்றும் அநேக சாலைகளும் மூடப்பட்டபடியால் அநேகர்—முக்யமாய் வேறொரு ஆதாரவுமில்லாமல் இருக்கும் ப்ரஜைகள்—வேலையின்றி பட்டினிகிடக்க நேரிட்டு பெரும் பஞ்சமே கவிந்து கொண்டிருப்பதுபோல இருந்தது. இம்மாதிரி அவஸ்தைப்படுபவர்களுக்கு ஏதோ வேலைகொடுத்து வந்து உதவவும் இரண்டுவிதத்தில் அது நன்மையாய் முடிந்தது. ஜனங்கள் பட்டினிகிடந்து இறவாமலிருக்கும்படி செய்ததும் அதே ஸமயத்தில் எல்லா ஜனங்களுக்கும் இத்தகைய தருணத்தில் அவசியம் சேகரித்து வைக்கவேண்டியதைச் சேர்ப்பித்ததும் கவனிக்கத்தகுந்தன. இந்த ஸாகுபடி விஷயத்தில் அவர்கள் மிகவும் அக்கறையாய் இருந்தனர். வெளி நாடுகளிலிருந்து அவர்களுக்கு வேண்டியவஸ்துக்கள் வராமற்போய்விடவே அவர்கள் பாடு அம்பலமாயிற்று.

# நகர்க் குழப்பங்கள்

ஆங்கிலேய கப்பற்படைகள் அவர்கள் நாட்டிற்குள் ஸாமான் கொண்டுவரும்படியான கப்பல்களைத்தடுத்து கவளீகரம் செய்துவிடவும் படாதபாடெல்லாம் பட்டார்கள். இருக்கும் விளைபொருள்களைச் சேர்ப்பதற்கு ஆட்கள் இன்னம் தேவையாயிருந்ததைக் கண்டு யார் அகப்பட்டாலும் அவர்களைப் பிடித்தார்கள். ரயிலுக்கு அருகிலுள்ள ஜனங்கள் யாவராயிருந்தாரேனும் அவர்களை நாட்டுப்புறங்களுக் கனுப்பி வயல்களில் வேலை செய்யச்சொன்னார்கள். வயது வந்த ஆண்மக்கள்தாம் போர் முனைக்குச் சென்றிருக்கிறார்களே! இங்கு யார் இவர்களுக்குக் கிடைப்பார்கள்? பாபம், ஒன்றும் அறியாக் குழந்தைகளாயிருக்கும் பள்ளிக்கூடச் சிறுவர்களை வயல்களில் வேலை செய்யும்படி பலவந்தப் படுத்தினார்கள். இதுவரையிலும் கஷ்டமென்பதையறியாத பாலர்களும் ஒரு கம்பளியுடன் கிராமாந்திரங்களில் புல்லிலும் பனியிலும் படுத்துறங்கி நினைக்கவொண்ணாத் துன்பங்களை அனுபவிக்க ஆளாகினார்கள். இம்மாதிரி பலவித வழிகளை தாம் ஏற்படுத்தியிருக்கிறோம் என்று மகாசெருக்கடைந்து விட்டார்கள். அவர்கள் பட்டகஷ்டங்கள் அவர்களுக்கே தெரியவில்லை. வேலையில்லாதவர்களுக்கு வேலை மாத்திரம் ஜெர்மன் கவர்ன்மெண்ட் கொடுத்திருக்கா விட்டால் அவர்களுக்கு நேர்ந்திருக்கும் துன்பங்கள் வேறு எங்கும் நேர்ந்திருக்காது. சிறுபையன்கள் ஸ்திரீகள் முதல் ஏதாவது வேலை கொடுக்கப்பட்டார்கள். முற்கூறிய வண்ணம் யுத்தத்திற்குச் சென்றிருக்கும் வேலையாட்களுக்குப் பிரதியாய் இவர்களை எடுத்துக்கொள்ளப்

பட்டார்கள் என்றால் அத்தேசத்தின் நிலைமை எப்படி யிருக்குமென்பதை நேயர்களே அறிந்துகொள்ளலாம்.

தவிர, வரவர யுத்தத்திற்கு வேண்டிய வஸ்துக்களையும் ராஜ்யத்திலே உண்டாகக்கூடிய பொருள்களையும் வீணாக்கக் கூடாதென்று கருதி அவைகளை ஜாக்ரதை செய்யக்கூடிய வழிகளில் முயன்றுவந்தார்கள். ஜெர்மானியருக்குக் காரியங்களை முடிப்பதில்—அது எவ்வளவு கேவலமாய் இருந்து பிறரால் மதிக்கப்படாமற் போனபோதிலும்—அவைகளுக்குத் தகுக்கு செய்து எப்படியாவது பிறரைத் தம்வலையிற் சிக்கும்படி செய்யும் கெட்டிக்காரத்தனம் உண்டு. அதைப்பற்றி நாம் அதிகம் விவரிக்க வேண்டியதில்லை. அவர்களைக் காட்டிலும் அவர்கள்மீது ஆட்சிபுரியும் மன்னனுக்கும் அம்மன்னனுக்கு உபதேசம்செய்யும் மந்திரிமார்களுக்கும் புத்தி அதிகமாயிருக்கவேண்டியதன்றோ? ஆகவே, ஸாதாரண ஜனங்கள் திருப்திபடுவதற்கும் அதே ஸமயத்தில் யுத்த ஸாமக்ரியைகளில் ஒன்றும் குறைவுபடாம லிருக்கவும் சில விநோத ஏற்பாடுகளைச் செய்தார்கள். கொஞ்சகாலம் நீடித்து தேசத்தில் அமைதியே பொருந்தியிருந்து பலவித ஸௌகர்யங்களையும் அனுபவித்து வந்ததுடன் அநேக இன்பங்களையும் அவர்கள் ஏற்கெனவே நுகர்ந்து வந்திருக்கின்றனர். நாடகசாலைகளும், நாட்டிய மண்டபங்களும், பாட்டுக்கச்சேரிகளும், விநோத காட்சிகளும், உல்லாஸ வீதிகளும் நிறைந்திருக்கும் இப்பெரிய நகரத்தில் ஸாதாரணமாய் இரவு என்பதே கிடையாது என்னலாம். தெருவில் நடந்து செல்பவர்

களும், குதிரை வண்டிகளில்போகிறவர்களும், மோடார், ட்ராம், ஸைகிள், மோடார் ஸைகிள் இன்னம் இக்காலநாகரிகத்திற்கென்றே ஏற்பட்டுள்ளவாகனங்களின் மேல் ஊர்பவர்களுமாய் திரள் திரளாய் ஜனங்கள் இரவு முழுமையும் நடமாடும். யுத்தம் என்று ஏற்பட்டபிறகு தெருக்களில் எரியும் காந்த விளக்குகளும் மற்றபொது மண்டபங்கள் முதலிய மேற்சொன்ன இடங்களில் உள்ளவிளக்குகளும் இரவு இத்தனைமணிக்குமேல்அவிக்கப்படவேண்டும். இத்தனை மணிக்குமேல் இந்த கீத வாத்தியஸபைகள், நாட்டியமண்டபங்கள் முதலியவை மூடப்பட வேண்டும்; வாத்யகோஷ முதலானவை கூடவேகூடாது என்று கண்டிப்பான உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. இத்தகைய தருணத்தில் எல்லாவிதமான பாடல்களும் நாடகங்களும் ஸரியல்ல வென்றும் தேசாபிமானத்திற்குரிய — தேசாபிமானத்தைப் புகட்டத்தக்க—தேசாபிமானமே யுருவாயுள்ளதுபோல் உருக்கிப் பிழிந்தெடுத்த—கீதங்களும் நாடகங்களுமே நடத்தப்பட வேண்டுமென்றும், மற்றப்படி வெறும் உல்லாஸ மண்டபங்கள் வீணர்கள்கூடும் பொதுஸ்தலங்கள் ஆகிய இவைகளை மூடவேண்டியதென்றும் குறிப்பிடப்பட்டது. தவிர மின்சாரவிளக்கு விளம்பரங்கள், ஆகாய ஒளி விளக்குகள், ஏன், கடைகளில் கூட ஒளி அதிகமாயிருக்கக்கூடாது என்று ஏற்பாடாய்விட்டது. காஸ் (Gas) பெட்ரோல் (Petrol) இவைகள் செலவழிந்துவிடுமென்றும், மின்சாரசக்தி வீணாகக் கூடாதென்றும் கருதினார்கள்போலும். நாளாக ஆக ஆல்கோஹால் முதலிய சாராயவகைகள்கூட சாப்பிடக்கூடாது; அதிக

மாய் உபயோகிக்கக்கூடாதென்று கவனிக்கலானார்கள். இம்மாதிரியெல்லாம் செய்து தாங்கள் வெற்றியை விரைவில் அடைந்துவிடவேண்டும் என்று நம்பினார்கள். அதை எடுத்தும் சொன்னார்கள். எப்படியும் ஜெர்மனிதான் வெற்றிபெறுமென்றும், சீக்கிரத்தில் தாம் அதை அடையப்போவதாயும் பெருமைபேசினார்கள். எவ்வளவு ஜாக்ரதையாய் அவர்கள் விரோதிகளும் இருந்தார்கள் என்பதையும் ஜெர்மானியர் எண்ணம் எப்படி பலிக்காமற் போய்விட்டது என்பதையும் அடுத்தாற்போல் விசாரிப்போம்.

லண்டன் மாநகரம் யுத்தம் ஆரம்பித்தகாலத்தில் எப்படியிருந்ததென்பதை முன்னமேயே கூறியுள்ளோம். ஜெர்மனியின் ஜன்மவிரோதியாகிய ப்ரான்ஸ் தேசத்தின் தலைநகராய் அப்பொழுதிருந்த (தற்காலம் ப்ரான்ஸின் தென்மேற்கில் பிஸ்கே விரிகுடாவிலுள்ள துறைமுகமாகிய போர்டோ என்பது ராஜதானி) பாரிஸ் நகரின் நிலைமையைச் சற்று சுற்றிப்பார்க்கலாம். உலகத்தில் எப்பொழுதும் மனோகரத்தைக் கொடுக்கும் நகரங்களில் சிறந்து இதன் காட்சிகளைக்கண்டு களித்து வாழ்வாய் என்னும் ஆங்கில வசனத்திற்கு இலக்காய் விளங்கியுள்ள இப்பட்டணம் எப்பொழுதும்போலிராமல் மாறுதலடைந் திருக்கின்றது. முன்னைப்போல் களியாட்டுகள் இல்லை. ஆரவாரங்கள் கிடையா. ஜனங்கள் முகத்தில் ஈயாடக்காணோம். ஏதோ ஆழ்ந்த யோசனையுள்ளவர்களாய் அவர்கள் தோன்றுகிறார்கள். எங்கும் அமைதியே குடிகொண்டிருக்கிறது. வீதிகளில் முன்போலவேதான் ஜனங்கள் நடமாட்டம்

இருக்கிறது. ஆனாலும் அவர்கள் நினைப்பதை நாம் அறிவோமானால், அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்று கவனிப்போமானால், அவர்கள் அந்தரங்க எண்ணங்களும் அபிப்ராயங்களும் வெளியாகும். இத்தனை வருஷங்களாய்த் தாங்கள் மிக்க பயத்துடன்—ஆனால் ஆத்திரத்துடன்—எதிர்பார்த்துவந்த போரையே அவர்கள் நினைத்து, போரினால் விளையும் பொருட்சேதத்தையும் உயிர்ச்சேதத்தையும் மனத்தில் கொண்டிருக்கிறார்கள். எங்கு பார்த்தாலும் இதே பேச்சாயிருக்கிறது. என்றையதினம் அவரவர்கள் சைந்யங்களைச் சேரப்போகிறார்கள் என்று பேசி, எவ்வித கஷ்டம் வந்த போதிலும் பொறுத்து, தம் தேசத்தில் அந்நியர் படையெடுக்க வொட்டாமல் தடுத்துக் காக்க வேண்டும் என்ற எண்ணமே அவர்கள் மனதில் முன் வந்திருக்கிறது. எந்தச் சிறிய ஸம்பவங்களையும்பெரிதென மதித்துத் துள்ளிக்குதிக்கும் ப்ரஞ்சு தேசத்தார் இந்த ஸந்தர்ப்பத்தில் எல்லாப் பெருமைகளையும் அடக்கி அமைதியுடன் வேலைகளை நடத்திச் செல்வது மிகவும் ஆச்சர்யத்தை யுண்டுபண்ணுகிறது. யுத்தத்தில் எத்தகைய நஷ்டங்கள் நேரினும் அதை ஒரு பொருட்டென மதியாதிருக்கும்படி தம்மனத்தையும் உணர்ச்சிகளையும் உறுதிப்படுத்துகிறார்கள். "நான் நான்கு குழந்தைகளுடன் நாதனற்று நிற்பேன்!" என்று ஒருஸ்திரீ சொன்னதாகவும், "நமக்கு என்ன நேரிடுமோ?பகவானுக்குத்தான் தெரியும்" என்று வருத்தத்தைக் காட்டாமல் நிம்மதியுடன்மற்றொருத்தியும், "நமக்கென்ன, கவர்ன்மெண்டாருக்கன்றோ இதைப்

பற்றிய கவலை" என்று இன்னொருத்தியும், "நமக்கு வேண்டிய ஆகாராதிகளை அவர்கள்தான் கொடுப்பார்கள்" என்று வேறொருமாதும் கூறினதாக இந்நடவடிக்கைகளைப் பார்த்தவர்கள் கூறுகின்றனர். ஸ்திரீகள் இப்படியிருக்க, யௌவன பருவமடைந்த ஆண்மக்கள் சேருகின்ற இடங்களிலெல்லாம் "நீ என்றைய தினம் போகிறாய்?" என்னும் வார்த்தைகளையே அடிக்கடி கேட்கிறோம். ஆம், ஒவ்வொரு ரிஸர்வ் போர்வீரனும் ஸைன்ய ஸங்காகம் என்றுதெரிந்த இத்தனைநாளைக்குள் தான் பட்டாளத்தில் சேரவேண்டியது என்றிருக்கிறது. ஆனாலும் சிலர் உடனே புறப்படவேண்டியிருக்கும். ஒரு ப்ரைவேட் டெலிபோன் ஆபீஸில் உத்யோகம் பார்த்துவந்த ஒருவன் புன்னகைசெய்துகொண்டே "நான் ேல் நகரில் முதல்நாள் சேரப்போகிறேன்!" என்றனனும். அமைதியாய் வ்யாபார விஷயத்தையே கவனித்து வந்தவன் சிறிதுநேரத்திற்கெல்லாம் ஆயுத பாணியாய் எதிரிகள் திரண்டுவந்து வெகு மும்முரத்துடன் போர்செய்யக்கூடிய ரணகளத்திற்குச்செல்லுவதென்றால் எத்தகைய மாறுதல்! மிக்க உயர்ந்தபத வியை வகித்து ஸௌகர்யங்களையும் அனுபவித்து வந்தவர்கள்—இன்பம் அனுபவிப்பதற்காகவே சிருஷ்டிக்கப்பட்டவர்களோ என்று கூறத்தகும் சரீர அமைப்பைப் பெற்றவர்கள்கூட— ஒன்றையும் அலட்சியம் செய்யாததுபோல் "எனக்கு அடுத்தவாரம் ஸௌகர்யங்கள் அவசியம் குறைந்திருக்கப் போகின்றன— கையில் துப்பாக்கியும் முதுகில் மூட்டையும் கொண்டுள்ளவனாய்—வெளியின்கீழ் மழையில் நனைந்துகொ

ண்டு—நான் இரண்டாம்நாள் சேரப்போகிறேன்" என்றனனும். இதேமாதிரி வெவ்வேறு வேலைகளிலும் தொழில்களிலும் அமர்ந்திருந்தவர்கள் தத்தமக்கு ராணுவத்தில் தகுந்த உத்யோகஸ்தர்களைப் பொறுக்கியெடுத்ததுபோல்—ஒருவன் காலாட்படையிலும், மற்றொருவன் பீரங்கிப்படையிலும், இன்னொருவன் வாட்படையிலும் இப்படி எல்லாரும் அப்பெரிய யந்திரத்தின் பாகங்களாய் அமையத் தயாராய் இருந்தனர்—வரவர ரெயில்வே ஸ்டேஷன்களில்கூட மாறுதல்கள் காணப்பட்டன. ராணுவங்களை ஏற்றி யனுப்புவதற்குக்கூட இருக்கும் வண்டிகள் போதாமல் கால்நடைகள், குதிரை முதலியன ஏற்றும் வண்டிகளிலும், மண், ஸாமான் ஏற்றும் வண்டிகளிலும் ராணுவங்களை ஏற்றலானார்கள். ஸாதாரணப் பிரயாணிகளுக்கு வண்டிகள் அகப்படுவதே கிடையாது. சிலதினங்கள் வியாபாரச் சரக்குகள் ஏற்றியனுப்பும் வண்டிகளும் நிறுத்தப்பட்டன. இவை போதா வென்று மோடார் முதலிய வண்டிகளும் தேவையாயிருந்தபடியால் ஜனங்களுடைய ஸகலவித வாஹனங்களையும் கவர்ன்மெண்டுக்காகக்* கொடுக்க வேண்டியதாயிற்று. போர்வீரர்கள் ஊரைவிட்டுக் கிளம்பும்போது உண்டாகும் ஆரவாரத்தைக் காது கொடுத்துக் கேட்போம். ஆ! குழந்தைகள், பெண்மக்கள் இவர்களின் பரிதபிக்கத்தக்க நிலையும் அதே ஸமயத்தில் பின்னால் நின்ற ஆண்மக்கள் அவர்களுக்கு குதூஹலமுண்டாகும்படி செய்யும்கோஷமும் யார்மனதைத்தான் இளகச்செய்யா! தேசத்திற்கு வேண்டியவைகள் எல்லாம் ரயில்மூலமாயும் கப்பல் மூலமாயும்

வரவேண்டியிருப்பதாலும் அவைகள் இப்படிப்பட்ட ஸமயங்களில் கவர்ன்மெண்டார் கையில் இருக்கவேண்டியது அவசியமாதலாலும், ஜனங்களுக்கு உண்ண ஆகாரம் குறைந்து போயிருக்கும். வியாபாரம் என்பது எடுபட்டுப்போகும். அவ்வேளையில் ஜனங்களுக்கு ஆகாரம் சேர்ப்பதினிமித்தம் கவர்ன்மெண்டாரே முன் வரவேண்டியது அவசியம். வர்த்தமானப் பத்திரிகைகளும் நின்றுபோக வேண்டியதுதான்; இப்பத்திரிகைகளுக்கு வேலைசெய்பவர்களில் அநேகர் யுத்தத்திற்குப் போனால் இவைகளைக் கிரமப்படி பிரசுரஞ் செய்வது சிரமமல்லவா? ஆகவேதான் முக்யமாய் யுத்தவிஷயங்களைக் கவர்ன்மெண்டாரே பத்திரிகை விளம்பரம் (ப்ரெஸ் கம்யுநீக்) போட்டுத் தெரிவிப்பார்கள்.

இத்தகைய நானாவிதக் குழப்பத்திற்கெல்லாம் காரணம் ப்ரான்ஸை உடனே விரைவில் எதிர்த்து—தம் துணையாளர்வந்து உதவுவதற்கும், தானே தன் ஸைன்யங்களைச் சேர்ப்பதற்கும் சற்றாவது இடங்கொடுக்காமல்—எதிர்க்கவேண்டுமென்று ஜெர்மனி கொண்ட பேராலோசனையும், அந்த ஜெர்மனியைத் தம்நாட்டுள் நுழையவொட்டாமல் செய்யவேண்டுமென்றும், பழிக்குப் பழிவாங்கிவிட வேண்டுமென்றும் இருந்த ப்ரஞ்சுக்காரரின் வீராவேசக் கிளர்ச்சியும்தான். ஜெர்மனியின் எண்ணங்கள் எப்படி முதலிலேயே பயனற்றவையாய் முடிந்தன என்பதையும் அதை எப்படியாவது முடிக்கவேண்டுமெனச் செய்த முயற்சிகளையும் அடுத்த அதிகாரத்தில் விவரிப்போம்.



# ஐந்தாம் அதிகாரம்

## படையெழுச்சி

சிறுதுரும்பெனமதித்து அதன் ஸூக்ஷமத்தை யறியாத ஜெர்மானியர் அத்துரும்பு பலமான அறுக்க முடியாத கயிறாய்விட்டதைக் கண்டு திகைத்து நிற்கின் றனர். அதை அறுத்துவிடவேண்டும் என்று தம்பல மெல்லாம் போட்டு இழுக்கின்றனர்.

ப்ரான்ஸின்மீது படையெடுத்து பாரிஸ் நகரை ஓரே அடியில் கைப்பற்றவேண்டும் என்று எண்ணங் கொண்டு அதற்குவேண்டிய வழிகளை முன்னமேயே தயார் செய்தனரென்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அவர்கள் நவீன நாகரிகத்திற்குரிய சாஸ்திரங்களுக் கேற்ப ஏற்பட்ட யந்திரங்களையும் தந்திரங்களையும் கடைப்பிடித்து வந்திருக்கின்றனர். முதலாவது யுத் தத்திற்கு வேண்டிய தளவாடங்கள்: எதிரிகளைத் தொலைப்பதற்கும், அவர்களது கோட்டை கொத்தளங் கள், பாலங்கள், ஆகாயவிமானங்கள், கப்பல்கள், கப்பற் படைகள் இவைகளை நாசஞ்செய்வதற்கென்று ஏற்பட் டுள்ள நாநாவிதமான பீரங்கிகள், துப்பாக்கிகள், பல விதவெடிகுண்டுகள், இவைகளுக்கு வேண்டிய வெடி மருந்து, பகைவருக்கு யமன்போல் எங்கே எங்கே யென்று அவர்களைத் தேடிவரும் பலவித போர்க்கப்பல் கள், அவைகளின் உபகரணங்கள், உதவிகள், ஆகாய கமனத்திற்கும் அதை யனுஸரித்து நடத்தவேண்டிய தொழில்களுக்கும், வேண்டிய ஆயுதங்கள், தமக்கு வேண்டும்போது கட்டடங்களைக் கட்டவோ, பாலங்

கள் போடவோ வேண்டிய ஸகலமானவற்றையும் ஜெர்மன் கவர்ன்மெண்டார் வெகு நாட்களாய்ச் சேகரித்து வைத்திருக்கின்றனர். தவிரவும் இவ்வி தமான பொருள்களும் ஆயுதங்களும் உலகத்தில் மற்றதேசங்களுக்கும் இவர்களேதான் செய்துகொடு த்துவந்தார்கள். ஜெர்மனியின் மேல்பாகத்தில் ஈஸென் என்னும் பட்டணமொன்றுண்டு. அதில் க்ரூப் யுத்தாயுத சாலை என்னும் தொழிற்சாலை யொன்றிருக்கிறது. அங்குதான் எல்லாவித யுத்த தளவாடங்களும் செய் யப்படுகின்றன. உலகத்தில் இத்தகைய பெரிய சாலை களில் இதுவே முதன்மையானது என்று சொல்ல லாம்—ஆயுதசாலையின் பங்குக்காரர்களில் ஒருவரும் மானேஜரில் ஒருவருமாய் ஜெர்மன் கெய்ஸர் இருக் கின்றனராம். இவர் பார்வையின்கீழ்தான் இத்த கைய பயங்கரமான யுத்தாயுதங்கள் செய்யப்பட்டு வந் திருக்கின்றனவாம். இதில் நடக்கும் வேலைகளில் சில, ஜனங்களுக்குக்கூடத் தெரியாதென்று சொல்லப்படு கிறது. ஒருவித பீரங்கியைப்பற்றி சண்டைக்குமுன் தெரிவித்தபொழுது அந்நாட்டார்களே ப்ரமை யடைந் தனராம். இத்தகைய ஆயுதங்கள் முதலியவைகளின் விவரம் பின்னால் தனியே தெரிவிப்போம். கப்பல்க ளும் செய்யப்பட்டு போர்தொடங்குவதற்குச் சில நாட் களுக்கு முன்புதான் பால்டிக் கடல், வடகடல் இவை யிரண்டையும் சேர்த்து ஜெர்மனிக்கு ராணுவ துறை முகங்கள் அனுகூலமா யிருக்கும்படி செய்யவேண்டி கீயல் வாய்க்கால் வெட்டித் திறக்கப்பட்டது. ராணு வங்களையும் யுத்ததளவாடங்களையும் தாம் எண்ணிய

வண்ணம் நாட்டின் எல்லையில் சேர்க்கும்படி அநு கூலமான வழிகளையும் அவர்கள் ஏற்படுத்தியுள்ளார் கள். பாதைகள்—முக்யமாய் இருப்புப்பாதைகள்— அவற்றின்மீது செல்லும் புகைவண்டித்தொடர்கள் எல்லாம் இந்த ஏற்பாடுகளை யுத்தேசித்தே அமைக்கப் பட்டிருக்கின்றன.

அனேக விஷயங்களில் ப்ரிடிஷ் இருப்புப்பாதை களைவிட அற்பமாயிருந்தபோதிலும் யுத்தத்திற்குரிய ஸாமான்களைக்கொண்டு செல்வதில் ஜெர்மானிய இருப் புப்பாதைகளில் பல அநுகூலங்கள் உண்டு. ஆகை யால் யுத்தாயுதங்களையும் பகைவரது எல்லைக்கருகில் தமக்கிருக்கும் அரண்களில் தயாரித்து வைத்திருந் தனர்.

இது இப்படியிருக்க ஜெர்மனியின் எல்லையைப் பற்றிச் சிறிது கவனிக்கவேண்டியது இப்பொழுது அவசியமாகிறது. ஐரோப்பாவின் படத்தைப்பார்த்தால் ஜெர்மனிக்கு மேற்கெல்லையாகத் தெற்கிலிருந்து முறை யே ப்ரான்ஸ், லக்ஸம்பர்க், பெல்ஜியம் இவைகள் இருப் பதைக் காணலாம். ப்ரான்ஸ் அடுத்தாற்போலிருக்கும் போது அவ்வழியை விட்டுவிட்டு பெல்ஜியம் லக்ஸம் பர்க் வழியாய் ஜெர்மானியர் வருவானேன்? என்ற சங்கை நமக்குப் பிறக்கலாம். எது ஸுலபமாயும் ஸமீப மாயும் இருக்கிறதோ அந்த வழியைத்தானே எவரும் அபேக்ஷிப்பார்கள். ரய்ன் நதிக்கும் ப்ரான்ஸுக்கும் மத்தியிலுள்ள ஆல்ஸேஸ்—லொரேயன் ஜெர்மனியைச் சேர்ந்தது என்று முன்னமேயே கூறியுள்ளோம். ஜெர் மனி தமக்கு அடுத்தாற்போலிருப்பது தம் தேசத்

திற்கு எப்பொழுதும் ஹானியென்று கருதி ப்ரஞ்சுக் காரர் தம் கிழக்கெல்லையை (பெல்ஜியம், லக்ஸம்பர்க் இவைகளுக்குத் தெற்கே) மிகவும் உறுதியான கோட்டைகளால் பலப்படுத்திவந்தனர். இந்த எல்லை வரையிலும் ராணுவகாரியங்களை முன்னிட்டுக்கட்டப்பட்ட ஜெர்மன் இருப்புப்பாதைகள் வந்தபோதிலும் இந்த அரண்களின்முன் அவைகள் நிற்கமாட்டா. பெல்வார்ட் (Belfort) முதல் வடக்கே தியான்வில்லே (Thionville) என்ற இடம்வரையில் சங்கிலி கோத்ததுபோல் தொடராக அரண்கள் அமைந்துள்ளன. தவிரவும் இந்த எல்லைப்பாகமெல்லாம் இயற்கையாகவே படைகள் செல்வதற்குப் பிரதிகூலமாயுமிருக்கின்றது. மலைப்ரதேசம். விரைவில் படைகளைச்செலுத்தி பகைவரதுபட்டணங்களைப்பிடிப்பது இப்பாகத்தில் முடியாது. ஆனபோதிலும் நாம் மேற்சொன்ன இருப்புப்பாதைகள் இம்மலைப்ரதேசத்தின் சில இடங்களில் ஊடுருவிச்செல்கின்றன. அத்தகைய இடங்கள் போர்க்காலத்தில் அத்யந்த ப்ராதான்யத்தை யடைந்து விடவேண்டியதுதானே. மெட்ஸ், ஸ்ட்ராஸ்பர்க், முல்ஹாஸன் என்னும் ஜெர்மன் நகரங்கள் வழியாகவே இப்பாதைகள் செல்கின்றனவாதலால் இவைகள் ஜெர்மன் ராணுவஸ்தலங்களாக ஏற்பட்டுள்ளன. ஆனாலும் நேரெதிரே தமக்கு ஏற்பட்டிருக்கும் இடையூறுகளை யுத்தேசித்து ஜெர்மன் கவர்ன்மெண்டார், அவ்வழி முக்யமான படைகள் ப்ரான்ஸுக்குச் செல்ல உபயோகமில்லையென்று விடுத்தனர். சில ராணுவப்பகுதிகள் மட்டும் இவைகள் வழியாய் ப்ரான்ஸுக்குள் புகுந்தன.

# படையெழுச்சி

ப்ரான்ஸ் தேசத்து கவர்ன்மெண்டார் தமக்கும் ஜெர்மனிக்கும் மத்தியில் பெல்ஜியம் லக்ஸம்பர்க் ஆகிய நடுவுநிலைமையுள்ள ராஜ்யங்கள் ஏற்பட்டுள்ளனவாகையால் அப்பாகத்தில் தம்மெல்லைக்கு அரண்கள் அநாவசியம் என்று யாதொரு ஜாக்கிரதையும் செய்யாது இருந்துவிட்டனர்; தவிர அந்தராஜ்யங்களும்சிறியவை. தாம் சொல்லும் வார்த்தைகளுக்கு இடங்கொடுக்கக் கூடியவை. ஒருகடிதத்துண்டில் உள்ள உடன்படிக்கைதான் அவற்றின் நடுவுநிலைமையைக் காத்திருக்கின்றது என்று இகழ்ச்சியாய் எண்ணி அவ்வழியாய் ப்ரான்ஸுக்குள் நுழைய எண்ணினர். மற்றொரு எண்ணமும் ஜெர்மனிக்கு உண்டு. ப்ரான்ஸுக்கு ரஷியா வந்து உதவுதற்கு முன்னமேயே ப்ரான்ஸில் புகுந்து அவர்களை முறியடித்து பாரிஸைக் கைப்பற்றி, ஜயசாலிகளாய்த்திரும்பி ரஷியாவையும் அப்படியே தோல்வியடையச்செய்யவேண்டும் என்று எண்ணினார்கள். இம்மாதிரி ஒரே அடியில் தம் பகைவரை எதிர்த்து அடித்தாலொழிய தம்பக்கம் ஜயம்அபஜயம்தான் என்றதை முதலிலேயே அறிந்தவராய்த்தான் போரைத் தொடங்கினார்கள். தாம் எதிரிகளுக்குத் தயார்செய்து கொள்ள காலங்கொடுக்காமலும், அவர்களுக்குத்துணையாக வேறெவராவது வந்து சேர்வதற்கு முந்தியும் தாமே முந்திக்கொள்ள வேண்டுமென்று ஏற்பாடுசெய்தார்கள். முன்னமேயே நாம் கூறியுள்ளதுபோல் போருக்காகத் தாம் ஏற்படுத்தியுள்ள ராணுவத் தலைநகரங்களில் (அவை ஜெர்மனியின் எல்லைக் கருகில் உள்ளவைகள் அல்லவா?) எல்லாவற்றையும் ரஹஸ்ய

மாய்த் தயாராகவைத்திருந்து குறிப்பிட்ட காலத்தில் அவ்விடங்களினின்று வெளிப்பட்டனர். பெல்ஜியத்தின் அரண்களைப்பற்றியும் ஜெர்மானியர் போகவேண்டியிருந்த வழிகள் குறிப்பிடப்பட்ட சில வழிகளாயிருப்பானேன் என்பதைப்பற்றியும் தெரியவேண்டுமாயின் ஸ்டேட்ஸ்மேன் என்னும் பத்திரிகையின் மேற்கோள் ஒருவாறு எடுத்துக்காட்டும். அது வருமாறு:—

பெல்ஜியத்தின் கிழக்கெல்லையில் கவனிக்கவேண்டியவை இவைதாம். பெல்ஜியன் லக்ஸம்பர்க் என்று கூறப்படும் ஆர்டென்னஸ் என்னும் ப்ரதேசம் மேடு பள்ளமாயும், மிகுந்த காடடர்ந்ததாயும், நேர் இருப்புப் பாதை மார்க்கம் இல்லாததாயும் இருப்பதினால் அதன் வழியாய்ச் செல்லவும் முடியாது. எத்தகைய ராணுவ நடவடிக்கைகளுக்கும் பொருந்தாதது. பெல்ஜியப்பாது காப்புக்கு அணியாய் உள்ளது ம்யூஸ் நதிதான். ஆகையால் தங்களுக்குத்துணைப்பலமாய்வரும் ப்ரஞ்சு ஸைன்யம் நாமூரில் வருகிறவரையில் அல்லது 150,000 கொண்ட நம்படையெழுச்சி ஸைன்யமாவது வரும் வரையில் பெல்ஜிய ஸைந்யங்கள் இந்நதியின் பின்னால் அணிவகுத்து நிற்கவேண்டும். லீஜ் நகரைச்சுற்றிலும் அரண்களும் பீரங்கி மேடைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் ம்யூஸ் நதியின் இப்பாதுகாப்புள்ள வழியை நிராகரித்து மாஸ்ட்ரிஹிட் என்னும் நகரின் வழியாக ஜெர்மன் ஸேனை உட்புகுந்து விடலாம். ஆகவேதான் 20-மைல் நேர் மேற்கேயுள்ள ஸெண்ட் ப்ராண்ட் (St. Frond) என்னுமிடத்தை மிகவும் உறுதியாக அரண்செய்திருக்கிறார்கள். * *

## படையெழுச்சி

ஐரோப்பிய யுத்தகளமாய் அடிக்கடி இருந்தபோதிலும் பெல்ஜியநாடு ஜெர்மானியர் எண்ணுகிறபடி சிலவிஷயங்களில் படை யெடுப்பதற்குத் தகுந்த உத்தமமான நாடன்று. ஏய்லா ஷாபெல், ஸைரேக் என்னுமிடங்களுக்கு இடையே பெல்ஜியம், லக்ஸம்பர்க் தேசங்களுக்குச் செல்லும்படியான நல்ல பாதைகள் என்று கூறத்தகுந்தவை எட்டே எட்டுத்தான். பெல்ஜியம்முழுமையும் பிறகு ஜெர்மனிவசத்தில் வந்துவிட்ட போதிலும் பெல்ஜியத்திலிருந்து ப்ரான்ஸுக்கு இன்னும் தெற்கே செல்லவேண்டுமாயின் நான்கு வசதியான இருப்புப்பாதைகள்தாம் இருக்கின்றன. ம்யூஸ் நதிக்கரையில் இருந்து போர்செய்யும் ஸைன்யங்களுக்கும் ஆல்ஸேஸ் லொரேய்ன் பாகங்களிலிருந்து போர்செய்யும் ஸைன்யங்களுக்கும் மத்தியில் ஆர்டென்னஸ் இருப்பது ராணுவ நடவடிக்கைகளுக்கு மிகவும் பிரதிகூலமாயிருக்கின்றது. ஆர்டென்னஸ் உயர்ந்த பீடபூமி, அதில் உள்ள ஆறுகள் மிகவும் ஆழமாயும் செங்குத்தாயும் அறுத்துவிட்டிருக்கின்றன. ஜனமடர்ந்த பாகமுமில்லை. வேண்டிய பொருள்கள் கிடைப்பது அருமை. நேர்ப்பக்கங்களுக்குப் போக்கு வரவு ஸாதனங்கள் கிடையா. கிழக்குமேற்காய் ஒரே ஒரு நல்ல பாதைதான் இருக்கின்றது. ம்யூஸ் நதியின்கரைகள் வெகு செங்குத்தானவை. அதன் அகலமும் 60 முதல் 100 கஜம்தான். நாமூரில் அதன் அகலம் 70 கஜமிருக்கின்றது. நாமூர் கோட்டையும் மூன்று வது உவில்லியம் காலமுதல் ப்ரஸித்திபெற்றுள்ளது. அதில் இருக்கும் ராணுவவீரர்கள் பதினையாயிரம்பேர்.

அக்கோட்டை ஒருயாகத குனறினம்துள்ளது. அதன சுற்றளவு 24 மைல். ஆனபோதிலும் நாமூர், லீஜ் கோட்டைகள் தற்கால வழிகளுக்குத் தகுந்தவையல்ல; இரண்டு வருஷத்திற்கு முந்தி அப்படித்தாமிருந்தன வென்றே சொல்லவேண்டும். லீஜ் 31 மைல் கொண்ட ப்ரமாதமான சுற்றளவைக் கொண்டது. ஆனபோதிலும் இதைச்சுற்றிலும் உள்ள அரண்கள் பீரங்கி ஸ்தலங்களேதவிர வேறல்ல; தவிரவும் இவைகளுக்கு மத்தியிலுள்ள இடைவெளி பெரும்பாலும் 6000 கஜம்—ஏன் அதற்குமேலும் இருக்கின்றது. அதைக் காப்பதற்கு 15,000 ராணுவவீரர்கள் வேண்டியிருக்கின்றது, இவைகளும் ஹூய், ம்யூஸ் இவைகளும் ஒரே நிலையாய்த் தடுப்பதற்கு முடியாத இடங்கள். எதிரிகளைத் தற்கால சாந்தியாய் தாமஸப் படுத்தத்தான் உபயோகமானவை என்று கருதப்பட வேண்டும். ராஜதானியாகிய ப்ரஸ்ஸல்ஸ் யாதொரு பாதுகாப்புமின்றியிருக்கின்றதாதலால் கவர்ன்மெண்ட் அபாயமென்று முதலில் அறிந்தவுடனே ஆக்ஷேபணையில்லாமல் ஆண்ட்வெர்ப் நகரத்திற்குப் போய்விடும்; அந்தக் கோட்டை கடைசி வரையிலும் காக்கப்படும். * *

ஆண்ட்வெர்ப் நகரத்தின் பாதுகாப்பிற்குக் கடல் மடை திறந்துவிடுவது ஒருவழியாக இருக்கின்றது. தவிர உள் சுற்றுக்கோட்டைகளினின்றும் ஆறு முதல் ஒன்பது மைல் தூரத்திலிருக்கும் பதினைந்துகோட்டைகளும் பீரங்கிமேடைகளும் பொருந்திய பாதுகாப்பும் இருக்கின்றது. இவ்வேற்பாடுகள் இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன்புதான் முடிந்தன. ஆகையினால்

ஆண்ட்வெர்ப் அரண் மாத்திரம் தற்காலத்திற்குரிய பாதுகாவல் பொருந்தியதாயும் ஐரோப்பாவில் உள்ள மிகப்பலத்த கோட்டைகளில் ஒன்றாயும்இருக்கின்றது."

இவை இப்படியிருந்தபோதிலும் ஜெர்மன் தேசத்தார் பெல்ஜிய ராஜ்யத்தின் பலத்தையும் ஆவேசத்தையும் மிகத்தாழ்ச்சியாய் எண்ணினார்கள். இவர்கள் மாத்திரமா? சரித்திர ஆராய்ச்சியில் தேர்ந்தவர்கள்கூட பெல்ஜியம்தானே என்றிருந்தார்கள். அனேக காலமாய் ஐரோப்பாவின் யுத்தரங்கமாயிருந்து கஷ்டத்தை யனுபவித்துவந்த இந்நாடானது தனிராஜ்யமாக ஏற்பட்ட கால முதல் ஸகலவழிகளிலும் விருத்தியடைந்து வந்திருக்கின்றது. எழுபது வருஷகாலமாய் போர் என்பதை யறியாத பெல்ஜியநாட்டார் தம் தேசத்தின் பொருள்களை—கல்விப்பொருள், செல்வப்பொருள்களை—விருத்திசெய்து வந்தார்கள். அனேக தொழிற்சாலைகள்—வஸ்திரம் நெய்தல், கம்பளம் நெய்தல், ஜரிகை வேலை செய்தல், இரும்புச்சாமான் செய்தல், இவைகளை ஏற்படுத்தி வியாபாரத்தில் மேன்மையடைந்தும் பயிர்த்தொழில் செய்து அதில் சிறந்தும் வந்தார்கள். தங்கள் நகரங்களை அழகாக அமைத்து கல்விச்சாலைகள் ஸ்தாபித்து விலைமதித்தற்கரிய புஸ்தகசாலைகளையும் சித்திரக்கூட மண்டபங்களையும் ஏற்படுத்தி சாந்த சீலர்களாய் இருந்தார்கள். அழகிலும் ஆரோக்யத்திலும் பெல்ஜிய நகரங்களே முதன்மையை அடைந்திருந்தன. வருஷந்தோறும் இந்நாட்டில் உல்லாஸமாய் வஸித்துப்போக ஆயிரக்கணக்கான ஜனங்கள் மற்றநாடுகளிலிருந்து வருதல் உண்டு. பிறர்களுக்குத் தீங்கிழைப்

பதைக் கனவிலும் நினையாத மேன்மையை யடைந்திருந்தனர்.

இதேமாதிரிதான் சிறு ராஜ்யமாகிய லக்ஸம்பர்க்கும் இருந்தது. முற்காலத்தில் நடந்த சண்டைகளில் மிகவும் கஷ்டத்தை யனுபவித்த சிறு நாடுகளில் இதுவும் ஒன்று. 1867-ம் வருஷத்திற்குப் பிறகு இது ஒரு நடுநிலைமையுள்ள நாடாக ஏற்படுத்தப்பட்டது. அதன் பிறகு பெல்ஜியம்போலவே இதுவும் மிகவும் செழித்துக்கொண்டே வந்தது. ஆகையால்தான் இவையிரண்டும், தமக்கு விரோதிகள் ஏற்படார் என்று எண்ணி சைன்யங்களைப்பற்றிக் கவனிக்கவில்லை. இப்படித் தகுந்தபாதுகாவலுடனில்லாத ராஜ்யங்களை மீறிச்செல்வது தனக்கு ஏற்றதென எண்ணி ஜெர்மனி அவைகளின் வழியாய் சைன்யங்களை அனுப்ப ஏற்பாடுசெய்தது. இந்த ஏற்பாடுகள் எல்லாம் முன்னமேயே நடந்து வந்திருக்கின்றன என்று முன்னமேயேகூறியுள்ளோம். ஆகஸ்ட்மீ 2-ம் தேதி ஜெர்மானிய சைன்யங்கள் லக்ஸம்பர்க் எல்லைக்குள் பிரவேசித்தன. ஒரு ராணுவப் பகுதி புகைவண்டிமார்க்கமாயும் மற்றொன்று ஸாதாரண பாதை மார்க்கமாயும் வந்தது. வந்துகொண்டிருக்கும்பொழுதே, பாதைகள், பாலங்கள், ஸ்டேஷன்கள், தபாலாபீஸுகள், தந்தி, டெலிபோன், ஆகிய எல்லாவற்றையும் தங்கள் வசமாக்கிவிட்டன. யாரோ முன்னமேயே வெகு கணக்காய் நியமனம் செய்திருந்தது போல ஒவ்வொருவனும் குறிப்பிட்ட ஸ்தானத்திலிருந்தான். மயிரிழையாவது பிசகவில்லை. லக்ஸம்பர்க் நாட்டிலுள்ள கடைகளிலும் ஆபீஸுகளிலும் வேலை

பார்த்துவந்த வாலிபர்கள், மேல் பார்வையிட்டுவந் தார்கள். ஜெர்மன் சைந்யங்கள் வந்ததும் இவர்கள் தங் கள் பழைய உடைகளைக்கழற்றி ஜெர்மன் ராணுவஉடை களைத் தரித்தவர்களாய் ஜெர்மன் சைன்யத்துடன் சேர்ந்தார்கள். இவர்கள் தங்களுக்கு உதவக்கூடியவர் களையும், ஜெர்மனியிடம் பகைமை பாராட்டுகிறவர்களை யும் காட்டினார்கள். அதே நிமிஷத்தில் அப்படிப்பட்ட வர்கள் கைது செய்யப்பட்டார்கள். லக்ஸம்பர்க் நகரத் தில் வந்த புதிய பட்டாளங்கள் அணிவகுத்துச்சென்று கொண்டிருக்கையில் பாதையில் எதிரில் ராஜ்யமந்திரி களில் ஒருவர் மோடார்வண்டியில் வந்துகொண்டிருந் தவர், இவர்களைக்கண்டு போகக்கூடாதென்று வண்டி யைக் குறுக்காய் நிறுத்தித்தடுக்க முயன்று 'லக்ஸம் பர்க் நாட்டு நடுவு நிலைமையைக் காக்கிறோம்' என்று செய்த உடன்படிக்கைப் பத்திரத்தையும் காண்பிக்க, அப்படைத் தலைவர் 'எல்லாம் எங்களுக்குத் தெரியும்' என்றும், தான் தன் கடமைகளைநிறைவேற்றிவிடவேண் டியவன்தான் என்றும் சொல்லினராம். பிறகு லக்ஸம் பர்க் க்ராண்ட் டச்சஸ் என்னும் அரசியும் மோடார் வண்டியில் வந்து வழி மறித்து 'லக்ஸம்பர்க் நடுவு நிலைமை பாதுகாக்கப்பட்டு வரவேண்டும்' என்று கூற, அவ்வீரன் 'தாங்கள் வீட்டிற்குப் பேசாமல் போங்கள்' என்றும் கூறினனும். அன்றையதினமே அந்நாட்டி லுள்ள ஜெர்மன் ப்ரதிநிதி லக்ஸம்பர்க் மந்திரிக்கு "இம் மாதிரி ராணுவ ஏற்பாடுகள் அந்நாட்டில் செய்வது எத்தகைய விரோதத்தைப்பற்றியும் அல்லவென்றும், அவைகள் எல்லாம் ஜெர்மானிய இருப்புப்பாதைகளை

ப்ரஞ்சுக்காரர் எங்கு நாசம் செய்வார்களோ எனப் பயந்து செய்யும் ஏற்பாடுகளே' என்றும் கூறினர். சில மணிகள் ஆவதற்கு முந்தியே ஜெர்மன் படைகள் எல்லாம் வந்து சேர்ந்துவிட்டன. நாடு முழுவதும் அவர்கள் பரவியிருந்தார்கள். இன்னம் மேற்கே தள்ளிப்போவதற்கு லக்ஸம்பர்க் நாட்டையே அடியாகக் கொண்டார்கள். 'ராணுவபலத்தை அதிகப்படுத்த வேண்டும். இது வீரர்கள் அணிவகுத்துச் செல்வதற்குப் பெருந்தடையாயிருக்கிறது' என்று வீடுகள், தோட்டங்கள், வயல்கள் முதலானவைகள் எல்லாம் அழிக்கப்பட்டன. ஊரில் வண்டிகள் தென்பட்டால் அவைகளும் பிடிக்கப்பட்டன. இவைகளைப்பற்றி யாராவது கேட்டால்—இவைகளைக் கவனித்தாலே, போதும்—ஒற்றன் என்று எண்ணங்கொண்டு உடனே கைது செய்யப்பட்டான். இம்மாதிரி நடந்தன. பாபம்! ஒன்றுமறியாத லக்ஸம்பர்க் ஜெர்மனி கையில் அகப்பட்டுக்கொண்டு தவித்துத் தத்தளித்தது. மிகச் சிறிய ராஜ்யம். அதன் விஸ்தீரணம் ஆயிரம் சதுர மைலும் கிடையாது. அதன் ஜனத் தொகையும் ஸு மார் இருநூற்றைம்பதினாயிர மிருக்கலாம். ஸைன்ய பலமென்பதே கிடையாது. பெல்ஜியத்தின் விஷயத்திலும் இம்மாதிரியே நடந்துகொண்டனர். தம் ஸேனைகளைக் கொண்டுபோக பெல்ஜியத்தின் அனுமதியைக் கேட்கவும் ஆல்பர்ட் என்னும் பெல்ஜியமன்னன் மெலியோரைக் காக்கவல்ல ஆங்கிலபூமியை நோக்கியவனாய் நம் ஜார்ஜ் மன்னருக்குத் தந்திமூலமாய் "பெல்ஜியத்தின் கண்ணியத்தைக் காப்பதற்குத் தங்கள் மாட்சிமை



யோஷிஹிட்டோ, ஜப்பான் சக்கரவர்த்தி



ஸர் ஜான் ப்ரஞ்ச், இங்கிலீஷ்படைத் தலைவர்



மிஸ்டர் வில்ஸன், யுனைடெட் ஸ்டேட்ஸ் ப்ரஸிடெண்ட்

பொருந்திய அரசாங்கத்தார் ஸாமர்த்தியமாய்ப் பிரவே சிக்கவேண்டுமென்று கடைசியாக முறையிடுகிறேன்" என்று தெரிவித்தார். இதன் பிறகு நடந்த ஸமாதான முயற்சிகளையும் அவை எப்படி வீணாய்ப்போயின வென்பதையும் முன்னமேயே கூறியிருக்கிறோம். எத்தனை முறை இடித்திடித்து ஸமாதானத்திற்குக் கூப் பிட்டிருக்கிறார்கள்! எத்தனை முறை "நடந்தது நடந்து போகட்டும்! இனியாவது ஸரியாய் நடக்கலாமே!" என்று பன்முறையும் வற்புறுத்திக் கூறியும் கேட்ட பாடில்லை. இனிவரும்கஷ்டநஷ்டங்களை உத்தேசித்தும் வேண்டாமெனத்தடுத்து எடுத்துச் சொல்லியும் கேட் காமல் போகவே ஜெர்மனியில் உள்ள இங்கிலீஷ் ப்ரதி நிதி ஜெர்மனிநாட்டை விட்டு வெளிக்கிளம்ப நேரிடு மெனச் சொன்னார். இம்முறையும் ஜெர்மனியின் சான் ஸலரை நேரேபார்த்துப் பேசவேண்டும் என்றுவிரும்ப அவ்வாறே அவரைப் பார்த்தும் பயனில்லாமல் போய் விட்டது. ஹால் உ(வெ)க் ப்ரமாதமாய்ப் பேச ஆரம் பித்தார். ஒரு கடிதத்துண்டுக்காகத் தம் இனத்தா ருடன் போர்புரியப் போகிறீர்களா? இரண்டுபேர் பக்கத்திலிருந்து அடிக்கும்பொழுது பின்னிருந்து குத்துவதுபோல் உள்ளது உங்கள் நடவடிக்கை. எந் தேந்த பயங்கரமான ஸம்பவங்கள் நிகழ்ந்தாலும் அவை களுக்கு க்ரேட் ப்ரிடன்தான் உத்தரவாதி என்று கூறி னார். அதன் பிறகுதான் ப்ரிடனுக்கும் ஜெர்மனிக் கும் யுத்தம் தொடங்கியது.

அன்றையதினமேதான் சில மூவாயிரம்மோடார் வண்டிகளில் காத்திருந்த ஸைன்யங்கள் ஒரே பாய்ச்

# ஐரோப்பிய மஹா யுத்தம்

சலாய்ப் பாய்ந்து பெல்ஜிய பாலங்களையும் இருப்புப் பாதைகளையும் தம் வசமாக்கி மற்ற ஸைன்யங்களையும் ப்ரான்ஸுக்குத்துரிதமாய் நடத்தும்படி உத்தரவுபெற்றார்கள். அவர்கள் தடுக்கப்படுவோம் என்று எதிர்பார்க்கவேயில்லை. எல்லாரும் தங்களுக்கு அநுகூலமாயிருந்து உதவியுஞ்செய்வார்கள் என்று ராணுவத் தலைவர்கள் ஸைன்யங்களுக்குச் சொன்னார்கள். பெல்ஜியர்களுக்கு மாத்திரம் நடக்கப்போவது இன்னதெனத் தெரியும். ஜெர்மன் ஸைன்யங்கள் வருவதற்கு முன்னமே தங்கள் பாலங்கள் இருப்புப்பாதைகளை எல்லாம் வெடிமருந்துவைத்துத் தகர்த்துவிட்டார்கள். ஒவ்வொரு கிராமமும் ஒவ்வொரு சிறிய கோட்டையும் பகைவரைத் தடுக்கமுயன்றது. பெல்ஜியர்கள் எல்லாரும் ஒன்றுசேர்ந்து விட்டனர். கடைசி பரியந்தம், தம் உயிர் உடலைவிட்டு நீங்கும் வரையில், தம் தேசத்தை எதிரிகள் முழுமையும் கைப்பற்றுதிருக்கும்படி தடுப்பதிலேயே உழைப்போம் என்று கங்கணங்கட்டிக் கொண்டனர். தற்காலநிலையில் தம்மக்களில் அனேகரையிழந்து, தம்நாட்டையு மிழந்துவிட்டனரேனும், தம் அஞ்சாநெஞ்சத்தையும், வீரதீரங்களையும் மணிவிளக்குப்போன்ற தம் தேசாபிமானத்தையும் உலகிற்கு எடுத்துக்காட்டி யிருக்கின்றனரன்றோ ?



# ஆறும் அதிகாரம்

## லீயஜ் : பெல்ஜியரின் தீரம்

ஜெர்மனியிலிருந்து பெல்ஜியநாட்டில் உட்பகுதியில் பிரவேசிப்பதற்குத் தகுதியான வழிகளைக் குறிப்பிட்டிருக்கிறோம். அவ்வழியில் முதல் இருக்கும் பட்டணம் லீயஜ். அந்நகரம்தான் அந்தத்தேசத்தில் ஆண்ட்(வெ)ர்ப் கோட்டைகளுக்கு அடுத்தாற்போல் மிகவும் பலமானது. இந்நகரத்தைச்சுற்றிலும் உறுதியான பன்னிரண்டு கோட்டைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. மத்தியிலுள்ள ப்ரதானகோட்டைக்கு மூன்றரைமுதல் ஐந்தரை மைல் தூரத்திற்குள் அவைகள் ஸுமார் முப்பத்தோரு மைல் சுற்றளவில்இருக்கின்றன. ஒவ்வொன்றும் தனித்தனியே பலவித அங்கங்களுடன் கட்டப்பட்டு அழகுடனிருக்கின்றன. இவைகளில் ஆறு பெரியவையாயும் ஆறு சிறியவையாயும் இருக்கின்றன. சில ம்யூஸ் நதியின் கீழ்கரையிலும் சில மேல்கரையிலும் உள்ளன. இவைகளில் இரண்டு கோட்டைகள்தாம் முக்யமானவை. இவைகள் கிழக்கே ஜெர்மன் பட்டணமாகிய கோலோன் நகருக்குச் செல்லும் இருப்புப்பாதைக்குக் காவலாயிருப்பனபோ லிருக்கின்றன. ஒவ்வொரு கோட்டையும் மிகவும் உறுதியாய் ஜல்லிக்கற்கள் சேர்ந்த காங்கிரீட் (Concrete) போட்டு முக்கோணவடிவாய்க்கட்டப்பட்டு அவைகளில் உள்ள கோபுர கொத்தளங்கள் எஃகினால் செய்யப்பட்டு நினைத்தவண்ணம் திருப்பக்கூடியவையாயும் அமைக்கப்பட்டுள்ளன. அத்தகைய பலத்தகோட்டைகளில் மிகவும் ஸூக்ஷ்ம

மான யுத்தாயுதங்கள்வைக்கப்பட்டிருந்தன. எதிரிகளி னின்று தம்மைக்காப்பாற்றிக்கொள்வதற்கும்எதிரிகளை நாசம் செய்வதற்குமென்று ஏற்பட்டுள்ள ஆயுதங்களும் நிரம்பியுள்ளன. கோட்டைகளைச் சுற்றி ஆழமான அக ழிகளும் இருக்கின்றன. இக்கோட்டைகள் சுமார் 25, 30வருஷங்களுக்கு முன் ஒரு ப்ரஸித்திபெற்ற பெல்ஜிய நாட்டுஎஞ்ஜினியரால்கட்டப்பட்டது. இவ்வளவு பலத்து டனிருந்தபோதிலும், அனேகர் லீயஜ் நகரமானது மிக வும் பலனற்றிருக்கிறது என்று நினைத்தார்கள். கெய்ஸர் கூட அக்கோட்டையின் உறுதியை லக்ஷ்யம் செய்ய வில்லையெனச் சொல்லப்படுகிறது. ஆனால் இவ்விஷயத் தில் ஒருவர் அபிப்பிராயம்போல் மற்றவர்களது இருப் பதில்லை. விஷயங்களை நேருக்குநேரே கண்டறிந்தால் மாத்திரம் தெரியுமேயொழிய சொல்லிமுடியாது தவி ரவும் இக்கோட்டைக்கு வேண்டிய ஆயுத முஸ்தீப்புக ளும் ராணுவபலமும் வெகு காலம் கவனிக்கப்படாம லிருந்ததைக்கொண்டே இப்படி யெல்லாம் அபிப்பிராய பேதம் ஏற்படுவதற்கு வழியேற்பட்டது. ஆனால் சில காலத்திற்கு முன் இக்கோட்டையானது தக்க ஸேனாதி பதியினால் காக்கப்பட்டு கோட்டைகளை பலப்படுத்து வதற்கு வேண்டிய ஏற்பாடுகளும் நடந்துவந்திருக் கின்றன என்பதை ஒருவரும் அறியவில்லை. அம்மனி தர்தாம் ஜெனரல் லீமான் என்பவர். இவர் பெயரை எப்பொழுதாவது இதற்கு முன் நாம் கேட்டிருக்கி றோமா? இவர் முதலில் ராணுவபாடசாலையில் கணித போதகராக இருந்தவர். இவர்போர்க்களங்களில் யுத்த வீரராய் இருந்து தம் ஸாமர்த்யத்தைக் காட்டவில்லை

## லீயஜ் : பெல்ஜியரின் தீரம்

மேனும் தம் கணிதநூல் தேர்ச்சியினால் அனேகநூல்கள் எழுதி தம் நுட்பஅறிவைக் காட்டினார். வாள்முதலிய படைக்கலங்களை ஏந்தப்பழகி யறியாத இவர் தம் உத்யோகங்களில் வஹித்து வரும் பதவிக்கேற்ப நடந்துவருவார் என்று ஒருவரும் நம்பவில்லை. இந்த ஐரோப்பிய யுத்தத்தில் மிக்க கீர்த்திபெற்று மஹா உத்ஸாகத்துடனும் ஆர்வத்துடனும் போர் புரிந்தது யாரென்றால் லீமான் என்றே சொல்வதற் கையமுண்டோ? லீயஜ் நகரத்தையும் அனேகர் நினைத்த வண்ணம் நினைக்க வொண்ணாது. இது தொன்று தொட்டு யுத்தத்திலேயே மூழ்கியுள்ள ஒரு நகரம். ஐரோப்பிய யுத்தங்களிலெல்லாம் இதுவும் ஸம்பந்தப்பட்டு அனேக முற்றுகைகளையும் கண்டிருக்கிறது. அனேக தடவைகளிலும் பிடிக்கப்பட்டு அன்னிய சேனைகளிலிருந்து அனேக கஷ்டங்களையும் அனுபவித்திருக்கிறது. ஆகையால்தான் ஜெர்மானியர் படையெடுத்து லீயஜ் நகரைப் பிடித்தபோது அது அவர்களுக்குப் புதிதாய்த்தோன்றவில்லை. கஷ்டங்கள் அனுபவித்து கஷ்டமென்பதே ஸஹஜமாய்ப்போனால் அதற்குப் பயப்படுவானேன்? இப்படி யெண்ணியிருந்தபடியால்தான் கடைசிவரையிலும் லீயஜ் நகரவாஸிகள் அஞ்சா நெஞ்சுபடைத்துள்ள தீரர்களாய் விளங்கினர். தவிர, தம்தொழிலிலும் யுத்தத்திற்கு வேண்டிய ஆயுதங்கள் செய்வதிலேயே பழகியுள்ளவர்கள். இந்நகரத்திலும் இதற்குச் சமீபத்திலும் துப்பாக்கிகள் செய்யும் தொழிற்சாலைகள் அனேகம் உண்டு. இவைகளிலிருந்து பெரும் பீரங்கிகளும் சிறு துப்பாக்கிகளும் செய்யப்

பட்டு வியாபாரம் நடந்துவருகின்றது. இந்நகரமே ஆதிகாலத்தில் முதன் முதல் நிலக்கரி சுரங்க ஸம்பந்த மான வேலைகளில் பிரவேசித்தது.

இத்தகைய பட்டணம் யுத்தகாலங்களில் வெகுநன் ருய்க் காக்கப்படவேண்டியது இயற்கைதானே ? முன் னமே நாம் கூறியபடி யுத்தம்தொடங்குவதற்கு முன் னர் சிறு சிறு கூட்டங்களாய் எதிரிகள் பெல்ஜிய எல்லை யில் நுழைந்தார்கள். வழியில்பெல்ஜிய கிராமவாஸிகள் தங்களுக்கு விரோதமாயிருந்ததைக் கண்டு அவர்களை அடக்கித் தம் வழியே சென்ருர்கள். லீயஜ் நகரையே அவர்கள் குறிப்பாகக்கொண்டார்கள். யுத்தம் ஆரம் பித்தபிறகு ஜெர்மன் ஸைன்யங்கள் அணியணியாய் தம் பீரங்கிவண்டிகளுடனும் யுத்ததளவாடங்களுட னும்தோன்றினர்கள். ஆஹா! என்ன அழகான காட்சி! ஒரே நடையுடனும் ஒரே உடுப்புடனும் அணி யணி யாய் கீழே காலாட்கள் நடந்துசெல்வதும் ஆகாயத்தில் ஆகாயக்கப்பல்கள் இவர்களைக் காத்துவரும் பெரும் பறவைபோல் மேலே பறந்துசெல்வதும், ஆனந்தமான காட்சியாயிருந்ததாம். முதலில் ஜெர்மானியர் வைஸ் என்னும் சிறு நகரைத் தாக்கினர்கள். அங்கிருப்பவர் கள் அவர்களுக்குச் சிறிதேனும் அனுகூலம் செய்யாம லிருந்ததும் தவிர, கொடிய பகைமையையே காட்டி னர்கள். ஆகையால் அவர்களைக் கொடூரமாய் நடத்த லானர்கள். ஜெர்மானியர் வருவதைக்கண்டு ஒரு பெல்ஜிய பட்டாளம்சென்று தாக்கவும் அவர்கள் மிக்க கோபத்துடன் எதிர்த்தார்கள். தவிர நடுவில் இருக் கும் ஆற்றைக்கடக்கவும் பிரயத்தனப்பட்டார்கள். பெல்

## லீயஜ்: பெல்ஜியரின் தீரம்

ஜியர் சும்மாவிருந்து, எதிரிகள் தங்களுக்குத்தான் ஜயம் என்று நினைத்து காரியங்களை முடிக்கும்போது திடீரெனப்பாய்ந்தார்கள். மிதவைப்பாலங்கள் ஆற்றின் குறுக்கே போடும்படிசெய்து சைன்யங்கள் அதைத் தாண்ட ஆரம்பிக்கும்போது நறநறவென்று அவர்களை வீழ்த்தினார்கள். ஆ, என்ன தீரம்! குண்டுகள் ஒன்றன்பின் ஒன்றாய் விழுந்துகொண்டிருக்கும்பொழுது ஒரு பெல்ஜிய போர்வீரன் முழந்தாளிட்டு ஜெர்மன் படைத்தலைவர்களைப் பார்த்துக் குறிவைத்துச் சுடுகிறான்! பகைவர்களில் மூன்றுபேரும் ஒரே அடியில் வீழ்ந்துவிட்டார்கள். இம்மாதிரி எவ்வளவு நேரம் போர்செய்வார்கள்? ஜெர்மானியரது படையின்முன் எவரும் நிற்க முடியாமல் லீயஜ் நகரக்கோட்டைகளிடம்வந்து ஒண்டிக்கொண்டார்கள். ஆனால் இவர்கள் வரும்பொழுது தங்கள் இருப்புப்பாதைகள், பாலங்கள், பாதைகள், வண்டிகள் முதலிய எல்லாவற்றையும் எங்கு எதிரிகள் உபயோகித்துத் தங்களை நாசஞ் செய்வார்களோ என்று பயந்தவர்களாய் தாங்களே அவைகளை அழித்துவிட்டார்கள். எதிரிகள் ஒளிந்துகொண்டு தங்கள் நாட்டிற்குச் சேதத்தை விளைவிப்பார்களே என்றஞ்சி கிராமங்கள் எல்லாவற்றையும் ஒன்றன்பின் ஒன்றாய் நெருப்புக்கிரையாக்கினார்கள். தீப்பற்றக்கூடிய வஸ்துக்களை ஒன்றுசேர்த்து தீ வைதது மரச்சாமான்கள் எல்லாவற்றையும் தாங்களே நாசஞ் செய்தார்கள். இருப்புப்பாதைகளை பிடுங்கிப் போட்டதும் தவிர, எதிரிகளுக்கு வழி ஏற்படாமலிருக்கவேண்டி ரெயில் எஞ்ஜின்களை முடுக்கிவிட்டு அவை

கள் ஒன்றோடொன்று மோதி நாசமடைந்து வழிமறிக்க ஏற்பாடுசெய்தார்கள். எங்கு பார்த்தாலும்ஜெர்மானியர் காலெடுத்து வைக்கவொட்டாமல் வெடிமருந்துகளைப் பரப்பி சுரங்கம் வைத்தார்கள். மின்சாரக் கம்பிகளால் வலைகள் வைத்து அதில் இவர்களைச் சிக்கும்படியும் செய்தார்கள். எப்படியிருந்தும் ஜெர்மானியரும் விட்டு விடுபவராகக்காணோம். இவர்கள் ம்யூஸ்நதியைச் சிறு படகுகளிலும் கட்டுப்பலகைகளிலும் கடந்துவரலானார்கள். தங்களுக்கு முன்னதாய் லீயஜ் கோட்டைகளின் அந்தரங்கங்களை அறிந்து சொல்லும்படி ராணுவ ஆகாயப் படைகளையும் ஸெப்ளின் ஆகாயக் கப்பலையும் அனுப்பினார்கள். ஒரு கோட்டையினின்று வெளிப்பட்ட குண்டுபட, அந்த ஆகாயக்கப்பல்விழுந்து விட்டது. ஜெர்மன்ராணுவ ஆகாயப்படை மற்றொரு பெல்ஜிய ஆகாயப்படையுடன் தாக்க, இரண்டாய்க் குறுக்கே வெட்டப்பட்டு அது விழுந்து விட்டது. ஆனால் அவ்விமானத்தலைவன் உயிருடன் தப்பிவிட்டான். ஜெர்மானியர் இம்மாதிரி காலதாமஸம் செய்யக்கூடாதென நினைத்து கோட்டைகள் அருகே இருட்டில் சென்றார்கள். ஆனால் உடனே பெல்ஜியக்கோட்டையிலிருந்து ஒரு பெரியவெளிச்சம் இவர்கள் இருக்கும் இடத்தை தெரியப்படுத்திவிடவும் உடனே இடைவிடாப் பெருமழைபோல் குண்டுமழை இவர்கள் மீது பொழிந்தது. ஓடியொளிக்கவும் இடமில்லை. கல் மழைபோன்று வந்துவிழும் நவீனவெடிகுண்டுகளிடமிருந்து தப்புதற்குச் சற்றேனும் இடங்கொடுக்கவுமில்லை. இந்தக் கோரயுத்தத்திலிருந்து ஜெர்மனிப் பாச



பெல்ஜியப் போர்வீரர்கள்



லெட்டினெண்ட் ஜெனரல் லீமான்



ஆட்டோ வான் பிஸ்மார்க்



கௌண்ட் வான் மால்ட்க்

றைக்குத் திரும்பினவர்கள் இல்லவே இல்லையாம். பெரும்பான்மையோர் கொல்லப்பட்டனர் மிகுந்தவர்கள் சிறைபிடிக்கப்பட்டார்கள். இவர்கள் இப்படி கஷ்டப் பட நேர்ந்தாலும் சுத்தவீரர்கள்போன்று யுத்தத்தில் சிறிதும் பின்வாங்கினவர்கள் இல்லை. மறுபடியும் தங் கள் பீரங்கிகளையும் காலாட்படைகளையும் கொண்டு வந்து விடாது கோட்டைகளைத் தாக்கினார்கள். அவர் கள் குண்டுகளைப்போடுவதில் மிக்க ஸாமர்த்திய சாலி களாய் இருந்தபோதிலும் அவைகள் கனத்தவைகளல் லவாதலால் பலமான லீயஜ் கோட்டைகளைச் சிறிதும் நாசப்படுத்தவில்லை. மறுபடியும் திரண்டஸேனைகளைக் கொண்டுவந்து நிறுத்தி ஒரேபாய்ச்சலாய்ப் பாய்ந்து கோட்டைக்குள்புகவேண்டியதென்று எண்ணினார்கள். எவ்வளவு வீரர்களானாலும், தொகை எவ்வளவு அதிக மாயிருந்தாலும் தற்காலத்திய யுத்தயந்திரங்களுக்கு முன் நிற்கமுடியவில்லை. திடீரென்று காதுசெவிடு படும்படி கொடிய வெடிகளும் எங்கு பார்த்தாலும் ஒன்றும் தெரியாதபடியான இருண்டமேகம்போன்ற புகையும் கவிந்துகொண்டது. ஜெர்மானியர் சிறிதா வது பயப்படுவதாகக்காணோம். இன்னம் அருகில் நெருங்கலானார்கள். கோட்டைகளின் இடையிலுள்ள வெளியிடங்களைப் பிடிக்க எண்ணினார்கள். ஆனால் இவ் விடங்களிலெல்லாம் பெல்ஜிய காலாட்படைகள் நிரம்பி யிருந்தார்கள். அருகில் நெருங்கினதும் சற்றும் கவனிக் காமல் நங்கள் தலைவன் சமிக்ஞை செய்ய உடனே கை யில் வாளேந்தியவர்களாய் ஒரே பாய்ச்சலாய்ப்பாய்ந்து ஜெர்மானியரை—முன் குண்டு ப்ரயோகத்தில் மிகுந்த

வர்களை—எதிர்த்தார்கள். ஜெர்மன்படை முறியடிபட்டு வெகுதூரம் கலைந்து முதுகுகாட்டி யோடின. இதில் பெல்ஜியர் வெகுஸாமர்த்தியமாய் வேலைசெய்தார்கள். ஜெர்மன்படைகளில் சேதம் அதிகமாயிருந்தபோதிலும் சிறிதும் மனந்தளரவில்லை. யுத்தகாலங்களில் எதிரிகளுக்குக் காட்டவேண்டிய காருண்யம் சிறிதுமில்லாமல் நடந்தார்கள். ஜெர்மானியப் படைத்தலைவர் தம் பக்கத்தில் இறந்துவிட்டவர்களை அடக்கஞ்செய்யக் கருதியவராய் இருபத்து நான்கு மணிநேரம் ஸமாதானம்கேட்டும் பெல்ஜியர்கள் கண்டிப்பாய்க் கொடுக்கமுடியாது என்று கூறினார்கள். இவ்வண்ணம் இருதிறத்தாரும் போர் செய்துகொண்டிருக்கையில் ஒருநாள் ஒரு விசேஷ ஸம்பவம் நிகழ்ந்தது. காலையிரண்டுமணிக்கு ப்ரிடிஷ் உத்யோகஸ்தர்போல் உடைதரித்தவர்களாய் ஜெர்மானியப் போர்வீரர் சிலர் லீயஜ் நகருட்சென்று தாங்கள் லீயஜ் நகரைக்காப்பதற்கு வந்திருப்பதாகவும் ஜெனரல் லீமான் என்பவரைக் காணவேண்டும் என்றும் கூறினார்கள். இவர்கள் நடையுடைபாவனைகளைக் காணவே ஒருவருக்கு ஸந்தேகம் தட்டி உடனே போர் வீரரை எழுப்பவேண்டிய ஆரவாரம்செய்து லீமான் இருக்கும் அறைக்குப்போகும் கதவைத்தாளிட்டார். ஆனால் இவர் சுடப்பட்டார். உடனே அருகிலிருந்த ராணுவ ஆபீஸர்களும் சில போலீஸ்காரரும் இவர்களைப் பிடிக்க முயன்றனர். இவர்கள் உடனே தம் துப்பாக்கிகளை அவர்கள்மேல் திருப்பிச்சுட்டுவிட்டுப் பிறகு ஓட யத்தனித்தார்கள். ஆனால்அவர்கள் ஒவ்வொருவராய் சுடப்பட்டு வீழ்த்தப்பட்டார்கள்.

## லீயஜ் : பெல்ஜியரின் தீரம்

இதுநிற்க காலக்ரமத்தில் முற்றுகைக்கு வேண்டிய தளவாடங்கள் வந்துசேர்ந்தன. கோட்டையிலிருந்து வரும் குண்டு வந்து விழாத ஒரு மார்க்கமாய் ம்யூஸ்நதியைக்கடந்து இன்னும் பலத்த பெரிய பீரங்கிகள் கொண்டுவரப்பட்டு நிறுத்தப்பட்டன. மேலே ஆகாயவிமானங்கள் வந்து பெல்ஜிய ஆகாயவிமானங்களையும் ஆகாயப் படைகளையும் துரத்தியடித்தன. பிறகுதான் நகரத்தின்மீது ஜெர்மானியர் மிகவும் உக்ராவேசத்துடன் ஆயுதப்ரயோகம் செய்ய ஆரம்பித்தனர். அவர்கள் செய்த வீரச்செயல்களைக் கண்டு பகைவர்கள்கூட வியந்து பேசலாயிற்று. தம் படைகளில் அனேகர் இறந்துபோயிருந்தாலும் அதைச் சிறிதேனும் லக்ஷயம்செய்யாமல் மேன்மேலும் எதிர்த்தார்கள். படைகளின் பகுதிகள் கோட்டையை நெருங்கவும் உடனே அவைகளைக் கோட்டைகளிலிருந்து வெளிப்படும் குண்டுகள் சின்னபின்னமாய்ச் சிதறியழித்தன. இறந்தவர்களின் உடல்கள், ரஷிய ஜப்பான் யுத்தத்தில் நடந்ததுபோல், உயிரோடிருந்து போர்புரிபவர்களுக்கு மறைவிடமாயிருந்தது. குண்டுபட்டுக் காயமடைந்தவர்களும், உயிர் நீத்தவர்களும் ஒருவர்மேலொருவர் விழுந்து போர் போராய்க் கிடந்தார்களாம். இவர்கள் பின்னிருந்து போர்செய்யும் காலாட்களுக்கு மறைவாக ஏற்பட்டார்கள் என்றும் அதிலிருந்து பின்னும் உக்ரத்துடன் போர்புரிந்தார்கள் என்றும் வேறுவழியில்லாமல் பெல்ஜியவீரர்களது குண்டு, இறந்தவர்கள்மீது பட்டு ஊடுருவிச் சென்றனவென்றும் சொல்லப்படுகின்றது. எப்

படியிருப்பினும் அந்த யுத்தம் மஹா பயங்கரமாயிருந்ததென்பதற் கையமேயில்லை. எதிரிகளிடமிருந்துவரும் பெருங்குண்டுகளால் நகரமும் மற்றும் கோட்டைகளும் சேதமாயின. எதிரிகளுக்கும் அநேக நஷ்டங்கள் ஏற்பட்டிருப்பினும் பின்வாங்கினவராகக் காணோம். நகரவாஸிகள் ஜெர்மானியருக்கு இடங்கொடுக்க உடன்பட்டு ஜெனரல் லீமானைத் தங்கள் நகரம் வீணாய்ப் பாழடையவிடவேண்டாம் என்று கேட்டுக்கொண்டார்கள். உடனே ராணுவ நகர அதிகாரிகள் சேர்ந்த ஒருஸபைகூட, அதில் ஜெர்மானியர், நகரமும் கோட்டைகளும் தங்கள் வசமாகிவிடவேண்டுமெனக்கேட்க, ஜெனரல் லீமான் நகரத்தைமாத்திரம் கொடுத்துவிடுவதாகவும் கோட்டைகளைக் கடைசிவரையில் விடுவதில்லையென்றும் தீரமாய்க் கூறினார். கொடுத்தால் எல்லாவற்றையும் கொடுக்கவேண்டும், இல்லாவிடில் ஒன்றும்வேண்டாம்; பார்த்துக்கொள்வோமென்று ஜெர்மானியர் கூறினார்கள். பிற்பாடு இரவில் லீயஜ்நகரத்தைக் காத்திருந்த பெல்ஜியப்படைகள் நகரைவிட்டு கோட்டைகளை அடையவும், ஜெர்மானியர் உள்ளே நுழைந்து பிடித்துக்கொண்டார்கள். நகர அதிகாரிகள் நகர் காக்கும் வீரர்களை (Civil Guards) தங்கள் ஆயுதங்களை எடுத்து வைத்து விடவேண்டுமென்று கேட்க, அப்படியே எல்லாரும் நிராயுதபாணிகளாய் இருக்கும்போது யாதொரு கஷ்டமுமின்றி எதிரியின் படைகள் பிரவேசித்தன. ஜெர்மானியப் படைகளின் தலைவராகிய ஜெனரல் வான் எம்மிக் என்பவர் நகராதிபரை அழைத்து

ஜனங்கள் ஒருவித தொந்தரைக்கும் உட்படமாட்டார்கள் என்று உறுதிமொழிகூறினர். நகரத்தலைவர்கள் லீயஜ் நகரத்தை ஜெர்மானியரின் குண்டுகளினின்று காக்கவே இப்படிச்செய்தார்கள் எனத்தெரிய வருகிறது. நகரத்திலிருந்த பெல்ஜியப்படைகள் நகரை விட்டுநீங்கி பின்னால் இருக்கும் மற்றப்படைகளுடன் சேர்ந்துகொண்டன. ஆனால் ஜெனரல் லீமான் மாத்திரம் நகரத்தைச் சுற்றியுள்ள கோட்டைகள் ஒன்றுக்குச் சென்று ஜெர்மானியரை முன்வர வொட்டாமல் வெகுதைரியத்துடன் தடுத்துக் கொண்டிருந்தார்.

நகரம் ஜெர்மன்படைகள் கையில் அகப்பட்டதும் மஹா கொடிய அவஸ்தைகளுக் குட்பட்டது. சில நாட்கள் எல்லாம் ஸரியாய் நடந்துவந்தன. பிறகு ஜர்மானியப்படைகள் தத்தம் இஷ்டப்படி செய்யத்தொடங்கின. தமக்குவேண்டியவைகளை ப்ரஜைகளிடமிருந்து பலவந்தமாய்ப் பிடுங்கிக்கொள்வதும், யுத்தத்தில் காயப்பட்டவர்களைக் கொண்டுவந்து சேர்க்கும் ஆஸ்பத்திரிகளாக ஸாதாரணவீடுகளை உபயோகிப்பதுமாயிருந்தனர். தங்கள் ஸாமான்களைக் காப்பாற்ற முயற்சி செய்தால் ப்ரஜைகள் பலவித உபத்திரவங்களை அனுபவிக்கநேரிட்டது. அவர்கள் வீடுகளில்உள்ள ஸொத்துக்களை ஜெர்மானியர் எடுத்துக்கொண்டதுமன்றி வீடுகளுக்கும் நெருப்புவைத்துவிட்டனர். வீடுகள் இல்லாமல்தவிக்கும் ஸ்திரீகள், புருஷர்கள், குழந்தைகளின் நிலைமைப்பற்றி என்ன கூறுவது! அநியாயமாய் அந்நகரம் பாழடைந்துவிட்டது.

ஜெர்மானியர் தங்களைக் கோட்டைகளினின்று

வரும் குண்டுகளினின்றும் காப்பாற்றிக்கொள்ள முய ன்றார்கள். அகழ்கள் தோண்டுவதும், தட்டிகள் கட்டுவதும், பீரங்கிகள் அமைப்பதுமாயிருந்தார்கள். அவர்கள் 17 அங்குல பீரங்கிகள்—அதுவரையில் அதன் வேலைத்திறம் ஒருவருக்கும் தெரியாது—கொண்டுவந்து நிறுத்தப்பட்டன. இவைகள் புதியவையாய் ரஷிய ஜப்பானிய யுத்தத்தின்பிறகு கண்டு பிடிக்கப்பட்டன. இவைகளிலிருந்து எவ்வளவு உயரமாயிருந்தாலும் வெகு தூரம் பலமான குண்டுகளைப் போடமுடியும். அதே ஸமயத்தில் எதிரியின் குண்டுகள் தம்மீதுபடாதபடி காக்கமுடியும். இத்தகைய ஆயுதங்கள் ஜெர்மானியர் கையில் இருந்தன. உடனே லீயஜ் நகரத்தின் கோட்டைகளின்மீது இவைகள் திருப்பப்படவும் அவை குண்டுகளைச் சொரியலாயின. கோட்டைகளில் யுத்தத்திற்குவேண்டிய ஆயுதங்களும் வெடிமருந்தும் குறையலாயின. உதவிக்கு வருவார்கள் என்றெண்ணி எதிர்பார்க்கப்பட்டிருந்தவர்களும் வரக்காணோம். ஆகவே கடைசியாகத் தம்மாலான வரையில் பார்ப்போமென்று தங்களிடமிருக்கும் ஆயுதங்களை வெகு கடுமையாகவே பிரயோகித்தார்கள். எங்கும் இருள்போன்ற புகையும் புகையின் ஸ்வாஸிக்க முடியாத நாற்றமும் இடிமுழக்கமுமே பரவியிருந்தன. இவைகளில் குண்டுபட்டு இறந்தவர் அனேகர். குண்டுசிதறின துணிக்கைகள் பட்டு இறந்தவர்களும், காயமடைந்தவர்களும், புகை நாற்றத்தை ஸ்வாஸிக்க முடியாது அவஸ்தைப் படுபவர்களும், அவஸ்தைப் பட்டு இறந்தவர்

களும் அனேகர். இப்படியெல்லாம் இருந்தபோதிலும் கோட்டைகளை மாத்திரம் விடாமல் தைர்யத்துடன் காத்துவந்தனர். லீயஜ் கோட்டையின் வீரர்கள் ஜெர்மானியருக்குச் சிறிதேனும் பின்வாங்காது குறைந்தபக்ஷம் இரண்டுவாரம்வரையில் எதிர்த்துநின்றனர்.

ஆனால் ஜெர்மானிய பீரங்கிகளுக்குமுன் எவ்வளவு பலத்தகோட்டையாயிருந்தாலும் லீயஜ் நிற்க முடியவில்லை. தங்களால் இனிகாக்க முடியாதென்று தெரிந்தவுடனே தங்கள் வெடிமருந்தைக் கொளுத்தி எதிரியின் கையில் அகப்படுவதைக்காட்டிலும் தாங்களே இறப்பது நன்றெனநினைத்தனர். மற்றொரு இடத்தில் தங்கள்கோட்டைகளையே தூளாக்கினார்கள். எங்கு கண்டாலும் வீரச்செய்கைமயமாகவேயிருந்தது. லீயஜ் நகருக்கு மேற்கிலுள்ள ஒரு கோட்டை மாத்திரம் இன்னம் பிடிபடவில்லை. இங்கு பெல்ஜியபடைத்தலைவர் ஜெனரல் லீமானும் இன்னும் சிலரும் இருந்தார்கள். இவர்களுக்கு அனேக காயங்கள் பட்டிருந்தது. இதையும் கவனிக்கவில்லை. லீமான் கால்மீது ஒரு சுவர் விழுந்ததினால் அது நசுங்கப்பட்டிருந்தது. அவரால் நகரக்கூட முடியவில்லை. பீரங்கிகளும் பிரயோசனமற்றவையாய் இருந்தன. எல்லாவற்றையும் அறிந்தவராய் தம் அந்தியத்தை எதிர்பார்த்து அதற்கு வேண்டியவைகளைச் செய்துவிட்டுத் தயாராய் இருந்தார். கடைசிநிமிஷத்தில் கோட்டையைத் தாமே வெடிமருந்தால் தகர்த்துவிட வேண்டுமென்றிருந்தார்.

பிறகுதான் பெரும்பீரங்கிவாய்களினின்று வெடிகுண்டுகள் மிகவும் பயங்கரமாய் இடைவிடாது வெளிப்

பட்டன. பம் பம் என்ற ஓசையே காதைச் செவிடு படச்செய்தது. கோட்டையின் மதில்களும் கோபுரங் களும் வெடிகுண்டுகளின் அதிர்ச்சியாலும் விசையா லும் நெக்குவிட்டுப்போயின. பலத்த காலாட்படை யொன்று கோட்டையைப் பிடிக்கத் தயாராய் நின்றது. குண்டுகள் விழுவது சற்றுநின்றதும் காலாட்கள் உட் பாய்ந்தார்கள். அவர்கள் போய்க்கொண் டிருந்தபோது வெடிமருந்து சாலையின்மீது ஒரு குண்டுபட அது உடனே பற்றி வெடித்து வந்தவர்களில் அனேகர் மாண்டனர். இனிப் போருக்குக் காரணமில்லை. இந்த வெடிக்குத் தப்பினவர்களுக்கு வேறுவழியும் இல்லை. ஜெர்மன் போர்வீரர்கள் எதையும் லக்ஷ்யம் செய்யாது உட்புகுந்தபோது அங்கே கீழே கறுத்தமுகத்துடன் பெல்ஜிய ஸேனைத்தலைவர் விழுந்திருப்பதைக் கண்டார் கள். "அவர் இறந்துவிட்டனர். அவரிடமட்டுமாவது மரியாதையாயிருங்கள்" என்று அவர்மீது குனிந்து காத்திருந்தபோர்வீரன் கூறினனும், உண்மையில்அவர் இறக்கவில்லை. ப்ரக்ஞையற்றிருந்தார். மூர்ச்சைதெ ளிந்தவுடன் தன்நிலைமையை உணர்ந்து தாம் தோற் றுச் சிறைப்பட்டதற் கறிகுறியாக தமது உடைவாளைக் கழற்றி ஜெர்மன் ஸேனபதியிடம் கொடுக்க அவர் அதை வாங்காமல் மறுத்து "உமதுவாள் ராணுவமரி யாதை கண்ணியங்களை மீறவில்லை; நீரே அதை வைத்துக்கொள்ளலாம்" எனலும் இதுவரையில் இள காத நெஞ்சினனை அவனும் தன்னையறியாமலே கண் ணீர் சிந்தினனும்.

லீமானும் அவனைச்சேர்ந்தவர்களும் தங்கள் காரி

யத்தை நிறைவேற்றினார்கள். தங்கள் தேசாபிமானத்தின் எல்லையை உலகமேயறியச் செய்தார்கள். அவர்கள் ஜெர்மானியரைப் பெல்ஜியத்தின் வழியாய்த் தடையின்றி செல்லவொட்டாமல் தடுத்து தமக்குப்பின்னால் இருக்கும் ப்ரான்ஸ்தேசத்தார் யுத்தத்திற்குத் தயாராய் வந்துநிற்கும்வரையில் எதிரிகளை வழிமறித்தார்கள். அவர்கள் நினைத்ததும் நிறைவேறியது. லீயஜ் நகரத்தின் முற்றுகையைப்போலும் அதில் பெல்ஜியர் காட்டின வீரதீர செயல்களைப்போலும் எப்போரிலும் காண்பதரிது. இந்த யுத்தத்தில் சுத்தவீரனென எல்லாராலும் புகழ்ப்பெற்று, தன் கீர்த்தியை நாட்டினது யாரெனக்கேட்டால் யாவரும் ஜெனரல் லீமான் எனச் சொல்வார்கள் என்பதற்கையமில்லை. பலவித கஷ்டங்கள் அநுபவித்தபோதிலும், ஸாதாரண ஜனங்களும் போர் வீரர்களும் லீயஜ் நகரத்திற்கே ஏக்காலும் அழியாத புகழைக் கொண்டுவந்தனரன்றோ? ஜெர்மானிய பெருவெள்ளத்தைத் தங்கள் வீரமாகிய பேரணையால் இவர்கள் தடுக்க முயன்றது உலகமே வியத்தற்பாலது.



# ஏழாம் அதிகாரம்

## நாமூர் - ப்ரஸல்ஸ்

ஜெர்மன் படைகள் லீயஜ்நகரை எதிர்க்கும் போது மற்றப்பகுதிகள் அதற்குவடக்கிலும் தெற்கிலும் சென்று சிறு பட்டணங்களைப் பிடிக்கத்தொடங்கின. லீயஜ் நகரம் யுத்தகாலங்களில் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்யமாய் அல்லது சிலர் அபிப்பிராயப்படி அதனினும் முக்யமான பட்டணமாயுள்ளது நாமூர் என்னும்நகரம். இது லீயஜ்நகரத்திற்குமேற்கே ம்யூஸ் நதியுடன் ஸாம்பர் என்னும் நதி ஸங்கமமாகுமிடத்தில் கட்டப்பட்டிருக்கிறது. நாமூருக்கருகில் தான் வடக்கு நோக்கிவரும் ம்யூஸ் நதிகிழக்கு நோக்குகிறது. ஸாம்பர் கிழக்குமேற்காய் ஓடிவிழுகின்றது. இந்நதிக்கரையில் சார்லிராய் முதலிய முக்யமான நகரங்கள் உள்ளன. இந்நதிதெற்கேயிருக்கும் மலைப்பாங்கான நாட்டிற்கு அடுத்தாற்போலிருக்கின்றதால் ஸைன்யங்கள் விரைவில் செல்வதற்கு மிகுந்த அனுகூலமாய் இருக்கின்றது. இந்நதி இப்படியிருக்க, தெற்குவடக்காய்ச் செல்லும் ம்யூஸ் நதியும் அதன் பள்ளத்தாக்குகளும் யுத்தகாலங்களில் படைகளைச் செலுத்தவேண்டுமாயின் சுலபமான மார்க்கமாயுள்ளன. இதன் கரைகளில் கற்குன்றுகளும் அவைகளின்மேல் அழகிய பலமானகோட்டைகளும் உண்டு. ம்யூஸ் நதிக்கரையே செல்வோமானால் லீயஜ், ஹூய், நாமூர், டைனண்ட் என்னும்பட்டணங்கள் இருக்கின்றன. அதாவது பெல்ஜியத்தின் தென்பாகத்தில் அரண்செய்யப்பட்டுள்ள முக்ய பட்ட

ணங்கள் இவைகள் தாம். எதிரிகள் எதிர்த்தனரா யின் இவ்வரண்களினின்றே அவர்களைத் தடுக்கவேண் டும். ப்ரஞ்சுக்காரர் பெல்ஜியப்ரதேசத்தையும் ப்ரஞ்சு நாட்டையும் காப்பாற்றவேண்டியிருக்குமாயின் தெற் கே பெல்வார்ட் (Belfort) முதல் நாமூர்வரையிலும் அங்கிருந்து நாமூர் முதல் லீயஜ்வரையிலும் தங்கள் படையை வெகு நீளம் அணிவகுத்து நிறுத்தவேண் டும். இப்படி நடந்திருக்குமாயின் ஜெர்மானியர் பெல் ஜியத்தின் மீது படையெடுத்திருக்கமாட்டார்கள். இம் மாதிரி செய்திருந்தால் ப்ரஞ்சு ஸைன்யங்கள் தனித் தனியாகப் பிரிக்கவேண்டியிருக்கும். அப்படி நடந் திருக்கும்பக்ஷத்தில் ஜெர்மானியர்ஸாவகாசமாய் தனித் தனியே ப்ரான்ஸிய ஸைன்யங்களை முறியடித்து விட் டிருக்கும். இதையெல்லாம் யோசித்தே ப்ரஞ்சு தள கர்த்தர்கள் பெல்ஜியத்தின் நேர் எல்லைக்குத் தங்கள் ஸைன்யங்களை அதிகம் செலுத்தாமல் விட்டுவிட்டுத் தங்கள் ராஜ்யத்தின் வடமேற்குப் பாகங்களைக் காப் பதற்காக வேண்டிய ஸைன்யங்களை வைத்துக் கொண்டு சிலஸைன்யங்களைப் பெல்ஜியத்தின் மத்ய பாகத்திற்கு உதவியாய் அனுப்பினார்கள். தெற்கே ஆல்ஸேஸ்—லொரேய்ன் பாகத்தில் ஜெர்மானிய ஸைன் யத்தின் முக்யபாகம் இருக்குமென்று அவ்விடத்தில் தங்கள் ஸைங்யங்களின் பெரும் பகுதிகளைக் கூட்டி னார்கள். நாமூர் முதலிய கோட்டைகள் மிக உறுதி யான வையென்று நினைத்து அக்கோட்டைக்கு இன் னும் வேண்டிய ஸைன்யங்களை அனுப்ப எண்ணினார் கள். ஆனால் லீயஜ் கோட்டை சீக்கிரத்திலேயே

பிடிக்கப்படும் என்பதை எதிர்பார்த்து ஜெர்மன் சைன்யங்கள் தடையின்றி ப்ரஸல்ஸ் முதலிய பட்டணங்களைப் பிடிக்கவும் வந்து சேரும் என்று அப்பக்கத்திற்கும் சைன்யங்களை அனுப்பினார்கள். இவைகள் தவிரவும் தங்கள் தேசத்திற்குள் வேண்டிய அரண்களையும் செய்து வைத்திருந்தார்கள். பெல்ஜியத்திற்கும் ப்ரான்ஸுக்கும் துணையாக உதவிசெய்ய இங்கிலாந்திலிருந்து ப்ரிடிஷ்படைகளும் வந்துகொண்டிருந்தன. இவைகள் எல்லாம் முதலிலேயே ஒன்று சேர்ந்திருந்தால் ஜெர்மானியர் ஓரடியாவது முன்வந்திருக்க மாட்டார்கள். ஆனால் பெல்ஜியர் தங்களுக்குதவியாக வரும் சைன்யங்கள் தங்களுக் கருகில் சேரும்வரையில் தங்களாலானமட்டும் எதிரிகளை வழி மறித்தது எல்லாராலும் சிலாகிக்கத் தக்கது. போர் தொடங்கின சிலநாட்களுக்கெல்லாம் ப்ரஞ்ச் சைன்யங்கள் லீயஜ் நகருக்குக் கிழக்கேவந்துகொண்டிருக்கின்றன என்றும் சார்லிராய் வழியாய் பெல்ஜிய சைன்யங்களோடு கூடிவிட்டன என்றும் ப்ரஞ்ச்சைன்யங்கள் பெல்ஜிநாட்டில் கொணரப்பட்டன என்றும் தெரிவிக்கப்பட்டது. ஆனால் அந்நாட்களில் ப்ரஞ்சுக்காரர் கொஞ்சம் தாமஸம் செய்துவிட்டனர்போலும்! ஜெர்மானியர் இஷ்டப்படி நடக்க இடமும் ஏற்பட்டுவிட்டது. ஒன்றன்பின் ஒன்றாய் நாமூர், லோவேய்ன், ப்ரஸல்ஸ், டைனண்ட் முதலியவைகள் எதிரியின் கையில் விழலாயின. ஏன் உடனே உதவியனுப்பப்படவில்லையென்று கேட்கலாம்? அதற்குக் காரணங்கள் சொல்வதும் மிகவும் கஷ்டமாயிருக்கின்றது. ப்ரஞ்ச் சேனை

இப்பாகத்தில் வெகு கொஞ்சம். இரண்டாவது யுத்த தந்திரங்களில் முக்யமான விஷயமாக இதையே கருதி ஞர்கள் என்று சொல்லவேண்டும். பெல்ஜியநாட்டைத் தம்வசப்படுத்தி ப்ரான்ஸுக்குள் புகும்போது அவர் களை எதிர்த்து வளைத்து அவர்களைப் பின்னாலே போக வொட்டாமல் வழிமறித்து தங்கள் முஸ்தீப்பு ஸ்தலங் களிலிருந்து வேண்டிய ஆயுத முஸ்தீப்புகளை நிறுத்தி விட எண்ணிஞர்கள் போலும்! தவிரவும் இங்கிலாந்தி லிருந்து அனுப்பப்பட்ட ஸைந்யங்கள் குறிக்கப்பட்ட காலத்தில் போகமுடியவில்லை. நாலைந்துநாள் தாமஸ மாயிற்று. ஆகவே நான் பெல்ஜியநகரங்கள் ஒன்றன் பின் ஒன்றுப் பிடிக்கப்பட்டன. முதலில் ஜெர்மன் ஸைன்யங்களின் தொகை கொஞ்சமா யிருந்தபோதி லும்வரவர அதிகப்பட்டு வந்தன. லீயஜ்நகரம் பிடிபட லாயிற்று. ஹுய் என்ற சிறுநகரமும் தகர்க்கப்படவே ஜெர்மானியருக்கு வழி தாராளமாய் ஏற்பட்டுவிட்டது. வடக்கு நோக்கியும் மேற்குமுகமாயும் ஜெர்மன் ஸைந் யங்கள் அணிவகுத்துச் சென்றன. அப்படி மேற்புறம் சென்று டைஞண்ட் பட்டணத்தைப் பிடித்தன. மற் றொன்று தான் நாமூரைத்தகர்த்துப் பிடித்துவிட்டது. மற்றொருபாகம் லோவேய்ன் வழியாக ப்ரஸல்ஸை நோக்கிச் சென்றது. இவர்கள் எங்கு சென்றுலும் பெல்ஜிய ஸைந்யத்தால் எதிர்க்கப்பட்டார்கள். அவர் கள் காட்டிய வீரத்திற்கும் தேசாபிமானத்திற்கும் எல்லையென்பதே கிடையாது. எவ்வளவு வீராவே சத்துடன் போர் புரிந்தபோதிலும் ஜெர்மன் ஒழுங்கு, சாமர்த்தியம், தொகை, யுத்ததந்திரங்கள், புதிய யுத்

தாயுதங்கள் ஆகிய இவைகளுக்குமுன் நிற்கமுடிய வில்லை. அவர்கள் பலத்திற்கும் வேகத்திற்கும் எவ ரும் நிகராகக்காணும். ஒருநாள் ஓரிடத்தைப் பிடித் தவர்கள் அடுத்தநாள் தங்கள் வேலையை முடித்துக் கொண்டு அடுத்த இடத்திற்குப் போயிருந்தார்கள். தங்கள் புதிய, பெரிய பீரங்கிகளிலிருந்து குண்டுகளைப் பரப்பி பெல்ஜியஸேனைகளைச் சிதற அடித்து தங்கள் குதிரைவீரர்கள் மகாஉக்ரத்துடன் முன்னே பாய்ந்து செல்ல, காலாட்படைகள் பின்னாலே தங்கள் கத்தி, துப் பாக்கி முதலியவைகளை உபயோகித்துக் கொண்டே சென்றார்கள். கிராமங்கள் தீக்கு இரையாயின. வயல் களும் தோட்டங்களும், ரமணீயமான வனங்களும் குடிசைகளும் மாடமாளிகைகளும் நாசமடைந்தன. தங்கள் வீடுகளிலிருந்தும் வயற்காடுகளி லிருந்தும் தப்பியோடின ப்ரஜைகளும் குண்டுபட்டு இறக்கலாயி னர். இவர்களில் தப்பினவர்கள் ஓடி இவர்களுக்காகத் தயாராயிருக்கும் ரயிலுக்குச்செல்ல இவர்கள் ப்ரஸல் ஸுக்குச் சென்றனர். அங்கே இவர்கள் எதிரிகளி னின்று பட்டகஷ்டங்களைச் சொல்ல அந்நகரிலிருந்த எல்லாருக்கும் கிலிபிடித்துவிட்டது.

இது நிற்க, பெல்ஜியப்படைகள் லோவேய்ன் நக ரில் நின்று எதிரிகளைத்தடுக்க முயன்றன. பெல்ஜியர் நின்றிருந்த இடம் அவர்களுக்கு அனுகூலமாயிருந்த போதினும், அவர்கள் எதிரிகளுக்குச்சிறிதும் வழி விடமாட்டாரெனக் கருதியிருந்தபோதினும் சிறிது நேரம் போர்நடந்ததும் இவர்கள் பின்வாங்கலானார் கள். முன்னணியில் ஜெர்மன் பீரங்கிவாயில்நிற்கலாத்ய

மில்லை. ஜெர்மனிக்குப் பெல்ஜிய நாட்டில் ஜயம் உண்டு என்றுமாத்திரம் முன்னமே தெரியும். அவர்கள் உயிரைச்சிறிதும் லக்ஷ்யம் செய்யாமலும் திரள்திரளாக போர் வீரர் இழந்துபோனதைக்கருதாமலும் இருந்து தங்கள் பீரங்கிகளை எங்கு குறிபார்த்து அடிக்கவேண்டுமோ அவ்விடம் திருப்பி, எதிரிகள் முன்னுக்குவந்தால் தங்கள் யுத்தயந்த்ரங்களினின்று வெடிகுண்டு மழை பெய்யச்செய்துவந்ததும் தவிர ஆகாயக்கப்பல்களும் அவர்களுக்கு அனுகூலமாக இருந்தன. அவர்களுக்குமுன் எவருக்கும் நிற்கமுடியவில்லை. எதிர்த்து நின்றால் நாசம் என்பதையறிந்தனர். அனேக படைப் பகுதிகள் ஜெர்மானியரால் நிர்மூலமாக்கப்பட்டன. கடைசியாக மிகுந்தவர்கள் ஆண்ட்வெர்ப் கோட்டைகளை நோக்கிச்சென்றனர். ப்ரஸல்ஸுக்குப் போகும் பாதை வெட்டவெளியாய்விட்டது. நாமூரிலும் இதே மாதிரிதான் நடந்தது. சிலர் அபிப்பிராயத்தின்படி இதுபாதொரு பாதுகாப்புமின்றி யிருந்தபோதிலும் இது பகைவர் வசத்தில் இவ்வளவு சீக்கிரத்தில் (இரண்டு நாளைக்குள்) வந்துவிட்டது ஆச்சர்யமாகத்தான் இருக்கிறது. இதனால் பெல்ஜிய ஸைந்யங்களும் துணைப் படைகளும் பின்னாலேயே வந்து வேறிடத்தில் எதிரிகளை எதிர்பார்க்கவேண்டியிருந்தது. இதே மாதிரி லோவெய்ன் நகரைப்பிடித்ததும் ப்ரஸல்ஸை எதிர்க்கச் சென்றார்கள். இதுபெல்ஜிய ராஜதானியா யிருந்த போதிலும் மிக்க பாதுகாப்பு ஒன்றுமில்லாமல் இருந்தது. நாமூர், லீயஜ் இக்கோட்டைகள் பிடிபட்டுவிடுமென்று தெரிந்தவுடன் பெல்ஜியகவர்ன்மெண்டார்ராஜ

ீக முறைப்படி ஆண்ட்வெர்ப் நகரம் ராஜதானியாக ஏற்படுத்தப்பட்டது. அந்நகரத்தார் எண்ணியபடி ஜெர்மானியர் அங்கும்வந்துசேர்ந்தார்கள். இதற்கு முன்னமே பெல்ஜிய அரசராகிய ஆல்பர்ட் தம் சேனையுடனிருக்கும்படி முன்சென்றார். அவருடைய மனைவிமாத்திரம் ஆண்ட்வெர்ப்புக்குச் சென்றார்கள். ப்ரஸல்ஸ் நகரமும் தன்னாலான முயற்சிகள் செய்துவந்தது. ஜெர்மன் குதிரைப்பட்டாளங்கள் உள்நுழையாதபடி ஆங்காங்கே உயர்ந்த கட்டிகள் எழுப்பப்பட்டன. இருபதினாயிரம் நகர்க்காப்பாளர் ஜெர்மானியரை எதிர்க்க யுத்த ஸந்நாகத்துடனிருந்தனர். நாமூரில் நடந்தது போலவே ப்ரஸல்ஸ்விஷயத்திலும் ஜெர்மானியர்வெற்றியடைந்தது வியக்கத்தக்கதாய் இருக்கிறது. எவ்வளவு தயாராய் இருந்தபோதினும் அரண்கள் இல்லாத பட்டணம் எப்படியும் எதிரிவசமாய் விடுமென்று எதிர்பார்க்கப்பட்டதாம். இம்மாதிரி ப்ரான்ஸுக்குப்போகும் வழியில் உள்ள பட்டணங்கள் எல்லாவற்றையும் ஒன்றன்பின் ஒன்றாகப் பிடித்தனர். மான்ஸ், சார்லிராய் முதலிய பல இடங்களிலும் பெரும்போர் விளைந்தன. சில சமயங்களில் பெல்ஜியரும் அவர்களுக்குத் துணையாக வந்த ப்ரெஞ்ச், இங்கிலிஷ் துருப்புகளும் பின்னிட்டன. சிலஸமயங்களில் ஜெர்மானியர் முழுமையும் முறியடிக்கப்பட்டு ஓடினர். ஆயினும் ஜெர்மன் ஸைன்யங்கள் எதற்கும் சளைக்காமல் இருந்ததும் தவிர இன்னம் அநேகபடைகளும் ஒத்தாசைக்கு வந்தனவாகையால் அவர்களே பிடியைவிடாமல் முன் வந்துகொண்டே இருந்தனர்.

இந்த யுத்தங்களில் இருதிறத்திலும் உண்டான சேதத்திற்கு அளவு என்பதே கிடையாது. ஆயினும் ஜெர்மானியருக்கே அதிக நஷ்டம் என்று சொல்ல வேண்டும். யுத்தகளத்திலும் அவர்கள் வெடிகுண்டுகளை வைத்துத் தகர்த்த இடங்களிலும் அவர்கள் மைன்களிலிருந்தே அநேகர் உயிரிழந்தனர். ஜெர்மானியர் செய்த அக்ரமங்களும் கொடுஞ் செய்கைகளும் பெல்ஜியருக்கு அவர்கள் மீதுள்ள உக்ரத்தை அதிகரித்தது. படையெடுத்த போர்வீரர்கள் கைகளினின்று புருஷர் பெண்கள் குழந்தைகள் விருத்தர்கள் எல்லாரும் அகப்பட்டனர். தப்ப வழியில்லை. தீக்கிரையான கிராமங்களும் கொள்ளையடிக்கப்பட்ட வீடுகளும் போர் வீரர்களால் ஆக்ரமிக்கப்பட்ட நகரங்களுமாய்ப் போய் விட்டன. ஐரோப்பாவில் மிகச்சிறந்ததென்று கருதப்பட்டுவந்த லோவேய்ன் நகரம்—சிறந்த சித்ர கூடங்களையும், சர்வகலா சாலையையும் மிகமேம்பாட்டைந்த புஸ்தகசாலையையு முடைய லோவேய்ன் நகரம்—தீக்கிரையாக்கப்பட்டது. அதிலுள்ள ப்ரஜைகள் துரத்தப்பட்டனர். அவர்களது அழகிய கட்டிடங்கள் அழிக்கப்பட்டன. தாங்களே தங்களைக்காக்கும் பொருட்டு அழித்துவிட வேண்டி யிருந்ததுபோக எதிரிகளே இப்படி நாசமுஞ்செய்தால் என்ன செய்வது? சில க்ராமங்களின் மீதும் வீடுகளின்மீதும் மண்ணெண்ணெயை ஊற்றி நெருப்புவைத்து விட்டனராம். ப்ரஸல்ஸ் பட்டணத்தில் தங்கள் முக்கிய கட்டிடங்களும் புராதன சின்னங்களும் சின்னபின்னப் படாமல் காக்கப்படும் பொருட்டு ராணுவங்கள் எதிரி

களுக்கு ஒன்றும் செய்யாமல் இருக்கும்படியும் அவர்கள் போய்விட்டால் எதிரிகள் அமைதியாய் வந்து நகரத்தை அழிக்கமாட்டார்களென்றும் நினைத்து எதிரிகளின் பட்டாளங்கள் உட்பிரவேசிக்கும்படி செய்தார்கள். அவர்கள் எண்ணம் சிறிதேனும் நிறைவேறவில்லை. அவர்கள் கட்டிடங்கள் நாசமாக்கப்பட்டதும் தவிர ஜனங்களும் பலவிதத்தில் உபத்திரவப்படுத்தப் பட்டார்கள். என்ன அநியாயம்! இது இப்படி இருக்க ஒரு இடத்தில் இவர்கள் போய்ச் சேர்ந்தவுடன் தங்களுக்கு வேண்டியவைகளை அவ்வூரார் சேகரித்துத்தரவேண்டும், தங்கள் ஸேனைகளில் ஒருவரையும் ஒருவிதத்திலும் தொந்தரைசெய்யப்படாதென்றும் அப்படி ஏதாவது ஏற்பட்டால் அதற்குக் காரணமாயிருப்பவர்கள் நிர்த்தாக்ஷண்யமாய் சுடப்படுவார்கள் என்றும் விளம்பரப்படுத்தப்பட்டது. அவர்கள் பிடித்த நகரங்கள் பகைவர்கள் திரண்ட திரவியம் போர்க்காணிக்கையாகச் சேர்க்கவேண்டியதென்றும் தெரிவித்தார்கள்; என்ன செய்வது பாபம். ப்ரஸல்ஸ், நாமூர் போன்ற நகரங்களில் பெருந்தொகைகள் கொடுக்கவும் கொடுத்தார்கள். இது மாத்திரம் அவர்களுக்குப் போதாமற் போய்விட்டது. எந்த நகரையோ கிராமத்தையோ அவர்கள்பிடித்துவிட்டார்களானால் வழக்கமாய் அதில்உள்ள கௌரவமுள்ள சிலரை ப்ரஜைகளின் நன்னடைக்கைக்காகப் பிடித்தார்கள். பெல்ஜியப் பிரஜைகள் ஒன்றும் செய்யாமலிருத்தல் மாத்திரம் போதாது. பெல்ஜியாராணுவப்படைகள் ஜெர்மன்படைகளை எதிர்க்கக்கூடாது. பாபம், ஒன்றும் செய்யமுடி

யாத—கிலியடைந்த ப்ரஜைகள் அமைதியாயிருந்த போதிலும் பெல்ஜியகுதிரை வீரர்கள் அருகில் நெருங்கி சுட்டார்கள் என்ற காரணம்சொல்லி சுடப்பட்டார்கள். மனத்தில் நினைக்கவொண்ணு உபத்திரவங்களைச் செய்தார்களாம். எந்தவேளையில் தம் தலைக்குக் குண்டு காத்திருக்கிறதோ என்று கவலையுடனிருப்பார்களாம். அனேக தேவாலயங்கள் கூட இரக்கமின்றி ஜெர்மனியாரால் அழிக்கப்பட்டதென்றால் அவர்களது கொடுமையைப்பற்றியும் கூறவேண்டுமோ? தங்கள் படைத்தலைவன் சற்று அப்புறத்திலிருந்தால் இவர்கள் இஷ்டம்போலக் கொள்ளையடிப்பதும் கொல்வதுமாயிருந்தார்களாம்! பகைவனல் கொல்லப்பட்டுக் கீழ்வீழ்வதைப் பார்க்கினும்தானே தன்மனைவி மக்களுடன் வீட்டுடன் இறப்பது மேலென்று வீட்டில் வெடிமருந்துவைத்திருப்பதாக ஒருவன் சொன்னனென்றால் ஜெர்மானியர் கொடுமை எப்படியிருக்கவேண்டும்! இவ்வாறு மனம் போனபடி திரிந்தபோதிலும் இவர்களுக்கும் கஷ்டங்கள் இவர்களை மீறியே வந்தன. எவ்வளவு ஸாமர்த்தியமாய் நடந்து கொண்டபோதிலும் கடைசியில் தங்களுக்கு நஷ்டமென்பதையறியாமல் கண்மூடித்தனமாய் நடந்து வந்தார்கள். தங்களுக்குமாத்திரமா? உலகத்திற்கே பெருநஷ்டத்தை விளைவித்தார்களன்றோ? உலகவியாபாரம் கைத்தொழில்களுக்கும் ஹானிவந்ததுமன்றி கோடானுகோடி ஜனங்களும் இந்த ரணகளத்தில் எதற்காகப் போர் புரிகிறோம் என்பதைக்கூட அறியாமல் உயிர்விடும்படியும் செய்துவிட்டனர். இதிருக்கட்டும். ஜெர்

மானியருக்கு நேர்ந்த கஷ்டங்கள் இவ்விடத்தில் யாவையென்று கவனிப்போம். பெல்ஜியர் வெகு எளி தாகத் தங்களுக்கு ப்ரான்ஸ் போய்ச்சேர வழிவிடுவார் கள் என்று எண்ணியிருந்தார்கள். ஆனால் பெல்ஜியர் இலேசில் வழிவிடுபவராகக்காணேம். லீயஜ் நகர் பிடி பட்ட பிறகுகூட அனேகந்தடவைகளில் ஸமாதான மாய்ப்போய் விடும்படி பெல்ஜியரைக் கேட்டார்கள். பெல்ஜியர் உண்மை வீரத்துடன்மறுத்து விட்டார்கள். ஜெர்மானியர் தங்களுக்கு இழைக்த நீங்கை மனதிற் கொண்டு இயற்கை ஆவேசத்துடன் அவர்களை எதிர்த் தார்கள். பெல்ஜியமன்னரும் மிக்க ஆர்வத்துடன் ஸாதாரண உடைதரித்து போர்வீரர்களுடன் சென்று அவர்களுக்கு வீராவேசத்தைப் புகட்டிவந்தனர். ஸா தாரண ப்ரஜைகளும் மிக்க தைர்யத்தையடைந்தவ ராய் தங்கள் உயிரையும் திரணமாய் மதித்து வயல் களையும் வேலிகளையும் தங்கள் மறைவிடமாகக்கொண்டு ஆயுதபாணிகளாய்க் காத்திருந்து ஜெர்மன் குதிரை வீரர்கள் (இவர்கள் சிறிதும் ஈவுஇரக்கமற்ற கன் னெஞ்சினர். பயங்கரமான தோற்றத்தினர். ஆனால், இவர்களே சுத்தபயங்காளிகள். இவர்களுக்கு உஹ் லான்கள் என்று பெயர்.) தோன்றினராளுல் உடனே அவர்களை வீழ்த்தித் தள்ளினர். சில ஸமயங்களில் இவர்கள் பெல்ஜிய உடைகளையே தரித்து தங்கள் ஸ்நேகிதர்கள் எனக் கருதுவார்கள் என்றெண்ணி அருகில்வந்ததும் தங்கள் துப்பாக்கியினுல் சுடுவார் கள். உடனே பெல்ஜியர்கள் வரப்பட்ட போதிலும் சற்றுநேரத்திற்குள் தைர்யமடைந்தவர்களாய் எதிரி

களின் நடுவில் பாய்ந்து அவர்களைத் துரத்தியடித்தார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. தவிரவும் ஜெர்மன் ஸேனைகளுக்குத் தகுந்த உணவும் கிட்டாமையால் அதனாலும் வருந்தினார்கள் என்று சொல்லப்படுகிறது. தங்கள் குதிரைப்படைகளையும் பெரும் பீரங்கிகளையும் பெல்ஜியத்தின் தென்பாகவழியாய்க் கொண்டுவருவதும் வெகு கஷ்டமாயிருந்தது. என்ன செய்வார்கள்! தங்களுக்கு உணவு இல்லாமலும் ஸைன்ய உதவி அதிகம் வராமல் இருந்ததினாலும் மிகுந்த கஷ்டப்பட்டனர். ஆனபோதிலும், வரவர ஸைன்யங்கள் இந்தப் பாகத்திற்குக் கொணரப்பட, இவர்கள் பக்கம் ஜயமுண்டாகத் தொடங்கிற்று. எங்குபார்த்தாலும் பீரங்கிமுழக்கமும், எரியும் கிராமங்களும், வெடிகுண்டினால் தகர்க்கப்படும் கட்டிடங்களின் காட்சியும், பயந்து இங்குமங்கும் ஓடும் பரிதபிக்கத்தக்க நிலையிலிருக்கும் குடியானவர்களும், எதிரிகளின் குதிரைப்பட்டாளங்களும், அவர்கள்பின் ஒன்றொன்றாய் மற்றப்படைகளும், இடிந்து விழுந்தபாலங்கள், இருப்புப்பாதைகள், ஆலயங்கள், மாளிகைகளும் இளைப்படைந்த பெல்ஜியவீரர்களும் இப்படி ஒன்றுக்கொன்று ஸம்பந்தமில்லாமல் நாசம் என்பதே அவதாரம் எடுத்து வந்ததுபோலிருந்தது.



# எட்டாம் அதிகாரம்

## ஆண்ட்வேர்ப் - பெல்ஜியரின் யுக்தி

நாமூர், ப்ரஸல்ஸ் இவைகளுக்கு ஆபத்து நேரிடு மென்று அஞ்சியே பெல்ஜிய துரைத்தனம் ஆண்ட் வெர்ப் வந்துசேர்ந்தது என்று முன்னமே கூறியிருக் கிறோம். லீயஜ், நாமூர் முதலியவைகள் எதிரிகளிடத் தில் சீக்கிரத்தில் அகப்பட்டதற்குக் காரணம் அவை கள் தற்கால யுத்தமுறைகளுக்குத் தகுந்தபடி காக்கப் படவில்லை என்றுதான் சொல்லவேண்டும். ஜெர்மானிய வெள்ளத்திற்குமுன் இவைகள் எல்லாம் நிற்கவில்லை. அதனாலேயேதான் பெல்ஜியரும் தம் கோட்டைகளை விட்டுப் பின்வாங்க நேரிட்டது. ஆனால் ஆண்ட்வெர்ப் நகரமோ பலத்த அரண்களையுடையதாயிருந்தது. செ யற்கையிலும் இயற்கையிலும் இதைச்சுற்றி எதிரிகள் வரவொட்டாமல் தடுக்கக் கூடுமானதாயிருந்தது. மற்ற இடங்களில் ஜெர்மானியர் தங்கள் பெரும் பீரங் கிகளையும் வெகு வேகமாய்ப்பொழியும் குண்டுகளை யுடைய சிறு யந்திரங்களையும் நிறுத்துவதற்கு வெகு அனுகூலமாயிருந்தது. தரைப்படையில் மிகச்சிறந்த வர்களாகவே யிருந்தார்கள். அவர்களுக்கு எதுவும் அனுகூலமாகவே யிருந்தது. ஆனால் ஆண்ட்வெர்ப் கோட்டைகள் எவ்வித பலத்த பீரங்கிகளுக்கும் சைன் யங்களுக்கும் இடங்கொடாத வண்ணம் அமைக்கப்பட் டிருக்கின்றன. நிலம் ஸமவெளியாயிருந்தபோதினும் எதிரிகளை எவ்வெவ்விதங்களில் அடக்கித் துரத்தி யடிக்கலாமோ, எவ்வெவ்விதங்களில் அவர்களுக்குச்

சேதம் விளைவிக்கலாமோ, அவ்வவ்விதங்களுக்கேற்ற படி அமைக்கப்பட்டிருந்தது. எதிரிகள் நகரத்தை முற்றுகைபோட்டால் தாங்கள் அம்முற்றுகையை லக்ஷ்யம் செய்யாமலிருக்கும்படியான ஸாமக்ரிகைள் சேர்த்து வைப்பதற்குரிய ஸவுகர்யங்கள் இருந்தன. எதிரிகள் உள்நுழைவதற்குச் சுரங்கமுதலானவைகள் செய்வார்களோவென்று அவைகளைத் தடுக்கத்தகுந்த உள்ளறைகளும் இருந்தன. தவிர இது கடற்கரையோரமான ஷேல்ட்நதி தீரத்தில் உள்ள பட்டணமாகையால் கடற்படைகளும் உதவியாவதற்கு இருந்தன. இதன் ஒருபாகம் கடல்மட்டத்தினும் தாழ்ந்ததாயிருந்தபடியால் கடல் உள்ளேவராதபடி அணைபோடப்பட்டு தடுக்கப்பட்டிருந்தது. லீயஜ் நகரத்தைச்சுற்றிலும் ஆறு பெரியகோட்டைகளும், ஆறு சிறிய கோட்டைகளும், நாமூரைச்சுற்றி நான்கு பெரியகோட்டைகளும், ஐந்து சிறியகோட்டைகளும் இருந்ததுபோலவே ஆண்ட்வெர்ப் நகரத்தைச்சுற்றிலும் கோட்டைகள் கட்டப்பட்டிருந்தன. ஆண்ட்வெர்ப் நகரைச் சூழ்ந்து ஒரு சுற்றுமாத்திரமல்ல ; இரண்டு சுற்று கோட்டைகள் அமைக்கப்பட்டிருந்தன. இக்கோட்டைகளின் இடையிடையே பலத்த பீரங்கி மேடைகள் கட்டப்பட்டு அவைகளில் பெரும் பீரங்கிகள் ஏற்றப்பட்டிருந்தன. வெளிச்சுற்றில் பத்தொன்பது பலத்த கோட்டைகளும் உட்சுற்றில் தெற்கு கிழக்கு இப்பாகங்களில் ஏழு கோட்டைகளும், மற்ற பாகங்களில் ஐந்து பலத்த கோட்டைகளும் அமைக்கப்பட்டுள்ளன. இவைகளில் நகரத்தைப்பாதுகாப்பதற்கு வேண்டிய தகுந்த ஸைன்

யங்களையும் தயாராய் வைத்திருந்தார்கள். இந்நகரமே ஐரோப்பாவில் உள்ள மிகச்சிறந்த அரண்களில் முக்கியமானது. இதை இவ்விதம் காத்து பலப்படுத்த வேண்டியிருக்கக் காரணம் என்னவென்றால் இதுவே ராஜ்யத்திற்கு முதல் அரணாகவும் எவ்வித ஸந்தர்ப்பங்களுக்கும் பாதுகாவலையடையக்கூடிய இடமாகவும் கருதினார்கள். இதுபற்றியேதான் பெல்ஜிய கவர்ன்மெண்ட்கூட இவ்விடம் வந்து சேர்ந்தது. லீயஜ் நாமூர் கோட்டைகள் விஷயம் வேறு விதமானது. அவைகள் எதிரிகளை வரவொட்டாமல் தடுப்பதற்குமாத்திரம் ஏற்பட்டனவேயன்றி கடைசிவரையில் நின்று நாட்டின் பாதுகாப்பிற்கு ஏற்பட்டனவல்லவென்று சொல்லப்படுகிறது. ஆகவே லீயஜ் நாமூர் முதலியவைகள் ஜெர்மானியர் கைவசமாய்விட்டன என்று கேள்விப்பட்டபோது சிலருக்கு ஆச்சர்யத்தை விளைவித்தனவேனும், உண்மையையுணர்ந்த சிலருக்கு இது எதிர்பார்த்தவண்ணம்தான் நடந்தது என்று சொல்வார்கள். ப்ரஸ்ஸல்ஸ் நகரில் ஜெர்மானியர்வந்து சேர்ந்த பிறகும்—ஏன், அதற்கு முன்னமேயும்—ஆண்ட்வெர்ப் கோட்டைகளை அதிக பலப்படுத்தினதுமன்றி எதிரிகள் வந்தால் அவர்கள் நிற்பதற்குக்கூட இடமில்லாமலிருக்கும்படி செய்தனர். கோட்டைகளுக்கு வெளியிலுள்ள மரம் செடிகள், சிறு வனங்கள், வீடுகள், வயற்காட்டிலிருக்கும் குடிசைகள் இவைகளை அழித்து எதிரிகள் ஒளிந்து தாக்கும்படியான வகையே ஏற்படாதவண்ணம் செய்ததும் தவிர ஒவ்வொன்றுய்த் தங்கள் இருப்புப்பாதைகள் பாலங்களையே தகர்



ஸர் ஜான் ஜெலிகோ, இங்கிலீஷ் கப்பல்படைத் தலைவர்



ஜெனரல் ஜாப்ரே, பிரெஞ்சுப்படைத் தலைவர்



ஜெனரல் வான் க்ளூக், ஜெர்மன் தளகர்த்தர்



எர்ல் கிச்சனா

த்து விட்டார்கள். அங்கங்கே அகழ்கள் தோண்டப் பட்டதுமன்றி உறுதியான மதில்களும் எழுப்பப்பட் டன. இதனுடனே இங்கிலாந்திலிருந்து அனுப்பப்பட்ட ராயல் மேரீன்ஸ், ராயல் நேவி என்னும் கப்பற்படைகள் வந்து சேர்ந்தன. ப்ரிடிஷ் எக்ஸ்பெடிஷனரி போர்ஸ் (British Expeditionary Force) என்னும் ராணு வப்படைகளைச் சேர்த்து ப்ரான்ஸ், பெல்ஜிய நாடு களுக்கு அனுப்பியிருந்தபோதிலும் ஆண்ட்வெர்ப் நகரத்தின் பாதுகாவலாய் வேறுஸைன்யங்களை அனுப் பவேண்டிய ஸந்தர்ப்பம் நேரிட்டுவிட்டது. அந்த ஸைன்யத்தில் சேர்ந்தவர்கள் மிக்க பயிற்சியையடை ந்து ரணகளத்தில் நேரே எதிரிகளைத் தாக்கிப் போர் செய்து ஜயம் கொண்டுவரக் கூடியவர்களாதலால் அவர்களை அனுப்பமுடியவில்லை. ஆண்ட்வெர்ப் நகரம் எதிர்க்கப்படும்பக்ஷத்தில் கோட்டைகளில் நின்று நக ரைக் காப்பதற்கும், ஸாத்யமான காலங்களில் வெளி யிற்சென்று எதிரிகளை விரட்டியோட்டுவதற்கும் தகு ந்தவர்கள் இக்கப்பற்படையைச் சேர்ந்தவர்கள் எனத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாய் வந்து சேரலாயினர்.

இவர்கள் வந்துசேர்ந்ததைக் கண்ட நகரத்தார் இனித்தமக்கு யாதொருபயமுமில்லையெனக் களிக்கலா யினர். ஏனெனில் இவர்கள் தொன்றுதொட்டே மிக உறுதியும், கடமைப்பாடும், தீரமும் கொண்டுள்ளவர்க ளாய் இருக்கிறார்களாம். இப்படிப் பலவிதமான காவல் களும் ஏற்பட்டிருந்தன. நகரத்திற்கு வெளியே எதிரி கள் யாராவது ஒற்றுபார்க்க வருவார்களோவென்று பெல்ஜிய வீரர்கள் மேற்பார்வையிட்டு வந்தனர்.

## ஐரோப்பிய மஹா யுத்தம்

ப்ரஸல்ஸ் நகரைக் கைப்பற்றிய பிறகு ஜெர்மன் ஸைன்யங்கள் பிரிந்து ஆண்ட்வெர்ப்பை நோக்கியும் மேற்கு முகமாயும் போயினவாம். ஆண்ட்வெர்ப் கோட்டைகள் ஸமீபத்தில் கிரமமாய் வந்துசேர்ந்தன ; மற்றநகரங்களில் நடந்ததுபோலவே யுத்தமும் தொடங்கிற்று. ஆனால் மற்றவைகளைவிட மிக்க உக்ரமாயும் கோரமாயும் யுக்திபொருந்தியதாயும் இருந்தது. ஜெர்மானியருக்கு முன்பிடித்தநகரங்களைக் காட்டிலும் இதைப் பிடிப்பது மிகக் கஷ்டமாயிருந்தது. ஏற்கெனவே ஆண்ட்வெர்ப்பின் உள்ளேவரும் வழியில் உள்ள பாலங்கள் உடைபட்டுப் போயிருந்தன. ஜெர்மானியர் இடையிலுள்ள ஷெல்ட் நதி முதலிய நதிகளைக் கடக்கவில்லை. இதனிடையே ஸெப்ளின் ஆகாயவிமானங்கள் வழியாய் உட்சென்று கோரமான—பயங்கரமான வெடிகுண்டுகளைப்போடவும் அதனால் சிறுவீடுகளும், பெருங்கட்டிடங்களும் சேதமாயின. ஜனங்களுக்கும் பீதி யதிகமாகி நகரத்தைவிட்டு ஓடத் தலைப்பட்டனர். அனேகர் ஹாலந்திற்கும், மற்றும் அனேகர் ப்ரான்ஸ் தேசத்திற்கும் இன்னும் பலர் இங்கிலாந்திற்கும் சென்றனர். சென்று அந்தந்த தேசங்களில் தம் பரிதாப நிலைக்கிரங்கி ஆதரித்த அவ்வூரார்களுடன் தங்கியிருந்தனர். இவர்கள் பட்ட கஷ்டங்கள், இவ்வளவு அவ்வளவு என்று சொல்லிமுடியாது. ஆண்ட்வெர்ப்பை நோக்கி ஜெர்மன் ஸைன்யங்கள் வருவதையறிந்து பெல்ஜிய கவர்ன்மெண்ட், உடனே கடற்கரையோரமாயுள்ளதும் இங்கிலாந்துக்கு மிக்க ஸமீபத்தில் உள்ளதுமாகிய ஆஸ்டெண்ட் என்னும் பட்டணத்திற்கு மாற்

றப்பட்டது. பிறகு அவ்விடத்திற்கும் ஆபத்து நேரி டும்போலிருப்பதை அறிந்துதான் பெல்ஜிய கவர்ன் மெண்ட் தம் தேசத்திலே இருக்கவும் முடியாதவராய் ப்ரான்ஸ் தேசத்திலுள்ள ஹாவர் என்னும் துறை முகத்திற்கும் மாற்றப்பட்டது. நாம் நளன், ஹரிச்சந் திரன் கதைகளைப் படித்ததுபோல் இப்பொழுது நம் கண்கூடாக ஸத்தியத்திற்காகப் பாடுபட்டுழைத்து நாடு நகரிழந்து வருந்துபவர்களாகிய பெல்ஜிய நாட்டு ப்ரஜைகளையும் மன்னனையும் காண்கிறோம். முன் சொன்ன பிரகாரம் ஜெர்மானியர் வெகு மும்முர மாகவே எதிர்த்தார்கள். கோட்டைகள் வெகு தீர மாய்க் காக்கப்பட்டனவேனும், எதிரிகள் விடுபவராக வில்லை. ஆண்ட்வெர்ப் நகரை முற்றுகைபோட்டுப் பிடிப்பதெனத் தீர்மானித்தனர். இதன் முதலில் அவர் களுக்கு அனேகமாய் பெருநஷ்டங்கள் ஏற்பட்டிருந்த தேனும் வரவர தாம் லீயஜ் முதலிய கோட்டைகளைத் தகர்த்த யுத்த தளவாடங்கள்—பெரிய 17 அங்குல க்ருப் பீரங்கிகளைக் கொண்டுவந்து, பலமானமேடைகள் மீது அவைகளை அமைத்து ஒவ்வொரு கோட்டையாய்ப் பிடிக்க யத்தனித்தார்கள். வெகுகாலம் எதிரிகளி னின்று காத்துக்கொள்ளலாமென்றும், வேண்டிய மனி தர்கள்நகரைக் காக்கும்பொருட்டு முன் செல்கிறார்க ளென்றும் சொல்லப்பட்டது. ஒருவருஷம் முற்றுகை போட்டபோதிலும் தளர்ச்சி யடையாமலிருப்பதற்கு வேண்டிய வஸ்துக்களும் யுத்த தளவாடங்களும் பெல் ஜியருக்கு ஆண்ட்வெர்ப்பில் உள்ளனவென்றும் சொல் லப்பட்டன. என்ன சொன்னபோதிலும் ஜெர்மானிய

பீரங்கிகளின்முன் நிற்பது கஷ்டமாயிருந்தது. மற்ற இடங்களில் ஜெர்மானியர் தோல்வி யடைந்தபோதி லும், ஆண்ட்வெர்ப் நகரத்து அருகில் உள்ள ஸைன் யங்களுக்கு ஜயமே வந்துகொண்டிருக்கக் காரணங்க ளிருந்தன. தாங்கள் பிடித்திருந்த கோட்டைகளி லிருந்துஸைன்ய பலம் வரவர அதிகப்படுத்தப்பட்டது. உள் சுற்றுக் கோட்டைகளும் பிடிபட்டன. க்ரூப் பீரங் கிகள் முன், பெல்ஜியர்கள் தங்கள் தைர்யத்தையும் அஞ்சா நெஞ்சத்தையும் காட்டினார்கள். ஜெர்மானிய ருக்கு எந்தெந்த விதத்தில் தீங்கிழைக்கலாமோ அப் படி எல்லாம் செய்தார்கள். நகரத்திற்குப் பாதுகாவ லாய் ஒரு பக்கம்—கடல் மட்டத்திற்குக் கீழிருக்கும் பக்கம்—அணை போடப்பட்டிருந்தது என்று சொல்லி யிருக்கிறோமே, அப்பக்கத்து அணையை வெட்டித் திறந்து விடவும், ஜெர்மன் ஸைன்யங்களுக்கு சேதம் உண்டாயிற்று. ஜலத்திலிருந்து போர்புரிய முடிய வில்லை; திணறினார்கள். பெல்ஜியர் அப்படியல்ல; பட் குகளின் மீதேறி வெகு விரைவாயும் சுலபமாயும் ஜெர் மானியரின்மீது குண்டுகளைப் பிரயோகித்தார்கள். முன்னணி வெகு ஒழுங்காய் நின்று ஜெர்மானியரின் ஸைன்யங்களுக்கு உத்தரம் செய்ய, அவர்கள்மறைவில் மற்ற ஸைன்யங்கள் வெகு ஒழுங்காகவும் யாதொரு ஆரவாரம் பரபரப்பு ஒன்றுமில்லாமலும் பின்சென்று மற்றக் கோட்டைகளைக் காக்கச்சென்றார்கள்.

ஆனால் ஆண்ட்வெர்ப் நகரத்தில் ஜனங்கள் என் பதே கிடையாது. கடைசியில் ஆண்ட்வெர்ப்பைக் காத் திருந்த சிறுஸேனையும் சென்றபோது வீடுகள் எல்லாம்

காலியாகக்கிடந்தன. முற்றுகை ஆரம்பித்தபோதே, அதற்கும் முன்னமேயே, ஆயிரக்கணக்கான ஜனங்கள் வெளிக்கிளம்பிவிட்டார்கள் என்று சொல்லியிருக்கிறோம். ஜெர்மன் ஸைன்யங்கள் பட்டணத்தின் கோட்டைகளைத் தகர்க்கவேண்டிய யுத்த தளவாடங்களைச் சேர்த்துவிட்டு குண்டு ப்ரயோகத்திற்குமுன்புஜெர்மன் தளகர்த்தர் கடைசி முறையாக விதிப்படி நகராதிபருக்குத் தாம் நடத்தப்போவதைத் தெரிவித்தார். இதற்குள் அநேகர் வெளியேறிவிட்டனர். பிறகு அவர்கள் சொன்னபடியே கொடிய பீரங்கிகளினின்று குண்டு ப்ரயோகம்செய்ய ஆரம்பித்தனர். பெல்ஜிய ஸைந்யங்களும் தங்கள் மன்னன் தங்கள் தலைமையை வஹித்துநிற்க கடைசிவரையில் போர்புரிந்தார்கள். இனிமுடியாதென்று தெரிந்துகொண்டதும் நகரை விட்டு அவர்களும் நீங்கினார்கள். ஜெர்மன் ஸைன்யங்கள் ஜயகோஷத்துடன் உள்பிரவேசிக்கலாயின. ஆனால் அவர்கள் எதிர்பார்க்கப்பட்டதுபோல் உடனே வரவில்லை. பாழடைந்த நகரத்தில்—ஜனங்களேயில்லாமல்—வீடுகளும் கட்டடங்களும் தகர்ந்துபோய்—சிறிதேனும் கேட்பாரற்ற ஆண்ட்வெர்ப் நகரத்தில் நுழைந்தார்கள். அவர்கள் நுழைந்து சும்மாயிருந்தார்களா ? பின்னிட்டுச் செல்லும் பெல்ஜிய ஸைன்யங்களின்மீது கூரிய முனைகொண்ட குண்டுகளை ப்ரயோகித்தார்கள் எனத் தெரிகிறது. அவர்கள் ஆண்ட்வெர்ப்பில் ப்ரவேசிப்பதைப் பார்த்தவர் ஒருவர் எழுதுகிறார் :— ஆண்ட்வெர்ப் நகரத்தின் ராணுவ கவர்னராய் நியமிக்கப்பட்ட ஜெனரல் வான் ஷாட்ஸ், அட்மிரல்

வான் ஷ்ரீடர் இவர்கள் முன்பாக அறுபதினாயிரவீரர் சென்றனர். இவ்விருவரும் பொலிந்து விளங்கும் தம் உத்யோகஸ்தர்கள் புடைசூழ அரண்மனைவாயி லில் குதிரையின்மீது ஆரோஹணம் செய்திருந்தனர். ஜனஸந்தடியில்லாத தெருக்களின் வழியாய் ஐந்து மணிநேரம் இப்பெரிய கூட்டம் செல்லவும் அவர்கள் நடையின் இடிமுழக்கத்தில் வீடுகள் அதிர்ந்தன. எஃகு காயுதம்வளைந்து நின்ற வரிசைகளின்கீழ் சாம்பல்நிற உடைகளுடன், அணியணியாகவும்படையின்பின்படை யாகவும், ஒன்றன்பின் ஒன்றாய்ச் செல்வதைக் கண்டு கண்களும் வலிக்கத் தொடங்கின. அவர்கள் செல் லும்போதே கீதங்கள்பாடவும், அவர்கள் போகும் வழியிலுள்ள உயர்ந்த மாடிகளிலிருந்து எதிரொலி கிளம்பிற்று. ஒவ்வொரு ராணுவப் பகுதிக்குமுன் அதைச்சேர்ந்த வாத்யமும் கொடிகளும் சென்றன. இருட்டினதும் விளக்கேற்றப்பட்டது. பேரிகைகளின் முரசவாத்தியமும் சங்கத்வனி போன்றுவரும் போர் முழக்கமும், அணிவகுத்துச் செல்வோரது காலடி யோசையும் சேர்ந்து தீவர்த்தியுடன் யுத்தப்பயிற்சி செய்வது அப்பொழுது ஞாபகம் வந்தது. காலாட்க ளுக்குப் பின்னாலேயே பீரங்கிப் படைகள் வரிசை வரி சையாய் தடதடவென்று போனதைப்பார்த்தால் இவை களைச் செய்வதற்கு எஃகும், வேண்டியநேரமும், க்ரூப் புக்கு எங்கிருந்து கிடைத்தன என்று ஆச்சர்யமடைய வரும். இச்சைன்யங்கள் சென்ற இரண்டுவாரமாக இடைவிடாது போர்முனையில் நின்றதுமன்றி 36-மணி நேரம் நகரத்திற்குள் மரணத்தையும் நாசத்தையும்

செய்திருக்கின்றன; ஆயினும் குதிரைகள் வெகு ஜாக்ர தையாய்ப் பார்க்கப்பட்டு வந்திருக்கின்றன. இப்பெரும் பீரங்கிகளுக்குப்பின்னால் விசைப் பீரங்கிவண்டிகள் சென்றன. இதன் பின்னே போர்முரசு, பேரிகைகள் முழங்கவும் குதிரைப்படைகள்—வாளேந்தியவர்களும், ஈட்டியேந்தியவர்களும் தங்கள் தங்களுக்குரிய பலநிற உடைகளுடனும் தொப்பிகளுடனும் சென்றனர். இத னுடன் எல்லாம் முடியவில்லை. இக்குதிரை வீரர்களுக் குப் பின்னால் கடற்படை வீரர்களும் அணிவகுத்துச் சென்றனர். பிறகு பவேரியா, ஸாக்ஸனி முதலிய நாட்டுப்படைகளும் பிறகு ஆஸ்ட்ரியப் படைகளுமாக வும் எல்லாவற்றிற்கும் பின்னால் சில போலீஸ் வீரர் களுமாகச் சென்றனர்.

இவர்கள் இப்படி வந்து உள் சேருவதற்கு முன் னர் நகரவாசிகளைத் தொந்தரை செய்யாமல் மிக்க மரி யாதையாய் நடத்தவேண்டியது என்றும், வெளியே றின ப்ரஜைகளுக்கு நல்வார்த்தைகள் சொல்லி உள் ளழைத்து பழையபடியே தங்கள் தொழில்களில் பிர வேசிக்கலாமென்றும் தெரியப்படுத்தினார்கள். தவிர வெளியிலிருக்கும் கோட்டைகளை தங்கள் கையில் ஒப்பு வித்துவிடுவதாயிருந்தால் நகரத்தை விட்டுவிடுவதாக வும் நகராதிபருக்கு அறிக்கையிடப்பட்டதாம். ஆண்ட் வெர்ப் நகரம் பிடிபட்டதில் இருதிறத்தாருக்கும் வெகு சேதமும் நஷ்டமும் உண்டாயின. ஆயினும் பெல்ஜி யர்கள் தங்கள் யுக்தியையும் மனோதிடத்தையும் வல்ல மையையும் ஒழுங்கையும் காண்பித்தார்களல்லவா?

---

## ஒன்பதாம் அதிகாரம்

### ஜெர்மானிய வெள்ளம்—

### ப்ரிடிஷ் - ப்ரஞ்ச் அணை—ஜெர்மன் பின்போக்கு

ஆண்ட்வெர்ப் நகரமட்டும் பிடிக்கப்பட்டது என்றும் மற்றைய இடங்களில் ஸம்பவங்கள் ஒன்றும் நிகழவில்லையென்றும் நாம் நினைக்கக்கூடாது. பாரிஸைப்பிடித்து ப்ரான்ஸின் வாயை யடக்கவேண்டுமென்னும் கொடிய எண்ணத்தை மனதில்வைத்து அதற்காகவே ஏற்பாடுசெய்தார்கள் என்பதை நாம் அறிந்துள்ளோம். லீயஜ், நாமூர், ப்ரஸல்ஸ் இவைகள் பிடிபட்டதும் — அதற்குமுன்பும்கூட — ஸைன்யங்களின் பகுதிகள் ப்ரஞ்ச் எல்லையை நோக்கி வந்துகொண்டிருந்தன. ப்ரான்ஸுக்குப்போகும் பாதைகள் எல்லாவற்றையும் பிடித்துக்கொண்டு வழியிலுள்ள கிராமங்களில் இருக்கும் குடிகளைப்பயமுறுத்தி அவர்கள் வீடுகளுக்கு அவர்களையே நெருப்பிடும்படி செய்து பெரிய பட்டணங்கள் சிறிய நகரங்கள் என்பதைப்பாராமலும், இதுதேவாலயம், இது கல்விச்சாலை என்பதைக் கருதாமலும் நிர்த்தூளி செய்துகொண்டு வந்தார்கள். லக்ஸம்பர்க்குக்குவடக்கே ஜெர்மானியர் அதிகமாய் யாதொரு கஷ்டமுமின்றி முன்வந்துகொண்டிருந்தார்கள். ஆனால் இவர்களுக்கு முன்னால் அணியணியாக நூற்றைம்பது முதல் முன்னூற்றைம்பதுமைல் தூரம் அணிவகுத்து ப்ரஞ்ச்-ப்ரிடிஷ் ஸைன்யங்கள் நிற்பதை அவர்கள் அறியவில்லை. பெல்ஜிய எல்லையில் வரிசைவரிசையாக உள்ள கோட்டைகளும் அதன் பின்னால் உள்ள பலத்த ப்ரஞ்ச்



ஹைதராபாத் நிஜாம் அரசர்

கோட்டைகளும் ஜெர்மன் படைகளைத் தடுத்து நிற்க வேண்டும். ப்ரஞ்ச் ஸைன்யங்களுக்கும் ஜெர்மன் படைகளுக்கும் சார்லிராய் யுத்தம் நடக்கவும் அதுவே முக்யமாகக் கருதப்பட்டது. அந்தப் போரில் ஸம்பந்தப்பட்ட தொகையும் அதில் இருந்த மனஉறுதியும் வெகு காலமாய் எங்கும் கிடையாது. ப்ரஞ்சுக்காரர் தங்களால் முடியாதென்று ஆதியில் நினைத்திருந்த இடத்திலேயே ஜெர்மானியரைத் தடுக்க முடிந்தது. ப்ரிடிஷ் படைகளுடன் இப்பொழுது தாங்கள் இருக்கிற இடத்தில் உறுதியாய்ப் பற்றியிருக்கிறார்கள் என்று தெரிய வந்தது. மான்ஸ் என்ற இடத்தில் முக்யமாய் ப்ரிடிஷ் படைகளுக்கும் ஜெர்மானியருக்கும் வெகுகடுமையான போர் நடந்தது. இந்நகரம் சார்லிராய்க்கு 18-மைல் மேற்கிலிருக்கிறது. கோர்ட்ரேமுதல் கிவட்வரையிலும், அங்கிருந்து தெற்கே நான்ஸிவரையிலும் கோட்டைகள் ஒருவரிசையும், அதற்குப்பின்னால் லீல்—வாலன்ஷீன்ஸ்—மௌபேஜ்—மேஸியர்ஸ் கோட்டைகளும், அதன் பின்னால் டோவே—காம்ரே—ஆபிஸ் வரிசைக் கோட்டைகளும், அதன் பின்னே ஆராஸ்—ஸெண்ட் க்வெண்டின்—லேயான்—ரீம்ஸ்—ஷாலன்ஸ் வரிசைகளும் உள்ளன. இவைகளையும் கடந்தால் ஸாமே, ஆய்ஸ்நதிகளினூடே ஸாய்ஸன்ஸ் வழியேயுள்ள வரிசைக் கோட்டைகளுமுண்டு—இப்படி இருக்கும் பலத்தகோட்டைகள் வழியாய் தாண்டித்தான் பாரிஸ் நகருக்கு ஸைன்யங்கள் வரலாம். இவைகள் எல்லாம் மிக்க பலத்த கோட்டைகள். ஐரோப்பிய தேச சரித்திரங்களில் பேர்போனவை. அனேக முற்றுகைகளை

யும் யுத்தங்களையும் கண்டவை. பெல்ஜியத்தில் நுழைந்த ஜெர்மானியர்கள் ஆங்காங்கே ப்ரஞ்ச் - ப்ரிடிஷ் ஸைன்யங்கள் அணிவகுத்து நிற்கவும் பலங்குன்றினார்கள். பல்லாயிரக்கணக்காய் அங்கங்கே நடந்த போரில் மாண்டார்கள். அநேக ஸேனைத்தலைவர்கள் காயமடைந்து ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோகப்பட்டனர். ஜெர்மன் இளவரசனுக்கும் காயம்பட்டுவிட்டதாம். இதற்கெல்லாம் ஜெர்மானியர் சளைக்கவில்லை. எவ்வளவு உயிர்ச்சேதமானாலும், எவ்வளவு தங்கள் தொகை குறைந்துபோனாலும் பயப்படாதவராய் முன்வந்து கொண்டேயிருந்தார்கள். தங்கள் ஸைன்யங்கள் ருஷியாவின்மீது செல்லுவதைச் சற்று நிறுத்தி மேற்கே திரும்பினார்கள். இதனிடையே பல காரணங்களைக் கொண்டு, ப்ரஞ்ச் ராஜதானி கடற்றுறை முகப்பட்டணமாகிய போர்டோவுக்கு மாற்றப்பட்டது. ஊரிலிருப்பவர்கள் வேண்டுமானால் வெளியேறலாமென்று தெரிவிக்கப்பட்டதுமன்றி நகர் வெளியிலிருக்கும் வீடுகளும், ராணுவங்களைச் சேர்ப்பதற்கும் பீரங்கிகள் ஏற்றப்படுவதற்கும் மற்றும் யுத்த தளவாடங்களைச் சேமித்து வைப்பதற்குமாக அழிக்கப்பட்டு எல்லாம் நிரவப்பட்டன. ஜனங்கள் ஊரைவிட்டு வெளிப்போவதில் வெகு கருத்தாயிருந்தனர். பெண்டிர் தமது குழந்தைகளுடன் ஆயிரக்கணக்காய் ரயில்வே ஸ்டேஷன்களில் உட்கார்ந்து வண்டியை எதிர்நோக்கினவர்களாயிருந்தனர். வீடுகளும் தெருக்களும் அலங்கரிக்கப்பட்டிருந்தனவேனும் ஜனஸந்தடியென்பதையே காணோம். எப்படி இருந்தாலும் ப்ரஞ்சுக்காரர் பொறுத்திருந்து

தங்கள் பக்கமே ஜயமென்பதை அறிந்து தங்கள் அரசாங்கத்தின்மீதும் ஸைன்யங்களின்மீதும் பாரத்தைப் போட்டிருக்கிறார்கள். ஜெர்மானியரை எதிர்த்துப் போர் புரிதலில் எவ்வளவு கஷ்டப்பட்டபோதிலும், எத்தனைபேரை போரில் இழக்கநேரிடினும், எதையும் லக்ஷ்யம் செய்யாமலும் தம் அரசாங்கத்திற்கு உதவி செய்ய தங்களால் எவ்வளவு கூடுமோ அவைகளையும் செய்யக் காத்திருக்கின்றனர். ஆகாசத்தில நிர்மலமாயிருக்கும் இரவில், கோடி ஸூர்யப்பிரகாசமுள்ள ஒளி வீசி எதிரிகளுடைய ஆகாயவிமானங்கள் அருகில் வந்திருக்கின்றனவோ எனத் தேடுகின்றன போலிருக்கின்றன. ஜெர்மன் படைகளைத் தடுக்கவேண்டி ப்ரான்ஸில் பெல்ஜியருக்கு உதவியாக இங்கிலாந்திலிருந்து பெருஞ்சேனை வந்துகொண்டிருந்ததென்றும் அவைகள் ஏற்கெனவே மான்ஸ் என்னுமிடத்தில் ப்ரஞ்ச் படைகளுடன்சேர்ந்து ஜெர்மானியருடன் கடும்போர் புரிந்து வெற்றியடைந்தனவென்றும் ஜெர்மானியப் பெருவெள்ளத்தை ஆங்காங்கே அணைகோலித் தடுத்து வந்தனவென்றும் முன்னமே கூறியுள்ளோம். நம் காருண்ய சக்ரவர்த்தியவர்கள் அனுப்பிய ஸைன்யங்களின் விமர்சைகளை நாம் சொல்லவேண்டியது அவசியமன்றோ?

காலஞ்சென்ற லார்ட் ராபர்ட்ஸ் அவர்கள் ஆலோசனையின்கீழ், எர்ல் கிச்சினர் அவர்கள் யுத்த மந்திரியாய் நியமிக்கப்பட்டு அவர்களின்கீழ் ஸைன்யங்கள் கூட்டப்பட்டன. வெகுகாலமாய் க்ரேட் ப்ரிடனுடைய ஸைன்யங்கள் குறைந்திருந்தன. தென்

# ஐரோப்பிய மஹா யுத்தம்

ஆப்ரிக்கா போவர் யுத்தம் முடிந்த பிறகும் லார்ட் ராபர்ட்ஸ் முதலிய பலருடைய வார்த்தைகளையும் கேட்டிருந்தபோதிலும் இங்கிலாந்தில் மிகுந்த ஸைன்யங்கள் சேகரிக்கப்படவில்லையாம். ஐரோப்பாவின் மற்ற நாடுகளில் ஆண்பிள்ளை ஒவ்வொருவனுக்கும் யுத்தப் பயிற்சி கட்டாயமாயிருக்க இங்கிலாந்தில் மாத்திரம் இஷ்டமுள்ளவர்கள் மாத்திரம் ஸைன்யத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டனராம். ஆனபோதிலும் ஜனங்களில் இஷ்டமுள்ளவர்கள் ஸேனையில் சேரலாம் என்றிருந்ததே இங்கிலாந்து ஸேனைகளின் பலத்திற்குக் காரணமாய் நின்றது. தமக்குத் தேசாபிமானம் முற்றி, பொருளும்கூட இருப்பவர்கள் போர்க்குச் செல்வதாயிருந்தால், ஏன் அந்தத் தேசம் வீரத்தன்மையுடன் விளங்காது? இப்பொழுதும் போருக்குப்போகப் பிரியப்பட்டவர்கள் எல்லாம் சேர்த்துக் கொள்ளப்பட்டதனால் வெகு ஸுலபமாக இங்கிலாந்தில் போர்வீரரின் தொகைகுறையாமல் இருந்துகொண்டு வருகிறது. யுத்தப் பயிற்சியும் வெகு சீக்கிரத்தில் வந்து விடுகிறது. ஜெர்மனியிலோ எல்லாரும் ஸைன்யத்தில் சேரவேண்டியதென்று கட்டாயப் படுத்தப்படுகின்றனர். வேறு வழியில்லையே என்று போருக்குச் செல்கின்றனர். அவர்கள் எப்படிப் போர் செய்வார்களென்று சொல்லாமலே விளங்கும். தவிரவும் ஜெர்மன் ஸைன்யங்கள் வரவர குறைந்து விட்டதனால் சிறுபையன்கள்—இன்னும் ஆண்பிள்ளைகள் என்றுகூட சொல்லத்தகாத பதினாறுவயது பாலர்களையும் போர்க்குவரும்படியாய் இழுத்து விட்டனர். இது நிற்க, இங்கிலாந்தில் ஸகல

*ஸைன்யங்களும் சேகரிக்கப்பட்டு அவைகள் போர்க் களத்திற்குப் போகத் தயாராய் நின்றன. அவைகள் எங்கு போகப்போகின்றன ? எப்பொழுது ? என்பது கூட ஒருவருக்கும் தெரியாது. எல்லாம் கடைசி வரையில் ரஹஸ்யமாய்த்தான் நடக்கவேண்டுமென்று இங்கிலீஷ் ஸேனைகளின் நடவடிக்கைகள் அவைகள் ப்ரான்ஸில் சேருகிறவரையில் ஒன்றும் விளம்பரப் படுத்தப்படவில்லை. ஸைன்யங்களுக்கு நம காருண்ய சக்ரவர்த்தி உருக்கமும், பெருமையும், உத்ஸாக மும் பொருந்தியுள்ள ஒரு ஸமாசாரம் அனுப்பினர். அதுபோலவே லார்ட் கிச்சனரிடமிருந்தும் போர் வீர ருக்கு வேண்டிய விஷயங்கள் மொத்தமாய்த் தெரிவிக் கப்பட்டன. அவை வருமாறு :—*

“நீங்கள் நம் ராஜ்யத்தின் பாதுகாப்பு, கண்ணியம் இவைகளின்பொருட்டு நாட்டைவிட்டுச் செல்லுகிறீர் கள். நாம் பாதுகாப்பதாக வாக்குக் கொடுத்துள்ள பெல்ஜிய நாடு எதிர்க்கப்பட்டிருக்கிறது ; பெல்ஜிய நாட் டை எதிர்த்துள்ள அதே பலாஷ்டிகமான விரோதியால் ப்ரான்ஸ் தேசமும் படைஎடுக்கப்படப் போகிறது. என் போர்வீரர்காள், உங்களிடத்தில் எனக்குப் பூர்ண நம் பிக்கை உண்டு. கடமையென்பது உங்கள் தாரக மந் திரமல்லவா ? உங்கள் கடமைகளை வெகு கண்ணியத் துடனும் பெருமையுடனும் நிறைவேற்றுவீர்கள் என்பது எனக்குத் தெரியும். உங்கள் ஒவ்வொரு நடவடிக்கை யையும் வெகு உத்ஸாஹத்துடன் கவனிப்பேன் ; தினந் தோறும் நீங்கள் வெற்றியடைவதை வெகு ஆவலுடனும்

திருப்தியுடனும் குறிப்பேன். உங்கள் க்ஷேமத்தை எப்பொழுதும் நான் மறக்காமலிருப்பேன்.

உங்களை ஆசீர்வதித்துக் காக்கும்பொருட்டும் நீங்கள் மறுபடியும் ஜயசாலிகளாய்த் திரும்பும்படியும் நான் கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

1914௵ ஆகஸ்ட்மீ 9௳. ஜ்யார்ஜ் R. I. ”

*“நம் பொது விரோதியை எதிர்க்கும்பொருட்டும் நம் துணைவராகிய ப்ரஞ்சுக்காரருக்கு உதவியாகவும் நம்மரசரின் போர்வீரனாக நீ நாட்டைவிட்டுப் போகும்படியாக ஆக்ஞாபிக்கப்பட்டிருக்கிறாய். நீ செய்ய வேண்டிய வேலையில் உன் வீரத்தன்மை, பலம், பொறுமை ஆகிய இவைகளைக் காட்டவேண்டியிருக்கிறது. உன் தனி நடவடிக்கைகளின்மீதுதான் ப்ரிடிஷ் ராஜ்யத்தின் பெருமை நின்றிருக்கிறது என்பதை நீ யறிவாய். நீ குண்டுகளின் மத்தியில் அகப்பட்டுக்கொள்ள நேரிட்டால், ஒழுங்கு, பூர்ணப்பொறுமை ஆகிய இவைகளுக்கு மேல்வரிச்சட்டமாய் இருக்க வேண்டியதும் தவிர இப்போரில் யாருக்கு உதவிசெய்யப்போகிறாயோ அவர்களுடன் நீ அளவளாவியும் இருக்கக்கடவாய்.*

*“நீ எக்காரியங்கள் செய்யப்போகிறாயோ அவைகள் நேசப்பான்மையான நாட்டில் நடக்கப்போகின்றன. நீ ப்ரான்ஸ், பெல்ஜியம் இவைகளில் ப்ரிடிஷ் போர்வீரன் ஒருவனது உண்மைக்குணத்துடன் நடந்துகொள்வதைவிட உன் தேசத்திற்குச் சிறந்த ஊழியம் வேறொன்றுமில்லை. எப்பொழுதும் தவறாமல் மரி*

யாதை, பாரிபுத்தி, காருண்யம் கொண்டவனுயிருப்பாய் ஸொத்துக்களை அழிப்பது, அவைகளுக்குத் தீங்கிழைப்பது, இவை போன்றவைகளை நீ செய்யாதிருக்க வேண்டும்; கொள்ளையடிப்பது அவமானச்செய்கையென்று கருதுவாயாக. உனக்கு அந்நாட்டார் நல்லுபசாரம் செய்து உன்மீது நம்பிக்கை வைப்பார்கள் என்பதை அறியவும். அப்படிப்பட்டவைகளுக்கு நீ அருகன் என்று உன் நடவடிக்கைகளால் காட்டுவாயாக. உன் தேகம் ஸவுக்கியமாயிருந்தால்மட்டும் உன் கடமைகளைச்செய்யலாம்; ஆகையால் எதிலும் மிதமாயிருக்க வேண்டுமென்பதைப் பார்த்துக் கவனிப்பாய். * * *

"உன் கடமைகளைத் தீரமுடன் செய்வாய். பகவானுக்குப் பயந்து நட. மன்னனை கண்ணியப்படுத்துவாய். கிச்சனர்."

இவ்விரு சமாசாரங்களும் வந்து சேர்ந்தபிறகு ஸைன்யங்கள் தங்களுக்காகக் காத்திருந்த கப்பலில் ஏறி ஸௌதாம்டனிலிருந்து ப்ரான்ஸ்தேசத் துறைமுகமாகிய போலோன் துறைமுகம் வந்து சேர்ந்தன. கப்பல்கள் வரும்போது அவைகளை எதிரிகளினின்று காப்பதற்காக வெகு ரஹஸ்யமாய்க் கொண்டுவரப்பட்டதுமன்றி டேஸ்ட்ராயர்கள் என்னும் ஒருவித யுத்த நாவாய்கள் அவைகளைப் புடைசூழ்ந்து வரவும் எதிரிகள் யாராவது வருகிறார்களோ என்று ஆகாயத்திலிருந்து ஏரோப்ளேன்களிலிருந்தும் பார்க்கப்பட்டு வந்தது. பொலோனில் இவர்கள் வரப்போகிறார்கள் என்று அநேகருக்குத் தெரியாது. இந்த நடவடிக்கைகள் எல்லாம் கிச்சனரது வழக்கமுறைப்படி பரம

ரஹஸ்யமாகவே நடத்தப்பட்டது. ஆனபோதிலும் பொலோன் நகரவாஸிகளுக்கு அங்கிருக்கும் ஆபீஸர் முதலியவர்களின் செயல்களால்மட்டும் தெரியும். அனேக உத்யோகஸ்தர்கள் போர்வீரர்க்குரிய உடையைத் தரித்தவர்களாய் வந்திருந்தனர். இவர்கள்தாம் ப்ரிட்டிஷ் படைகளுக்கு உதவிபுரிந்து அவர்களை வரவேற்று அழைத்துக்கொண்டு போவதற்காக வந்தவர்கள். நகரமும் இவர்களை நல்வரவேற்று உபசரிப்பதற்காகவே அலங்கரிக்கப்பட்டிருந்தது. இப்படி கோலாஹலத்துடனிருக்கும்போது ப்ரிடிஷ் துருப்புகள் வந்து சேர்ந்தன. ஆங்காங்கே கூடாரங்களில் தங்கியிருந்துவிட்டு பிறகு நகர்வழியாய், காலாட்படைகள், குதிரைவீரர்கள், பெரும்பீரங்கி ராணுவங்கள், சிறிய பீரங்கிப்படைகள், ஆகாயகமனப் படைகள் மற்றும் யுத்தத்திற்கு வேண்டிய தளவாடங்கள் இவைகள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்ருய் பவனிபோவதுபோல் மிக்க ஆனந்தகரமான காட்சியைப் பிரான்ஸியருக்குத் தந்து சென்றன. ஒருவராவது தளர்ச்சியடைந்தவராகக் காணவில்லை. மிக்க ஸந்தோஷத்துடன் ரயிலில் ஏறிப் போர்முனைக்குச்சென்ருர்கள். இவைகளின் பெருமையையும் மகிழ்ச்சியையும் இவ்வளவென்று சொல்ல முடியாது. அவைகளைப் பார்த்தவர்களே சொல்ல முடியும். அல்லது அவர்களின் பலத்தையும் தீரத்தையும் கண்ட ஜெர்மானியர் சொன்னதுபோல் எதிரிகளும் கூட பார்த்துக் கூறவேண்டும். இவர்கள் மான்ஸ், மார்னே, எயின் முதலிய இடங்களிலும், மற்று மேற்கிலும் வடமேற்கிலும் நடந்த போர்களிலும், காட்டிய

நிரத்தைப்பற்றி விவரிக்க நம்மால் ஸாத்தியமில்லை. அவ்வப்பொழுது ராணுவ நடவடிக்கைகள் ஸர் ஜான் ப்ரெஞ்சிடமிருந்து கிச்சனருக்கு அனுப்பப்பட்டவை களை ஸாவதானமாய்ப்படித்தவர்களுக்கே தெரியவரும். ப்ரிடிஷ் ஸைன்யங்கள் ப்ரஞ்ச் பெல்ஜியன் ஸைன்யங்க ளுக்கு அவஸர அவஸரமாய் உதவிபுரிந்ததுந்தவிர, தங்களை எதிர்க்கும் ஜெர்மானியரைத் தங்கள் பீரங்கிக ளாலும் துப்பாக்கிகளாலும் தவிடுபொடியாக்கினார்கள். மறைவிடங்களிலிருந்து மெதுவாய் ஊர்ந்துவந்தோ அல்லது எதிரிலிருக்கும்மரமடர்ந்த வனத்திலிருந்தோ தம் ஸமீபத்தில் வருகிறவரையிலும் ஜெர்மானியர் ஒன் றும் செய்யாமல் இருப்பார்களாம். அவர்களும் வருகிற வரையில் இங்கிலீஷ் படைகள் தாங்கள் தோண்டியுள்ள அகழ்களில் புகுந்துகொண்டு பிறகு திடீரென்று எதிரி களின்மீது தங்கள் படைகளைச் செலுத்துவராம். ஜெர் மானியர் ஆயிரக்கணக்காய் விழுந்துவிட்டனர். அவர் களால் ஒன்றும் செய்யமுடிகிறதில்லை. எங்கும்—மை தானத்திலும், மலைச்சாரியிலும், நாட்டுப்புறங்களிலும் அவர்களில் இறந்து போனவர்கள் விழுந்துகிடக்கின்ற னர். பீரங்கி முழக்கமும் துப்பாக்கிவேட்டுகளும் இப் பொழுதுகாணோம். இரவாய்விட்டது. எதிரிகள் படை களிலிருந்து பேரொளி தென்படுகிறது. திடீரென்று பீரங்கிப்படைகள் முழங்குகின்றன. மறுபடியும், பொ ழுது விடிந்தவுடன் ஜெர்மானிய ஸைன்யங்கள் அதி கம் வந்துநேரப் போர் தொடங்கலாயிற்று. வெகு கடு மையாயிருக்கின்றது. ஜெர்மானியர் இங்கிலீஷ் படை களைச் சிதற அடிக்க எண்ணுகிறார்கள். முடியவில்லை.

இவர்கள் ஜெர்மானியரை ஏளனம் செய்கிறார்கள். அனேக பீரங்கிவரிசைகள் இப்பொழுது ஒன்று சேர்ந்து மறுபடியும் முழக்கஞ்செய்ய ஆரம்பித்து ப்ரிடிஷ் பீரங்கிகளை ஒவ்வொன்றாய் அடங்கிவிடச் செய்கின்றன. ஒரே ஒரு பீரங்கிப் படைவீரன் மட்டும் நிற்கிறான். அவனும் கடைசிவரையில் அங்கே நின்று ஜெர்மானியரைத் தொலைக்கப் பார்த்திருப்பான். அங்கிருப்பது ஆபத்தென்று அவன் பின்னுக்குக் கூப்பிடப்பட்டான். இது இப்படியிருக்க, வேறோரிடத்தில் ஜெர்மன்படைகள் அணிவகுத்து நிற்கவும் ப்ரிடிஷ் குதிரைப்படைவீரர்கள் மிக்க தைர்யமாயும் வெகு விரைவாயும் தம் ஈட்டி கத்திகளை வீசிக்கொண்டு எதிரியின் படைகளைப் பிரித்துவிட்டு அவர்களை ஊடுருவச் சென்றார்கள். அவர்கள் குதிரைகளை நிறுத்திப் பார்க்கும்போது தாங்கள் எதிரிகளின் கடைசியணியின் பின்னாலிருப்பதைக்கண்டு மறுபடியும் மஹா வீரத்துடனும் அவர்கள் மத்தியிலேயே நுழைந்து சென்றார்கள். இவர்கள் இந்த வீச்சில் வீழ்த்திய ஜெர்மானியர் இவ்வளவு என்று சொல்லமுடியாது. மற்றோரிடத்தில் ஜெர்மானியர் ஒரு சிறுநதியைக் கடக்க முயல்கின்றார்கள். ஒரு பாலமும் கட்டி முடித்தாய்விட்டது. அவர்கள் காலெடுத்து வைப்பதற்குள் ப்ரிடிஷ் பீரங்கிகளால் அப்பாலம் இடிந்துவிழுகின்றது. மற்றொன்று கட்டுகின்றார்கள். அதுவும் அதேகதியை யடைந்தது. இதேமாதிரி அவர்கள் கட்டிய ஏழெட்டு பாலங்களும் நாசமடைந்தன. எதிரிகளில் இறந்து போனவர்களின் ஸங்கியை எடுக்கவும்முடியாது. ஆன

போதிலும் அவர்கள் தொகை அதிகரிக்கத் தொடங்கு கிறது. அவர்கள் பீரங்கிகள் முதலிய யுத்ததளவாடங் களும் அதிகப்படுத்தப்படுகின்றன. இத்யாதி காரணங் களை முன்னிட்டேயன்றி அவர்கள் முன்னேயிருப் பவர்களையும் கடந்து வந்திருக்கமுடியாது. இப்படி வருபவர்கள் எவ்வளவோ அக்ரமமான செய்கைகளைச் செய்துகொண்டுவந்திருக்கின்றனர். ஓரிடத்திலுள்ள சுரங்கத்தில் சிலர் வேலைசெய்துகொண்டிருக்கிறார்கள் என்று கேட்டபோதிலும் சிறிதும் பார்க்காது அச் சுரங்கங்களின் வாயிலை மூடிவிட்டனர். அப்படியே அவர்கள் உயிருடன் புதைக்கப்பட்டனர் என்றுசொல் லப்படுகின்றது. சிலர் வீடுகளில் புகுந்துகொண்டவர் கள் குத்தப்பட்டுக் கொல்லப்பட்டார்கள் என்றும் உஹ் லான்கள் என்னும் ஜெர்மானிய குதிரை வீரர் ஆயிரக் கணக்கான கிராமவாஸிகளைப் பயமுறுத்தித் துரத்தி விட்டு அவர்கள் வீடுகளை தீக்கிரையாக்கிவிட்டனரென் றும் சொல்லப்படுகின்றது. இவர்கள் ப்ரெஞ்ச் ப்ரஸி டென்டினுடைய ஒரு ஸ்தலத்தைப் பிடித்து நாசமாக்கி தீயிட்டனராம். எவ்வளவு தடுத்தபோதிலும் வந்து கொண்டேயிருந்தனர். துணைப்படைகள் வெகு தீரத் துடன் போர்புரிந்தன. முற்காலங்களில் மத்திய ஆசி யாவிலிருந்து ஹூணர்கள் என்பவர்கள் கும்பல் கும் பலாய் ஐரோப்பா நாட்டிற்குச்சென்று நாடுநகரங்களை நாசப்படுத்தி தாம் போகுமிடங்களிலெல்லாம் அழுகை யும் புகையும் தீயுமிட்டுச் சென்றனர் என்று கேட் டிருக்கிறோம். அவர்களைக்காட்டிலும் கொடியவர்களா யும் அநாகரிகர்களாயும் இருந்தனர் என்று ஜெர்மானி

யர் செய்கைகள் வெளிப்படையாய்க் காட்டுகின்றன. ரீம்ஸ் என்பது ப்ரான்ஸ் தேசத்தில், ஐரோப்பாவிலேயே ப்ரஸித்திபெற்ற நகரம். ஆதிகால முதற்கொண்டு அது விசேஷத்தைப்பெற்று வந்துள்ளது. இங்கிலாந்துக்கு ஸெண்ட் பால்ஸ் கத்தீட்ரல், வெஸ்ட் மின்ஸ்டர் ஆபே இவைகள் எப்படியோ அதேபோல் ரீம்ஸ் கத்தீட்ரெலும் கருதப்பட்டுவந்தது. அந்தத் தேவாலயம் வெகு ரமணீயமாய் பலவித சித்திரங்கள், அழகிய கட்டடங்கள் முதலியன வெகு அந்தத்துடனமைந்தனவையாயிருந்தது. தேசாபிமானமும் மதாபிமானமும் உருவெடுத்து வந்ததுபோல் உள்ளது. இங்கேயே ப்ரான்ஸ்தேசத்து அரசர்கள் முடிசூட்டப்பட்டார்கள். இவ்விடத்தில்தான் ஏழாவது சார்லேஸ் ஜோன் ஆப் ஆர்க் என்னும் ப்ரஞ்ச் நாட்டு நாரீமணியால் முடிசூட்டப்பட்டது. உலகமுழுவதிலும் மதாபிமானிகள் தேசாபிமானிகள் யாவராயிருந்த போதினும் பார்த்து வியக்கத்தக்க தேவாலயம் அது. அப்படிப்பட்ட தேவாலயத்தின் மீது—அவர்கள் வேறு காரணங்களை எடுத்தோதின போதிலும், தம் பீரங்கிகளிலிருந்து குண்டுகளைப் பிரயோகிக்கவும் அக்கட்டிடம் தீப்பற்றி இடிந்து அழிந்து விட்டது. இவர்கள் லோவேய்ன், ரீம்ஸ் நகரங்களில் செய்த செய்கைகள் எக்காலத்தும் அழியாமல் ஜெர்மானியரது அறிவையும் கல்விப்பயிற்சியையும் அவர்கள் நாகரிகத்தையும் எடுத்துக்காட்டும்.

இம்மாதிரி திரண்ட சேனையுடன் பாரிஸ் நகரை நெருங்கினார்கள். வெகு ஸமீபத்திலும் வந்துவிட்டார்கள். பாரிஸ்நகரத்தில் ஒரு பெரிய கட்டிடத்தின்மீது

# ஜெர்மன் பின்போக்கு

ஸெப்ளின் ஆகாயக்கப்பலினின்று ஜெர்மன் ஒருவன் வெடிகுண்டுகளை எறியவும் அது மனிதர்களுக்கு யாதொரு சேதத்தையும் அதிகமாய் விளைக்கவில்லை யெனினும் அவர்கள் தேசாதேச விதிகளுக்கு விரோதமாய் நடந்துவிட்டனர். யுத்தத்தில் சேராத தேசத்து ப்ரதிநிதியின் வீட்டில்விழ, அத்தேசத்தார் இம்மாதிரி நடப்பது தகாது என்று எச்சரிக்கவும் எச்சரித்தனர். பாரிஸ்பட்டணம் எதிரிகளைத் தாக்கவும் அவர்களினின்று காப்பாற்றிக்கொள்ளவும் தயாராய் இருந்தது. ஆனால் ஒருவரும் அயின், ஸாய்ஸ்ஸன்ஸ் இவைகளில் ஜயமடையவில்லை. இங்கிலீஷ் ப்ரஞ்ச் ஸைன்யங்கள் எதிரிகளைத் தடுத்தன. ஆகையால் பாரிஸ்மீது படை எடுப்பதை நிறுத்திவிட்டனர். இதற்குள் பெல்ஜியத்தில் என்ன நடந்ததெனப் பார்க்கலாம். ஜெர்மன் ஸைன்யங்கள் ஆண்ட்வெர்ப் நகரத்தைப்பிடித்தவுடன் கேண்ட், ப்ரூஜஸ் முதலிய நகரங்களை நோக்கிச் சென்று அவைகளைப்பிடித்து மற்ற நகரங்களுக்குச் செய்ததுபோல் செய்து ஆஸ்டேண்ட நகரத்தைத் தாக்கினர். அதைக் காப்பதற்கும் அனேக ப்ரிடிஷ்கப்பற் போர்வீரர்கள் வந்தனர். இங்கு கடலிலிருந்து ஜெர்மன் யுத்தாயுதங்களுக்கு நிகரானவை என்று சொல்லும்படியான போர்க்கப்பல் பீரங்கிகள் கொண்டு வரப்பட்டு ஜெர்மானிய ஸைன்யங்களைத் தூள் தூளாக்கின. பாரிஸ் போவதற்கு வழி ஏற்படாமற்போய்விடவே, இனி கலே, டன்கர்க், போலோன் முதலிய துறைமுகங்களுக்குப்போய் கடற்கரையைப் பிடிக்கவேண்டுமென்று எண்ணங்கொண்டவராய் அப்பக்கம் திரும்பி

னர். இதற்குமுன்னமே இவ்வெண்ணம் இருந்தது என்பதற்குப் பல அத்தாட்சிகள் இருக்கின்றனவாம். ஆகையினால்தான் அயின் ஸாய்ஸ்ஸன்ஸ் முதலிய இடங்களில் போர்புரியும் தங்கள் படைகளில் சிலவற்றை அவ்விடங்களுக்கு வரவழைக்கலாயிற்று. ஆகையால் துணைப்படைகளுக்கு ஜெர்மானியரை விரட்டியோட்டுவதற்குக் கொஞ்சம் இடம் ஏற்படவும் வரவர ஜெர்மானியரும் பின்னிடைய ஆரம்பித்தனர். கடற்கரையோரமாக பெல்ஜியநாட்டிலும் ப்ரஞ்ச் எல்லைப்பிராந்தியத்திலும் கோரமான யுத்தங்கள் நடந்துவந்தன; நடந்துகொண்டிருக்கின்றன. இதுவரையில் நாம் கேட்டறியாத சிறு இடங்கள் தற்கால யுத்தத்தை முன்னிட்டு ப்ரஸித்தி யடைந்துவிட்டன. கடற்கரையுத்தத்தில் ஜெர்மானியருக்குத்தான் வெகு நஷ்டமும் உயிர்ச்சேதமும். ஒரு பக்கத்தில் ப்ரிடிஷ் கப்பற்படைகள்கொண்டு வந்து நிறுத்தப்பட்டு இடைவிடா அக்னி மழைபொழியவும் மற்றொருபக்கத்தில் ப்ரஞ்ச் ப்ரிடிஷ் ஸைன்யங்கள் வெகு மும்முரமாய் எதிர்த்துக்கொண்டிருந்தன. இது மாத்திரமா? பெல்ஜிய அரசர் வெகு வீராவேசத்துடனும் ஆத்திரத்துடனும் ஓர்படைத்தலைவனாய் நின்று எதிர்க்கின்றார். நம் நாட்டிலிருந்து சென்ற இந்திய ராணுவவீரர்கள் தங்கள் வீரத்தைக் காட்டுகின்றனர். இப்படித் தான் டிக்ஸ்மூட், ஈப்ரேஸ், லாபாஸ்ஸி முதலிய இடங்களில் போர் நடந்துவருகிறதாம். இதனிடையில்தான் நம் துணைச்சைன்யங்களுக்கு உத்ஸாகத்தையூட்டவும் மற்றப்படி காயம்பட்டவர்களுக்குத் தேறுதல் சொல்லவும் தங்கள் தைர்யத்தைக் காட்டிய

வர்களுக்குத் தகுந்தவிதம் ஸன்மானம் செய்யவும் ப்ரஞ்ச் ப்ரஸிடெண்ட், காலஞ்சென்ற லார்ட் ராபர்ட்ஸ், நம் காருண்ய சக்ரவர்த்தியார் ஆகிய இவர்கள் சென்று நேருக்கு நேரே பார்த்துவிட்டு வந்தனர்.

ஜெர்மன் ஸைன்யங்களால் ஆக்ரமிக்கப்பட்ட பெல்ஜியத்தில் இருந்து வஸிப்பதற்கு ஜனங்கள் கிடையாது. எல்லாம் பாழடைந்து கிடக்கின்றது. யுத்தத்திற்கென்று தோண்டப்பட்ட அகழ்களும் கூரையில்லா வீடுகளும் கட்டிடங்களும் உடைந்த பாலங்களுமாய் எங்கு பார்த்தாலும் பயங்கரமாயும் பேய் வாழும் இடம் போலவும் இருக்கின்றன. பெல்ஜிய நாட்டு ப்ரஜைகள், ஹாலண்டிலும் இங்கிலாந்திலும் அடைக்கலமடையலாயிற்று. ஜெர்மானியர் அவர்களை மறுபடியும் தங்கள் நாடுநகரங்களுக்கு வந்து சேரலாமென்று எவ்வளவோ சொல்லியும் அவர்கள் வரவில்லை. எப்படி வருவார்கள் ? தங்கள் எதிரிகளாயிருந்து தங்களுக்குப் பலவிதமான தீங்கிழைத்த ஜெர்மானியரின் கீழிருக்கும்படியாய் விரும்புவார்களா ? ஆனபோதிலும் ஜெர்மானியர் அங்குதானிருந்து தங்கள் நிலைமையைப் பலப்படுத்திக்கொள்கிறார்கள் என்று தெரியவருகிறது. தாங்கள் அழித்துவிட்ட கோட்டைகளைப் புதுப்பித்து அனேக புதிய பீரங்கிகளைத் தருவித்து தாங்கள் நிலைத்து இன்னும் எதிர்ப்பதற்காகக் காத்திருக்கிறார்கள் எனவும் தெரியவருகிறது. ஆனால் அவர்களால் இப்பொழுது ஒன்றும் செய்யமுடியவில்லை. இருந்தவிடத்திலேயேயிருந்து உறுமுகிறார்களேயொழிய முன்னே அடி எடுத்துவைக்கமுடியாமல் திணறு

கிறார்கள். அப்படி ஏதாவது போர் நடந்தாலும் அதில் ஜயாபஜயங்கள் ஒன்றும் சொல்லமுடியவில்லை. இப் பொழுது டிக்ஸ்மூட் ரேஸலர்ஸ் ப்ரதேசத்தில்தான் போர் நடந்து வருகிறது.

இது இப்படியிருக்க, தெற்கே லக்ஸம்பர்க், ஆல் ஸேஸ் - லோரேய்ன் பாகங்களிலுள்ள ப்ரஞ்ச் ஸைன் யங்கள் ஜயத்தையே அடைந்துவருகின்றன. ஜெர்மனி யிலிருந்து மேற்கேவருவோமானால் இடையே உயர்ந்த மலைநாடாயும் காடடர்ந்ததாயும் இருக்கின்றது. இதில் பாயும் நதி மோஸேல் என்பதுதான் போக்குவரவுக்கு வஸதி யுண்டுபண்ணக்கூடியது. ப்ரஞ்ச் எல்லையில் முதல் அணியில் பலமாக்க் கட்டப்பட்டிருக்கும் கோட் டைகள் வெர்டேன், நான்ஸி, ல்யூனவில், பெல்வார்ட் முதலானவைகளும் இரண்டாம் வரிசையில் ஷாலன்ஸ், பார் - லி - டக், டேல், எபைனல் முதலானவைகள்தாம். இவைகள் மிகப் பலமுள்ளவையாயிருப்பதால் இப்பக் கத்திலேயே நாடாமல் பெல்ஜியமார்க்கமாய்த் திரும்பி யுள்ளார்களென்று முன்னமேயே கூறியுள்ளது ஞாபக மிருக்கலாம். ப்ரஞ்ச் ஸைன்யங்கள் இவைகளினின்று புறப்பட்டு எதிரிகளைத் தாக்குவதற்குத் தயாராய் இருந்தன. இந்த பாகத்தில் உள்ள ஜெர்மன் ஸைன்யங் களில் ஒன்றுக்கு ஜெர்மன் இளவரசரே தளகர்த்தரா யிருந்தார். எவ்வளவோ பிரயத்தனப்பட்டும் ப்ரஞ்ச் நாட்டில் வெகுதூரம் வரமுடியாமற் போய்விடவும் ப்ரஞ்ச் ஸைன்யங்களே ஜெர்மன்நாட்டில் ப்ரவேசித்து விட்டன. தவிர சில ஜெர்மன் பட்டணங்களும் ப்ரஞ்ச் தேசத்தார் கையில் பிடிபட்டன. மெட்ஸ், ஸ்ட்ராஸ்

## ப்ரிடிஷ்—ப்ரஞ்ச் அணை

பார்க்கிலிருந்து சேனைகள் வராமல் தடுக்கப்பட்டன, தவிரவும் ஜெர்மன் ஹெட் க்வார்டர்ஸ் என்று சொல்லப்படும் ராணுவ தலைநகரங்களுக்கும் துணைப்படைகள் சேதம்செய்துவிட்டன. எப்படியெனில், எதிரிகளுடன் தாங்களும் போட்டிபோடுவதுபோல் தங்கள் ஆகாயக்கப்பல்கள் எதிரிகளின் நகரங்களுக்கும், அவர்கள் ஆகாயப்படைக் கொட்டகைக ளிருக்குமிடத்திற்கும் சென்று வெடிகுண்டுகளை எறிந்து அக்கொட்டகைகளையும் அவற்றிலிருக்கும் ஆகாயக்கப்பல்களையும் நாசம் செய்தனர். ரயின் நதிக்கரையில் உள்ள டஸல்டார்வ் என்னும் நகரக் கொட்டகை இக்கதியைத்தான் அடைந்தது. இம்மாதிரி ஜெர்மானியர் ப்ரான்ஸில் படையெடுத்தது சிறிது தளர்ச்சியடைந்து அவர்கள் பின்னிடையவும் ப்ரிடிஷ் - ப்ரஞ்ச் படைகள் அவர்களை விரட்டி யோட்டிவிட்டு இனி அப்பக்கம் திரும்பவொட்டாமல் செய்துவிட்டன.



# பத்தாம் அதிகாரம்

## கீழமர்க்களம்

ரஷியா நாட்டில் படைகளை ஒன்று சேர்க்கிறார்கள்; அது தம்மீது படையெடுத்து தம்மை எதிர்ப்பதற்கென்றே என நினைத்து போருக்கு ஆரம்பித்தார்கள் ஜெர்மானியர்கள் என்பது நமக்கு முன்னமேயே தெரியும். இனி போர் தொடங்கியபிறகு நடந்தவைகளைப்பற்றிச் சிறிது கவனிக்கவேண்டும். ரஷியா தன் சைன்யங்களைச் சேர்ப்பதற்குள் ப்ரான்ஸிற்குள் சென்று, ப்ரஞ்ச் நாட்டாரை வென்று விடலாமென்றும் அப்படிப் போவதற்குப் பெல்ஜிய நாட்டார் ஸுலபத்தில் வழிவிட்டுவிடுவார்கள் என்றும் நினைத்து ஜெர்மானியர் தங்கள் சைன்யத்தின் பெரும்பாகத்தை மேற்கெல்லைக்கு அனுப்பியிருந்தார்கள். ஜெர்மானியர் ஏன் அப்படி எண்ணியிருக்கவேண்டும்? அலக்ஷ்யம் செய்யக்கூடிய அத்தகைய நாட்டினரா ரஷ்யர்கள்? ஆம். ரஷியா என்றால் எவருக்கும் அலக்ஷ்யம்தான். ஐரோப்பாவில் உள்ள தேசங்களில் மிகப் பெரியதாயிருந்த போதிலும், இதில் ராஜ்யத்திற்கு வேண்டிய பொருட் செல்வம் குவிந்து கிடந்திருந்தபோதிலும், அவைகளை சீரடையச் செய்வதில் அந்நாட்டார் ஆவல் சிறிதும் கொள்ளாமலிருந்ததினாலேயே மிகவும் தாழ்மையடைந்திருந்தனர். ரஷிய - ஜப்பானிய யுத்தத்திலும் இவர்கள் தோல்வியடைந்தவர்களாதலின் இவர்கள் பலக்குறைவையே எல்லாரும் மனத்தில் கொண்டிருந்தனர். அந்தத் தோல்வியே ரஷ்யாவின் வெற்றிக்குக் காரணமா

யிருக்குமென்பதை ஒருவரேனும் சிறிதாவது கருத வில்லை. தாங்கள் ஒரு ஆசியாகண்டத்து நாட்டினரால் தோல்வியடைந்தோமே என்று மனம் நொந்தவர்க ளாய் இனியாவது விருத்தி யடையவேண்டும், பழ மையான வழிகளைவிட்டு நூதன மார்க்கங்களைப் பின் பற்றவேண்டும் என ரஷியர்கள் கொண்ட எண்ணங் கள் ஒருவருக்கேனும் தெரியாதுபோனும்! அவர்கள் நாட்டில் புதிய நாகரிகம் தினக்கிரமமாய் விருத்தி யடைந்துகொண்டு அரசியல், படிப்பு, கைத்தொழில், வியாபார வஸதி முதலியவைகளில் சில காலங்களாய் எப்படி விருத்தியடைந்திருக்கிறார்கள் என்பது அவர் கள் நடவடிக்கைகளால் தெரியும். ரஷியர்கள் எப் பொழுதும் தூங்கிவிழுகிறவர்கள் என்று கருதினர் களையொழிய அவர்களது உக்ரமும் போர்த்திறமை யும் இது வரையினும் ஒருவருக்கும் புலப்படவில்லை. அவர்கள் ஸாமர்த்தியத்தையும் போர் வல்லமையையும் இந்த யுத்தம் முடிந்தபின்பேதான் எல்லாரும் அறிவார் கள். ஸாதாரணமாய் ரஷியாவிற்கு உவமையாய்க் கரடி யைச் சொல்வதுண்டு. கரடியின் பிடி எப்படிப்பட்டது என்பதை அறிந்தவரன்றோ, அதன் பெருமையை யறியவேண்டும். கரடி வெகுகாலம் தூங்கிக்கிடக்கும் என்பது உண்மையே. விழித்து அதன் உக்ரம் கிளம் பினலோ எதிரியின் பாடு மஹாகஷ்டம்தான். ரஷிய ராஜதானி பண்டைக்காலத்தில் மத்திய ரஷ்யாவி லுள்ள மாஸ்கோ என்னும் நகரம். அதைப் பிடிக்கச் சென்ற நெபோலியன் பட்டபாடு சரித்திரம் படித்த வர்களுக்கே தெரியும். மாரிகாலம். தம் பெரிய

ஸைன்யத்துடன் கஷ்டப்பட்டுச் சென்றார். அவர் நக ரைப் பிடிப்பதற்குமுன் ஊரில் நெருப்புவைத்து அவ ரைக் கிட்ட அனுகவொட்டாமல் அந்நகரவாஸிகளே செய்தார்கள். அவரால் திரும்பிவர முடியாமற்போயி ற்று. மாரிகாலமானதால் எங்கும் பனிக்கட்டிகள் விழுந்து அவர் ஸைன்யமே நாசமாய்ப் போயிற்று. அதுமுதல் அவருக்குக் கஷ்டகாலம் ஆரம்பித்தது. ஆனபோதிலும் ரஷியருக்கு எந்தப்பனியும் பனிக்கட் டியும் லக்ஷ்யமில்லை. அவர்கள் பனிக்கட்டி ப்ரதேசத்தி லேயே வஸித்துவருகிறார்களாகையால் ஏன் அதை ஒரு பொருட்டாக மதிக்கிறார்கள்? தவிரவும் ரஷியர்களுக்கு இன்னும் பலவித அனுகூலங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ரஷியாவின் தென்கிழக்குப் பாகத்திலுள்ள ஸமவெளி களில் யுத்தத்திற்கென்றேதோன்றியவர்கள்போலுள்ள ஒரு ஜாதியார் வஸிக்கிறார்கள். அவர்களுக்கு ரஷியன் கோஸாக்ஸ் (Russian Cossacks) என்று பெயர். அப்பிரதேசத்தில் குதிரைகள் அதிகமானதால் அவர் கள் எல்லாரும் அஞ்சாநெஞ்சம் படைத்த குதிரை வீரர்கள். உலகத்திலுள்ள குதிரைப்பட்டாளங்கள் எல்லாம் கோஸாக் குதிரைப்படை எதிர்த்து வருகிற தென்றால் பயப்படவேண்டியதுதான். எதிரில் ஒன் றும் நிற்காது, குதிரைகள் அவர்களுக்கு எவ்வளவு கீழ்ப்படிந்து வெகு சாதுர்யமாய் நடக்கின்றன என்பது வெகு ஆச்சர்யமாயிருக்கின்றது. பாலங்கள் இல்லா ஆறுகளைக்கடக்க ஜெர்மானியர் கஷ்டப்பட்டு பாலங் கட்ட முயற்சிசெய்கிறார்கள். ஆனால் ரஷிய குதிரைப் படைகள் ஒன்றையும் லக்ஷ்யம்செய்யாமல் ஆற்றை

நீந்திச் செல்கின்றன மற்றொன்று. பெரிய யுத்தகளம் ஒன்றில் ஜெர்மன் குதிரைப்படைகள் வேகமாய்வந்து கொண்டிருக்க இந்த காஸக் வீரர்கள் வெகு ஸாமர்த்ய மாய்த் தங்கள் குதிரைகளைப் படுக்கச்செய்து அவை களின்பின்னால் மறைந்து தங்களை எதிர்த்துவரும் படைகளின்மீது தம்குண்டுகளைச் செலுத்தி ஒவ்வொரு வராய் வீழ்த்தித்தள்ளினராம். இப்படிப்பட்ட ஸைன் யங்கள் ரஷியாவில் இருக்கின்றன. அவர்கள் தங்கள் யுத்தாயுதங்களில் மிக்க பயிற்சியடையாவிடினும் தங் கள் வீரத்தையும் சௌர்யத்தையும் யுத்தகளத்தில் காட்டிவருகின்றனராம்.

இது இப்படியிருக்க ஜெர்மன் ரஷிய எல்லைகளை வரையறுக்க இயற்கையமைப்பு ஒன்றுமில்லையாதலால் ரஷியர்கள் ஜெர்மனியினுள்ளே பிரவேசிக்கவும், ஜெர் மன் ஸைன்யங்கள் ரஷியாவினுள்ளே பிரவேசிக்கவும் ஸுலபமாயிருக்கின்றது. இவ்விரண்டு நாடுகளுக்கும் எல்லையாகவும் அவைகளினூடும் வார்டா, விஸ்டுலா, நீமேன் முதலிய நதிகள் பாய்கின்றன. இவைகளின் மேல்பாகங்கள் ரஷியாவிலும் மத்திய அல்லது கடைப் பகுதிகள் ஜெர்மனியிலும் உள்ளன. இந்நதிகளும் இந்நதிக்கரையிலுள்ள பட்டணங்களும் யுத்தகாலங் களில் முக்யமானவையல்லவா? இருப்புப்பாதைகளும் மற்று மிகவும் முக்யமான பட்டணங்களும் இவைக ளின் ஸமீபத்தில் இருக்கின்றனவாதலால் ஸைன்யங் களை நடத்திச்செல்வதற்கும் அவைகள் தங்குவதற்கும் அல்லது பற்றிப்பிடிப்பதற்கும் அனுகூலமாயிருக்கின் றன. தேசபடத்தைச் சற்று கவனித்தால் ஜெர்மன்

ஐரோப்பிய மஹா யுத்தம்

ராஜதானியாகிய பெர்லின் நகரிலிருந்து கிழக்கே செல்லும்பாதை நேர்வடகிழக்காய் வார்டா நதியின்கரையே சென்று கடற்கரைக்கருகில் விஸ்டுலா நதியைக் கடந்து கடற்கரை வழியாக கானிக்ஸ்பேர்க் என்னும் துறைமுகம் (இது ப்ரஷியாவின் பழைய ராஜதானி) சென்று நேர்கிழக்காய்த் திரும்பி ரஷிய எல்லைக்கு அருகிலுள்ள கும்பின்னேன் என்னும் நகரத்தைக் கடந்து நீமென் நதிக்கரையிலுள்ள கோவ்னோ என்னும் ரஷிய நகரத்தையடைகிறது. மற்றொன்று சற்று நேர் கிழக்காகவே திரும்பி மேற்சொன்ன வார்டா விஸ்டுலா நதிகளைக்கடப்பதனுடனும் மிக்க ப்ரதான நகரங்களாகிய ப்ரான்க்போர்ட், போஸேன் முதலிய நகரங்களின் வழியாய்ச்சென்று சற்று வடகிழக்காய்த் திரும்பி தார்ன் என்னும் பட்டணத்தின் வழியாய் ரஷிய எல்லைக்குள் பிரவேசிக்கிறது. இம்மாதிரி பெர்லினிலிருந்துவரும் பாதைகளும் ரஷிய ராஜதானியான ஸெண்ட் பீடர்ஸ்பேர்க் (இது இப்பொழுது பீட்ரோக்ராட் எனப் பெயரிடப்பட்டிருக்கிறது) கிலிருந்து வரும் பாதைகளும் உவார்ஸா என்னும் பட்டணத்தில் கூடுகின்றன. மற்றும் முக்ய பட்டணங்கள் உவார்ஸாவுக்குத் தென்மேற்கிலுள்ள லாட்ஸ், காலின் என்னும் பட்டணங்களும் ஆஸ்ட்ரிய எல்லைக்கருகிலுள்ள லூப்ளின் என்பதும்தான். மற்றும் யுத்த சம்பந்தம் பொருந்தக் கூடியவையாயுள்ள நகரங்கள் ஆஸ்ட்ரியாவிலுள்ள க்ராகௌ, ப்ரேன்மிஸில், லேம்பர்க் இவைகளும் ஜெர்மனியிலுள்ள ப்ரேஸ்லா என்பதும். இந்தப் பட்டணங்களெல்லாம் சுமார் நூற்றிருபது வருஷங்களுக்கு முன்

னே மிகப் பிரஸித்தியடைந்திருந்த போலேண்டு என்னும் ராஜ்யத்தைச் சேர்ந்தவை. இந்தப் போலெண்டு ராஜ்யம் அக்காலத்தில் வெகு கியாதியடைந்து உச்சஸ்தானத்திலிருந்து பிறகு கஷ்டகாலம் ஏற்பட்டு விடவும் மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டு ஒரு பாகத்தை ப்ரஷியாவும், மற்றொன்றை ரஷியாவும் இன்னொருபாகத்தை ஆஸ்ட்ரியாவுமாகப் பங்கிட்டுக்கொண்டன. இப்படிப்பிரிந்து வெகுகாலம் அனேக கஷ்டங்களை அனுபவித்துவந்தபோதிலும் போல் ஜாதியார் மட்டும் தங்களுக்கு அன்னியரிழைத்த தீங்கை மறக்கவில்லை. இந்தப் பங்கு ஏற்படும் காலத்தில் இம்மூன்று நாட்டாரும் பரஸ்பர ஸ்நேகராயிருந்தார்கள். மற்ற ஐரோப்பிய நாடுகள் இவர்கள் செய்தது அக்கிரமமென்று சுட்டிக்காட்டியபொழுது அதற்கு ஸரியான உத்தரம் கொடுக்கவில்லை. இந்த யுத்தம் ஏற்பட்டதும் அந்நாட்டாருக்கு ஒருவிமோசனம் ஏற்பட்டிருக்கிறது. ரஷிய சக்ரவர்த்தி தம் நாட்டிலுள்ள போல் ஜாதியாருக்குத் தம் ஆட்சியின்கீழ் ஸ்வராஜ்யமும், ஸ்வபாஷையும் கொடுத்துவிடுகிறதாக உறுதிமொழி கொடுத்திருக்கிறதுமன்றி ஜெர்மனி ஆஸ்ட்ரியா இவைகளிலுள்ள போல் ஜாதியாருக்கும் தம்மைச் சேர்ந்தால் அதேமாதிரி செய்வதாக வாக்களித்திருக்கிறார். இச்சமயத்தில் தங்களுக்கு அன்னியர்களிடமிருந்து அனுபவிக்கும் கஷ்டங்கள் நீங்கவும் தாம் ஸ்வயாதிபத்யம் அடையவும் எவரும் கோருவதை ரஷிய சக்ரவர்த்தி கண்டு நடந்துகொண்டது மெச்சத்தக்க தன்றோ?

இதுநிற்க, நம் யுத்தகளத்தைப்பற்றியும் அங்கு

நடந்துவந்த செயல்களைப்பற்றியும் சற்றுகவனிப்போம். ஜெர்மன் ஸைன்யங்கள் பெரும்பாலும் மேலரங்கத்திற்குச் சென்றிருந்ததால் ரஷிய ஸைன்யங்கள் யாதொரு கஷ்டமுமின்றி—எவராலும் தடுக்கப்படாமல் வந்து கொண்டேயிருந்தன. ரஷிய ஸைன்யங்களை ஒன்று சேர்ப்பதற்கும் நடத்துவதற்கும் வெகு தாமஸமாகுமென்றாலும் அவைகளின் தொகையைக் கவனித்தால் அவைகளுக்கு முன் எதுவும் நிற்காதெனத் தெரிய வரும். புற்றிலிருந்து ஈசல் புறப்படுவதுபோல கணக்கில்லா போர்வீரர்கள் வந்துசேர எங்குபார்த்தாலும் வீரர்மயமாகவே யிருந்தது. பலதுளி பெருவெள்ளம் என்பதுபோல் ரஷியஸேனைகள் வரவரப்பெருத்து பல மடைந்து புதுவெள்ளம்போல் புரண்டுவர ஏற்கெனவே உயர்ந்த அணையில்லாஜெர்மன் ராஜ்யத்தில் பிரவேசித்து தங்களை எதிர்த்த சிறு ஜெர்மன் ஸைன்யங்களை முறியடித்துவிட்டதாகவும் தெரியவந்தது. இம்மாதிரி ஜெர்மனியில் இவர்கள் தாராளமாய்ப் பிரவேசித்து வெகுதூரம்வரையில் வந்துவிட்டார்கள். இப்படி அவர்கள் செய்தது அவர்கள் நோக்கத்தின்படியே நடந்தது. மேற்கேபெல்ஜியம், ப்ரான்ஸ் இவைகளிலுள்ளஜெர்மன் ஸேனைகளைப் பிரித்து கிழக்கமர்க்களத்திற்கு அனுப்ப வேண்டிய அவசியம் நேரிடவே ஜெர்மானியர் தங்கள் எண்ணங்களை மேற்கே நிறைவேற்றமுடியாமல் போய் விட்டதுமன்றி ப்ரஞ்ச், ப்ரிடிஷ் படைகளுக்கு மிக்க அனுகூலமும் ஏற்பட்டிருக்கிறது. ஜெர்மானியர் தம் நாட்டின் கீழ்க்கோடியில் தங்கள் ஸைன்யங்களை யனுப்பி ரஷியரை மும்முரமாய் எதிர்த்துவிடவும் ரஷியருக்



உவின்ஸ்டன் சர்ச்சில்
ப்ரிடிஷ் கப்பற்படை மந்திரி



லார்ட்ஸ் மஹாஸபை, லண்டன்

கும் ஜெர்மானியருக்கும் பெரும்போர் நடந்து இரு திறத்தாருக்கும் உயிர்ச்சேதம் அதிகம் விளைந்திருக்கிறது. ஜெர்மனியிலிருந்து ரஷியர்கள் பின்னிட்டு முக்ய பட்டணங்களில் வந்து சேரவும் அவைகளை முற்றுகை போடுவதும், ஆகாயக்கப்பல்களைக் கொண்டு வந்து நிறுத்தி அவைகளின்மீது வெடிகுண்டுகளை வீசியெறிந்து ஜனங்களைப் பயமுறுத்திக் கொல்வதுமாயிருந்தனரென்றும் சொல்லப்படுகின்றது. பெல்ஜியத்தில் நாடுநகரங்களையும் கல்விச்சாலை முதலியவைகளையும் அழித்துவிட்டன ரென்றால் இப்பகுதியில் அவர்கள் செய்த கொடுமைகள் அவற்றினும் அதிகமானவையென்று சொல்லப்படுகின்றது. உவார்ஸா, லாட்ஸ், கும்பின்னென் முதலிய இடங்களில் வெகுமும்முரமான யுத்தங்கள் நடந்தனவென்றும் இவைகளில் இருதிறத்தாரும் வெற்றிகொண்டதாகக் கூறினரென்றும் சொல்லப்படுகின்றது. ஜெர்மானியர், போலண்டில் வெகுதூரம் பிரவேசித்து அநேக பட்டணங்களைக் கைப்பற்றியிருக்கின்றன ரென்றும், ஆனால் அவர்களுக்கு உயிர்ச்சேதம் அதிகமென்றும் ரஷியருடைய எண்ணம் மட்டும் கைகூடி வந்திருக்கிறதனால் மற்ற விஷயங்களைப் பற்றிக் கருதவேண்டிய அவசியமில்லையென்றும் சொல்லப்படுகின்றது.

யுத்தத்திற்குக் காரணமான ஆஸ்ட்ரியாவிற்கும், ஸெர்வியாவிற்கு உதவியாய்வந்த ரஷியாவுக்கும் இடையில் நடந்துள்ள யுத்தநடவடிக்கைகள் இன்னவெனச் சற்றுப்பார்ப்போம். இதற்குள் ஆஸ்ட்ரியா ஸெர்வியாவின்மீது படையெடுக்கவும் ஸெர்வியர்கள்

# ஐரோப்பிய மஹா யுத்தம்

ஒரே மனதுடையவர்களாய் ஆஸ்ட்ரிய அக்ரமத்தைத் தொலைக்க எண்ணி தங்கள் ராஜதானியாகிய பேல்க்ரேட்நகரத்தின் வெளியிலும் ஷாபாட்ஸ் என்னுமிடத்திலும் ஆஸ்ட்ரியப் படைகளை எதிர்த்து முறியடித்து விட்டார்கள். இதனிடையே மற்ற ராஜ்யங்களைப்போலவே தன் தேசத்து ராஜதானியைப் பாதுகாவல் நிமித்தம் உள்நாட்டில் சற்றுதூரத்திலிருக்கும் நிஷ் என்னுமிடத்திற்கு மாற்றிவிட்டது. ஆஸ்ட்ரியாவின்மீது மற்றராஜ்யங்களும் படையெடுக்க ஆரம்பித்து விட்டன. ஆனாலும் ரஷியப்படைகள்போல் மற்றவைகள் பெரியனவாயில்லை. மெள்ள மெள்ள நகர்ந்து வந்துகொண்டிருந்தது வந்து விட்டது. ஆஸ்ட்ரியாவில் உள்ள கலிஷியாவின் முக்யபட்டணங்கள் ஒவ்வொன்றாய் ரஷியக்கரடியின்கையில் அகப்பட்டு விட்டன. ஸான் என்னும் நதியினைக் கடந்து ப்ரேஸ்மிஸில், லெம்பர்க் என்னும் நகரங்களை முற்றுகை போட்டுக் கடைசியில் பிடித்தும்விட்டது. என்ன! க்ராகோவும் ரஷியாவிற்கு கிடைத்து விட்டதா? என்ன ஆச்சரியம்! இந்நாட்டிலுள்ள ப்ரஜைகள்கூட ரஷியருக்கு அனுகூல முள்ளவர்களா யிருக்கிறது போலுள்ளதே! ஒஹோ! கார்ப்பேதியன் மலைகளை நோக்கி வருகின்றார்களே? அதில் வரும்பாதைகளும் ரஷியர் கையில் அகப்பட்டிருக்கின்றன! இனி ஸெர்வியா முதலிய சிறு பால்கன் நாடுகளைக் கவனிப்பதில் பயனில்லை! நமக்கே மோசம்வரும்போலிருக்கிறதே! இவைகளை யடக்குவதைப் பிறகு பார்த்துக்கொள்ளலாம்! உதவிக்கு ஜெர்மனியைத்தான் கேட்கவேண்டும்! ஆஹா,

ஆபத்தில்கூட உதவுகின்றார்களே! ஹா கஷ்டம்! ஆஸ்ட்ரியாவின் உதவிக்குவரும் ஸைந்யங்கள் அவர்களுடன் சேர்ந்து ரஷியரை எதிர்க்கமுடியாமல் இருக்கும்படி ரஷியஸைன்யங்கள் எங்கிருந்து இடையில்வந்து தோன்றின. கஷ்டத்தின்மேல் கஷ்டமா! பாபம்! ஹங்கேரியை எதிர்ப்பதற்கு இதுதான் ஸமயமென்று ஸெர்விய நாடு கிளம்பியிருக்கின்றதா? மான்டி நீக்ரோவும் பாஸ்னியாவை எதிர்க்கின்றதா? என்ன காலம்! என்னகாலம்! உடனே ஆஸ்ட்ரியா திரும்பி ஸெர்வியரை எதிர்த்து முறியடித்து பெல்க்ரேட் பட்டணத்தையும் தகர்த்துப் பிடித்துவிட்டது.

இந்தக் கோரமான யுத்தத்தில் நேராகவாயினும் மற்று வேறொன்றுபற்றியாயினும் ஒரு ராஜ்யமாயினும் ஸம்பந்தப்படாமல் போகவில்லை. ட்ரிபில் அலையன்ஸ் என்று ஜெர்மனி, ஆஸ்ட்ரியா, இடலி இவைகளுக்குள் நடந்த உடன்படிக்கையின் பிரகாரம் ஜெர்மனியும் ஆஸ்ட்ரியாவும் ஒன்று சேர்ந்தபோதினும், இடலி மாத்திரம் தான் ஸம்பந்தப்படாமலிருப்பேன் என்று கூறிவிட்டது. ஆஸ்ட்ரிய ஸெர்விய ஜெர்மானிய நடவடிக்கைகளில் ஆதிமுதல்கொண்டே தன்னையும் கேட்கவில்லையென்ற அதிருப்திபோலும்! இடலி ஜெர்மனியுடன் சேராமலிருப்பதனால், ஜெர்மனி ஆஸ்ட்ரியா இவைகளுக்குப் பிரதிகூலமாயும் நம்துணைநாடுகளுக்கு அனுகூலமாயும் இருக்கின்றது. மத்தியதரைக்கடலின் மத்யபாகத்தில் இருப்பதனால் அக்கடலில் நடக்கும் நடவடிக்கைகளையெல்லாம் தன் கைக்குள் ளடக்கலா மாகையாலும் மத்யதரைக்கடல், ஆசியாகண்டத்து தேசங்களி

லிருந்து மேல்ஐரோப்பிய நாடுகளுக்கு நடக்கும் வியா பார வழிகளையும் போக்குவரவுக்குரிய கடல்வழி தரை வழிகளையும் தான் வசப்படுத்தக்கூடுமாதலாலும் இடலி யுத்தத்தில் ஸம்பந்தப்படாமலிருப்பது வெகு நல்லது தான். எந்த வேளையில் யார் பக்கம் சேருவது என்பது தெரியாது. ஆனபோதிலும் தன் படைகளையெல்லாம் தயார்ப்படுத்தி ஆயுதமுஸ்தீப்புகளுடன் இருந்து கொண்டுவருகின்றது. இடையில் ஜெர்மானியர் இடலி யைப் பலதடவைகளில் தம் பக்கம் சேரும்படி கேட் டார்கள்; பயமுறுத்தினார்கள்; என்னென்னவோ செய்து பார்த்தார்கள். ஒன்றும் பயன்படவில்லை. இப்பொழுது ஜெர்மனிக்கு அனுகூலமான ஒரு மந்திரி அதிகாரத்திற்கு வந்திருப்பதாகவும் அவர் மற்ற நாடு களில் இருக்கும் தம் தேசப்ரதிநிதிகளையழைத்திருக் கிறாரென்றும் இடலியின் ராஜதானியாகிய ரோம் நக ரில் ஒரு ஸபைகூடுமென்றும் தெரிபவருகிறது.

இது இப்படியிருக்க, வெகுகாலமாய் இங்கிலிஷ் காரருடன் நேசம்பராட்டி அவர்கள் மாதிரியைப் பின் பற்றி அனேக நன்மைகளையடைந்த டர்க்கியும் போ ரில் நுழைந்துவிட்டது. ஒரு காலத்தில் மிக்க க்யாதி பெற்று தன் நாகரிகத்தை எங்கும் பரவச்செய்து தன் ஆட்சி ஆப்ரிக்காவின் வடபாகத்திலும் ஸ்பெய்ன் முழுவதிலும் ப்ரான்ஸின் ஒருபாகத்திலும் செல்லும் படியும் தென்கிழக்கு ஐரோப்பியநாடுகளிலும் தன் ராஜ்யம் பரவும்படிசெய்தும் வந்த மூரிஷ் ராஜ்யத்தின் பெருமை யென்ன? டர்க்கி, ஆஸ்ட்ரியா இவைகள் எப் பொழுதும் விரோதிகளாகவேயிருந்து வந்திருக்கின்

றன. ஐரோப்பிய நாடுகள் எல்லாம் ஆசியாகண்ட வாஸிகளான டர்க்கியரது ராஜ்யம் ஐரோப்பாவில் இருக்கக்கூடாது என்று எண்ணங்கொண்டனர். ஆன போதிலும், டர்க்கியின் முன்பெருமையையும் கண்ணியத்தையும் உத்தேசித்து நம் காருண்ய ப்ரிடிஷ் கவர்ன்மெண்டார் இச்சமயங்களில் பிரவேசித்து அநியாயமாய் இந்நாடு அழிந்துபோகக் கூடாதென்று தகுந்த ஏற்பாடுகள் செய்து காப்பாற்றினார்கள். என்ன செய்தும் இவர்கள் கேட்பவர்களாகவில்லை. வேறு உபதேசங்கள் காதில் ஏறிக்கொண்டுவந்தன. ஏற்கெனவே ஆசியாவிலுள்ள டர்க்கியின் பாகத்தில் சில முக்யமான வேலைகள் நடந்துகொண்டு வந்திருக்கின்றன. ஐரோப்பாவிற்கும் இந்தியாமுதலிய நாடுகளுக்கும் கடல்மார்க்கம்தவிர தரைவழியும் ஸௌகர்யமாய் ஏற்படவேண்டும் என்பது உலகத்திலுள்ள பலநாடுகளுக்கும் தெரிந்ததுதான். அம்மாதிரியே தரைமார்க்கமாய் டர்க்கி பெர்ஷியா இவைகளின் வழியாய் இருப்புப் பாதை யமைக்கவேண்டியது என்று எல்லாரும் கருதினார்கள். அதுபோலவே வேலையும் ஆரம்பிக்கவேண்டியதாயிற்று. ஸாதாரணமாய் பாக்டாட் ரேயில்வே என்று சொல்லப்படும் இருப்புப்பாதை ஆசிய டர்க்கியின் ஊடே கட்டப்பட்டுள்ளது. இது ஜெர்மானியரின் பணத்தைக்கொண்டே ஜெர்மன் எஞ்ஜிநீயர்களால் நியமிக்கப்பட்டு அவர்களாலேயே நடத்தப்பட்டு வருகின்றது. தவிரவும், டர்க்கியிலுள்ள மற்றநாட்டு ஜனங்களில் ஜெர்மானியரே அதிகமாயிருக்கின்றார்கள். இங்கிலீஷ், ப்ரஞ்ச் உத்யோகஸ்தர்களை வரவழைத்து தன்

நாட்டில் சீர்திருத்தியபோதினும் ஜெர்மன் வழிகள் தாம் மேம்பட்டன. இங்கிலீஷ் கவர்ன்மெண்டும் இந்தியாவிலிருந்து தம் மதஸ்தரான—டர்க்கியின் நன்மையையும் இஸ்லாம் மதத்தையும் அதன் கண்ணியத்தையும் எப்பொழுதும் மனத்திலே கொண்டுள்ள—பலரும்—எவ்வளவோ நல்லுபதேசம் செய்தும் அவைகளை ஏற்காமல் தள்ளிவிட்டதும் தவிர ஜெர்மன் ஆலோசனைகளுக்கு இடங்கொடுத்து கடைசியில் தன் ராணுவத்திலும் கப்பற்படையிலும் இருக்கும் மற்றநாட்டார்களைத் தள்ளிவிட்டு ஜெர்மானியர்களையே அவர்களுக்குப் பதிலாக நியமித்தார்கள். மத்தியதரைக்கடலிலிருந்த ஜெர்மன் போர்க்கப்பல்களில் கீபன், ப்ரேஸ்லா என்பவைகள் தம் எதிரிகளுக்குப் பயந்து டார்டெனல்ஸ் என்னும் ஜலஸந்தியை யடையவும் அப்போர்க்கப்பல்களின் யுத்த தளவாடங்களை இறக்கிவிட வேண்டுமென இங்கிலீஷ் ப்ரஞ்ச் கவர்ன்மெண்டுகள் கேட்டன. இவைகளின் வார்த்தைகளைச் சற்றும் கவனிக்காமலிருந்ததும் தவிர அக்கப்பல்களைத் தங்கள் உபயோகத்திற்காக விலைக்கு வாங்கினதாகச் சொன்னார்கள். அக்கப்பல்களிலுள்ள ஜெர்மன் ஆபீஸர்கள் அப்படியே அக்கப்பற்றொழிலில் அமர்த்தப்பட்டார்கள். இப்படி யிருக்கையில் ஜெர்மானியரது சேஷ்டையில்லாமலிருக்குமோ அவ்விடத்தில்? இக்கப்பல்கள் மெதுவாய் கருங்கடலிற் சென்று ஒடேஸ்ஸாஎன்னும் ரஷியதுறைமுகத்தின்மேல் குண்டுகளைவீசி எதிர்த்தனவாம். இந்த ஸமாசாரம் தெரிந்தவுடன் டர்க்கியின்மீது ரஷியாபோர்தொடுத்தது. டர்க்கியின் நன்மையைஎப்பொழுதும் உத்தேசித்துஅதற்கு

ஆப்த நட்புரிமை பூண்டுள்ள இங்கிலாந்தும் டர்க்கி யின்மீது போர் தொடங்கலாயிற்று. இங்கிலீஷ்காரர் டர்க்கியைப் பலமுறை எச்சரித்தும், அனேகந்தடவை புத்திமதி சொல்லியும் கேளாமல் ஜெர்மனியின் வார்த் தைகளையே மேற்கொண்டு நடக்கின்றதினால் இங்கிலீஷ் காரரும் அவர்கள் அப்படி நடப்பதைப்பற்றிக் கேட்க அதை லக்ஷ்யம்செய்யாது மிக்க அவமரியாதையுடன் பதில் சொல்லிற்று. இங்கிலீஷ்காரருக்கும் பொறுக்க முடியாதுபோயிற்று. பாபம்! டர்க்கிஸுல்தானும் இத ற்கு உடன்படுவாரா என ஸந்தேகம் வரலாம்! ஸுல் தானிடத்தில் அதிகாரம் என்பதேயில்லாமல் ஜெர் மானியரது செல்வாக்கு நிலைத்துள்ள ராணுவ நாவாய் களிடத்தில் அதிகாரம் மிஞ்சியுள்ளது. ஜெர்மானிய ரது எண்ணங்கள் எவ்வளவு பெரியனவாயிருந்தபோ தினும் டர்க்கிக்குக் கஷ்டம் வந்து விட்டிருக்கிறது. ஒருவேளை பால்கன் யுத்தத்தினின்றும் தங்களுக்கு மிஞ்சிய சிறிது நாட்டினின்றும் இப்பொழுது ஆசியா கண்டத்திற்கே வந்து சேரநேரிட்டாலும் நேரிடலாம். ரஷிய சைன்யங்களும் நாவாய்களும் டர்க்கியை ஆங் காங்கே எதிர்த்து வருகின்றன. ரஷியாவின் தென் கிழக்கிலுள்ள காகேஷியாவிலிருக்கும் ரஷியப் படை களைச்சேர்த்து டர்க்கியின்மீது படையெடுக்கும்படி யாக அனுப்பவும் அவைகள் ஆர்மீனியா என்னும் டர்க் கியின் பாகத்தில் உள்ள ப்ரதான பட்டணமாகிய எர்ஸ ரம் என்னுமிடத்தை எதிர்த்துப்பிடித்தன. ரஷிய சைன்யங்களினின்றும் தப்பித்துக்கொள்ள டர்க்கி யால் முடியவில்லை. வெகு மும்முரமான யுத்தங்கள்

நடந்தன. டர்க்கியைச்சேர்ந்த கோட்டைகள் ஒன்றன் பின் ஒன்றாய் ரஷிய சைன்யங்கள் கையில் அகப்பட்டுக் கொண்டன. தவிரவும், டர்க்கியைச் சேர்ந்தமாகாணங்களுக்குத் தலைவர்களாய் உள்ள ஷியக் என்பவர்கள் தாங்கள் ப்ரிடிஷாரிடத்தில் எப்பொழுதுமே நேசப்பான்மை கொண்டிருப்பதாக உறுதிமொழி கூறினார்கள். அப்படியே நடந்தும் வருகிறார்கள். உலக நாடுகளுக்கெல்லாம் பொதுவாயிருந்தபோதிலும் இங்கிலீஷ்கப்பல்கள் போய்வருதலையே அதிகமாகவுடைய ஸூயஸ் வாய்க்காலில் இங்கிலீஷ் கப்பல்களைப்போக விடாமல் அதைப்பிடித்துக்கொள்ளவும் ப்ரிடிஷ் மேல் பார்வையின்கீழ் இருந்துவரும் ஈஜிப்ட் தேசத்தில் கலஹங்களை உண்டாக்கவும் இன்னும் அத்தேசத்தின் மீது அரேபிய பெடூயின் ஜாதியாரைப் படையெடுக்கவும் அவர்கள் தூண்டினார்களென்றும் சொல்லப்படுகிறது. இந்திய மஹம்மதியர்களின் மனதிற்கும் இந்திய அரசாங்கத்தின் கோட்பாடுகளுக்கும் விரோதமாக டர்க்கி நடந்துகொண்டது மிகவும் துக்கிக்கத்தக்கது. நம் காருண்ய கவர்ன்மெண்டாரவர்கள் டர்க்கியின்மீது தற்காலம் பகைமை பாராட்டினபோதிலும் டர்க்கியைச்சேர்ந்த மஹம்மதிய யாத்திரை க்ஷேத்ரங்களுக்கு யாதொரு விக்னமும் நேரிடாமல் அங்குயாத்திரையாகபோகுபவர்கள் பாதுகாக்கப்படுவார்கள் என்று விளம்பரப் படுத்தினார்கள். "க்ரேட் ப்ரிடனுக்கு வருத்தமுண்டாகும்படி தூராலோசனையாலும் நிஷ்காரணமாயும், வேண்டுமென்றேயும் செய்த ஆடோமன் கவர்ன்மெண்டின் நடவடிக்கையினாலும் க்ரேட் ப்ரி

டன் டர்க்கி இவைகளுக்குள் ஏற்பட்ட போரை உத்தேசித்து, மத ஸம்பந்தமான விஷயங்கள் யாதொன்று மில்லாத இந்த யுத்தத்தில், நம் மாட்சிமைதங்கிய மன்னரின் அரசாங்கத்தின் நோக்கங்களைப்பற்றி மிகவும் ராஜபக்தியுள்ள மாஸ்லெம் ப்ரஜைகள் தப்பபிப்ராயம் கொள்ளக்கூடா தென்பதினிமித்தம் மெஸொபொடேமியாவின் புண்ணியக்ஷேத்திரம், ஜெட்டாதுறைமுகம் உட்பட அரேபியாவிலுள்ள புண்யக்ஷேத்திரங்களைப்பற்றி கீழ்வரும் பஹிரங்க விளம்பரத்தைச் செய்யும்படி நம் மாட்சிமைதங்கிய ப்ரதிநிதியவர்கள் மாட்சிமைதங்கிய அரசாங்கத்தாரது கவர்ன்மெண்டால் அதிகாரம் கொடுப்பட்டிருக்கிறார். மேற்சொன்ன புண்ணிய க்ஷேத்திரங்களுக்கும் ஆலயங்களுக்கும் இந்தியாவிலிருந்து போகும் யாத்ரிகர்களை ஒன்றும் செய்யாதவரையில் இப்புண்ணிய க்ஷேத்திரங்களும் ஆலயங்களும் ப்ரிடிஷ் கப்பற்படைகள் தரைப்படைகளினின்று யாதொரு தொந்தரையும் போருமின்றி தாராளமாய் விட்டுவிடப்படும். நம் மாட்சிமைதங்கிய மன்னர் அரசாங்கத்தின் வேண்டுகோளின்படி ப்ரான்ஸ் ரஷியா இவைகளின் கவர்ன்மெண்டுகளும் இதே மாதிரியான உறுதிமொழியைத் தந்திருக்கின்றன—''

தன்ராஜ்யத்தின் அபிவிருத்தியைக் கோரியிருந்துவந்த டர்க்கி ஏன் ஜெர்மனியுடன் சேரவேண்டும் என்பது தான் தெரியவில்லை. பாபம்! டர்க்கி ஸுல்தான்கூட இதில் சிறிதேனும் ஸம்பந்தப்பட்டதாகத் தெரியவில்லை. அவரும் அவரைச் சேர்ந்தவர்களும் இன்றும் போருக்குப் பிரியமில்லாதவர்கள்தாம். ஆனா

லும் ஜெர்மனிக்கு அனுகூலமாயும் இங்கிலாந்து முத லிய தேசங்களிடத்தில் பகைமைபாராட்டியும் வரும் சைன்ய வீரர்களின் செய்கையே டர்க்கியின் கஷ்ட தசைக்குக் காரணமாயிருக்கின்றது. ஐரோப்பிய நாடுகள் டர்க்கிக்கு விரோதமாயிருக்கின்றன. முன் சொன்னவண்ணம் ரஷியர்கள் டர்க்கிக்குச் சொந்த மான நாடுகளில் பிரவேசித்து நகரங்களைக் கைப்பற்று கிறார்கள். ப்ரிடிஷ் தரைப்படைகளும் கப்பற்படை களும் அகாபா என்னும் நகரத்தைத் தகர்த்துக் கைப் பற்றின. இந்நகரம் செங்கடலின் வடகோடியிலுள் ளது. இது நிற்க, பாரஸீக வளைகுடாவின் தலைப் பாகத்தில் டைக்ரிஸ், யூப்ரடீஸ் நதிகள் விழும்பாகம் மிகச்செழிப்புள்ளது. இவ்விரு நதிகளும் கலக்கும் பாகத்திற்கு ஷாடேல் ஆரேப் என்றுபெயர். இங்கே பாஸ்ரா என்னும் பெரிய நகரமும் அதற்கப்பால் குர்ணு என்னும் சிறிய ஊரும் இருக்கின்றன. இவ்வூர்க் கோட்டைகளின் தலைவர்கள் முதலில் மிக்கபிடிவாத முள்ளவராயிருந்தனரேனும் வெகு சீக்கிரத்தில் ஆங் கிலேயர் வசமாய்விட்டனர். தவிர, ஈஜிப்டு தேசத் தில் உண்டாகும் கலகமுதலானவைகளை யடக்கவும் கருதி இந்திய சைன்யப்பகுதிகள் சென்று ஆங்காங் கே வெற்றியடைந்து வருகின்றன.

இது இப்படியிருக்க ஆப்ரிகாவிலும் ஜெர்மானி யருக்கும் ப்ரிடிஷ், ப்ரஞ்ச் ராஜ்யங்களுக்கும் குடி யேற்ற நாடுகள் இருக்கின்றனவென்பதை நாமறிய வேண்டும். ஐரோப்பாவில் யுத்தம் தொடங்கவும் ஆப்ரிகாவிலும் போர் ஆரம்பமாயிற்று. ப்ரிடிஷ்,

ப்ரஞ்ச் படைகள் ஆப்ரிகாவின் மேற்குக் கரையிலுள்ள ஜெர்மன் குடியேற்றநாடுகளை வெகு ஸுலபமாகப் பிடித்துக்கொண்டன. கீழ் ஆப்ரிக்காவில் மாத்திரம் இவ்வளவு எளிதில் ஜெர்மானியரை யடக்கி வெல்ல முடியவில்லை. அங்குள்ள ஜெர்மன் படைகள் ப்ரிடிஷ் படைகளை எதிர்த்து ப்ரிடிஷ் ப்ரஜைகளையும் தொந்தரைக்குட்படுத்தின. ஆனாலும் அவர்கள் வெற்றி நீடித்து நிற்குமா ?

தென் ஆப்ரிகாவில் ட்ரான்ஸ்வால் ஆரஞ்ச் யூனியன்களிலேயே சில போவர்கள் ஜெர்மனிக்கு அனுகூலமாகக் கிளம்பி ப்ரிடிஷாருக்கு விரோதமாகக் கலகம் விளைவித்தனர். போவர் யுத்தத்தில் ப்ரிடனுக்கு நேர் விரோதியாய் யுத்தம் புரிந்து பிறகு தாமே ப்ரிடிஷ் ஆட்சியை ஒப்புக்கொண்டு தென் ஆப்ரிகா மந்திரியாயுள்ள ஜெனரல் போதாவின் முயற்சியால் அக்கலஹம் அடக்கப்பட்டது. கலகத்தில் ஸம்பந்தப்பட்டவர்கள் பலவிடங்களில் முறியடிக்கப்பட்டுச் சிறைப்படுத்தப்பட்டார்கள். கலஹத் தலைவர்களும் சிலர் யுத்தத்தில் இறந்துவிட்டார்கள். இனி தென் ஆப்ரிக்காவில் யுத்தத்தினின்றும் அமைதி பிறக்குமென்பதற்கு யாதொரு ஐயமுமில்லை.

ஐரோப்பாவில் யுத்தம் ஏற்பட்ட சில காலத்திற்கெல்லாம் ஆசியாவில் முதன்மை வஹித்த நாடாகிய ஜப்பானும் யுத்தத்தில் பிரவேசிக்கலாயிற்று. ஆசியா கண்டத்தின் கீழ்க்கரைகளில் ஸமாதானம் நிலைத்திருக்க வேண்டியும், ப்ரிடனின் ஆப்த நட்பைப் பெற்றிருத்தலினிமித்தமும், கீழ்த்தேசங்களில் ஜெர்மன்

சேஷ்டைகள் பலப்படாமலிருக்கவும் ஜெர்மானியர் சீன தேசத்திலிருந்து ஓர் உடன்படிக்கையின்படி அனுபவித்துவரும் கியோசோ என்னும் பூமியை ஜப்பான் தங்களிடம் ஒரு குறித்த தவணைக்குள் ஒப்பித்துவிட வேண்டுமெனக் கேட்கவும் ஜெர்மனி அதை ஒப்பிக்காமல் இருந்துவிட்டபடியால் இருநாடுகளுக்கும் போர் நேரலாயிற்று. கியோசோவிலுள்ள ஜெர்மன்படைகள் வெகு ஸ்வல்பமேயாயினும் சில போர்க்கப்பல்களும் அவர்களுக்கு உதவியாயிருந்ததனால் மிகவும் வீரத்துடன் தங்களைக்காத்துவந்தார்கள். ஜப்பானியரால் முற்றுகை போடப்பட்டு கடும்போர் நடந்தபோதினும் கோட்டையை விடுபவராகக் காணோம். இறுதிவரையில் வெகு ஸாமர்த்தியத்துடன் போர் புரிந்தும் கோட்டைதகர்க்கப்பட்டது. கியோசோ ஜப்பான் கையில் அகப்பட்டுவிட்டது. ஆனபோதிலும் அது சீனருடைய ஆதீனத்தில் இன்னம் சேர்க்கப்படவில்லை. தவிர மத்ய பெஸிபிக் மஹாசமுத்திரத்தில் உள்ள ஜெர்மனிக்குரிய தீவுகள் பல ப்ரிட்டிஷ்படைகளாலும் ஜப்பானிய படைகளாலும் பிடிக்கப்பட்டுள்ளன.

தற்காலத்திய யுத்தங்களில் நேரே ஸம்பந்தப்பட்டவர்கள் மாத்திரம் போர்புரிவது ஒருபுறமிருக்க உலகத்திலுள்ள மற்ற ராஜ்யங்களும் எப்படியாவது போருக்கிழுக்கப்படுகின்றன வென்பதும் இதனாலேயே உலகமுழுவதும் அமர்க்களமாகி விடுகின்றதென்பதும் விசதமாய்த் தெரிகின்றதல்லவா ?



# பதினோராம் அதிகாரம்

## கடலில் நடக்கும் சண்டைபோர்

ஆதிகாலங்களில் ரதகஜதுரகபதாதிகளைக்கொண்டு போர்புரிவது வழக்கமென்றும் விமானங்களின் மீதேறிச்சென்று மேகமண்டலங்களில் மறைந்துபோர் புரிந்திருக்கின்றனரென்றும் நம் கிரந்தங்களில் படித்திருக்கிறோம். தேசசரித்திரங்களைப் படிப்போர் கடல் மீது பாய்விரித்துச் செல்லும் கப்பல்களினின்று காலாட்கள் போர்செய்தன ரென்றும் சிலகாலத்திற்குப் பின் கப்பல்கள் சிறிதுதூர மிருந்துகொண்டே போர் புரிந்தனவென்றும் அறிவார்கள். ஆனால் தற்காலத்து கடற்போர்களைப்போல் ஆச்சரியத்தையும் பயத்தையும் உண்டாக்கக்கூடியவை வேறொன்றுமில்லை. கப்பல்களிலிருந்து மைல்கணக்காய் குண்டுகளை எறிவதும், எதிரிக்குத் தெரியாமலே அவர்கள் கப்பல் சின்னபின்னமாய்த் தகர்ந்துபோகும்படி ஜலத்தினடியே குறி பார்த்தடித்து விசையாய்ச் செலுத்தப்படும் வெடி மருந்து முதலியவை நிரம்பிய சுருட்டுப்போன்ற டார்பீடோக்களும், அவைகள் செலுத்தப் படுவதற்கும் எதிரிகளது கப்பல்கள் ஏதாவது வருகின்றதோ என வெளியில் பார்ப்பதும் பிறகு நீர்மட்டத்திற் கடியிற் சென்று மறைவதுமான எஃகினால் செய்த பெருந் திமிங்கிலம் போன்று கடற் காவல் செய்வதற்கு உபயோகமான ஸப்மெரீன்களும், எதிரிகளுக்கு நாசத்தை விளைத்தலால் டெஸ்ட்ராயர் என்று பெயர்பெற்ற நாவாய்களும், பகைவரது கப்பல்களை

ஓடித் தேடிப் பிடிப்பதில் ஸாமர்த்தியமுள்ள க்ரூய்ஸர் என்னும் வேகமான யுத்த *கலங்களும், தவிர பெரும் பீரங்கிகள் ஏற்றப்பட்டு பயங்கரமான தோற்றத்தை யுடைய ட்ரெட்நாட், ஸூபர் - ட்ரெட்நாட் என்னும் போர்க்கப்பல்களும்; எதிரிகளது எத்தகைய போர்க் கப்பல்களும் தம் மீது பட்டமாத்திரத்தில் சுக்கல் சுக் கலாய்ப்போகும்படி செய்யும் கடல் சுரங்கங்களும் மனிதனுடைய நுண்ணறிவும் அதற்கேற்ற இக்காலத் திய வாழ்க்கையும் அபேக்ஷிக்கக்கூடிய நன்மைகளுக்கு அறிகுறியாய் இருக்கின்றன போலும்! நாம் இப் பொழுது கூறிவந்தவையெல்லாம் தற்கால ஐரோப்பிய யுத்தத்தில் உபயோகிக்கப்பட்டு வருகின்றன.

இக்கப்பல்களுக்கு வேவுபார்க்கும்படியாக அனே கமாய் ஆகாய விமானங்களே உபயோகப் படுத்தப்படு கின்றன! ஆகையால் டேரிஜபில், ஏரோப்ளேன் முத லிய பலவகை ஆகாய விமானங்கள் தரைப்படைகளுக் கன்றி கடற் படைகளுக்கும் எதிரிகளின் நடவடிக்கை களைப் பார்த்துக் கூறுவதிலும் அவைகளை எதிரியின் குண்டுகளினின்று காப்பதிலும் மிகவும் அனுகூல முள்ளவையாகவே யிருக்கின்றன. இத்தகைய படை கள் இருதிறத்தாரிடத்தும் இருந்தபோதிலும் ஸாக

* கப்பல் என்பதற்கு மரக்கலம் என்னும் வேறுபெயர் இருப்பினும் இவைகள் எல்லாம் மரத்தால் ஆதியில் செய்யப் பட்டனவேனும் தற்காலம் எத்தகைய ஆயுதங்களுக்கும் இடங் கொடாமல் கனத்த எஃகுக்கவசங்களையுடையன வாயிருப்பது டன் எஃகினாலேயே செய்யப்பட்டன வாயுமிருக்கின்றன. ஆகவே இனி கப்பல்களை மரக்கலங்களென்னுமல் இரும்புக் கலங்களெனவே கூறுதலும் தகுதியாமன்றோ!

ராதிபத்யத்தில் இங்கிலாந்தே தலைதூக்கி நிற்கின்றது. ஆகவே தற்காலத்தில் ராஜ்ய க்ஷேமாபிவிருத்திக்குரிய அன்னிய தேசவியாபார விஷயத்திலேயும் அதனாலேயே தன் ப்ரஜைகளுக்குவேண்டிய உணவுப் பொருள் களைச்சேகரிக்கும் விஷயத்திலும் பற்பல கோளாறுகள் ஏற்பட்டிருக்கின்றன.

யுத்த ஆரம்பகாலத்தில் ப்ரிடிஷ் போர்க்கப்பல்கள் வெகு சுறு சுறுப்பாய் இருந்தனவென்பதை முன்னமே கூறியுள்ளோம். அட்மிரல் ஜெலிகோ என்பவர் கப்பற்றலைமைவஹிக்கவும் நூறுவருஷங்களுக்கு முன் நெபோலியனது கப்பற்படைகளைத் தோற்கடித்து இங்கிலாந்து நாட்டில் ஒவ்வொருவரும் யுத்தத்தில் தத்தம் கடமையைச் செலுத்தக் கூடியவரென்று காட்டினது போல் இச்சமயத்திலும் காட்டுவாரென எதிர்பார்க்கப் பட்டது. வடகடலிலும் இங்கிலிஷ் வாய்க்காலிலும் எதிரிகள் வராதவண்ணம் அல்லும் பகலும் கண்ணிமையாமல் காவலிருக்கவேண்டியதாயிற்று. ஜெர்மானிய சக்ரவர்த்தி யுத்தம் ஆரம்பிப்பதற்கு கொஞ்சகாலத்துக்கு முந்திதான் வடகடலையும் பால்டிக் கடலையும் ஒன்று சேர்க்கும் கீல் கெனல் (அல்லது கெய்ஸர் உவில் ஹெல்ம் கெனல்) என்னும் வாய்க்கால் திறக்கப்பட்டது. ஜெர்மனிக்குப் போர்க்கப்பல்கள் செய்வதற்கும் அவைகளை நிறுத்துவதற்கும் வசதியான துறைமுகங்கள் வடகடலில் பெரும்பாலும் இல்லை. ஹாலண்டுக் கடுத்தாற்போல் ஜெர்மன் கடற்கரையில் உள்ள எம்டன், அதற்கப்பாலுள்ள உவில்ஹெம்ஸ்ஹேவன் இவைகள்தாம் இப்பக்கத்தில் முக்யமானவை. ஜெர்மனியின்

பாலடிக் கடற்கரைப பாகத்திலுள்ள துறைமுகங்கள் எதற்கும் வஸதியானவையல்ல. குளிர்காலங்களில் பால்டிக் பெரும்பாலும் உறைந்துவிடுமாகையாலும் இந்த பாகம் பிரயோசனமில்லை. ஆனபோதிலும் இந்தக் கடற்கரை வடகடல் பாகத்தைவிட நீளமானது. வட கடலிலிருக்கும் கப்பல்கள் பால்டிக்கடற்றுறை முகங்களுக்கு வருவதாயிருந்தால் டென்மார்க் தேசத்தின் வடகோடியைச்சுற்றி அதற்கும் நார்வே ஸ்வீடன் தேசங்களுக்கும் மத்தியிலுள்ள ஜலஸந்திகள் வழியாய்த்தான் வரவேண்டும். அவ்வழி வெகு தூரமாயிருப்பதுமன்றி ஜெர்மானியர் தங்களுக்குரியது என்று சொல்லக்கூடாத நீர் நிலையாகவும் உள்ளது. இவைகளை யுத்தேசித்தே ஜெர்மன் சக்ரவர்த்தி வடகடலையும் பால்டிக் கடலையும் ஒன்றுசேர்க்க எண்ணி மேல் சொன்ன கீல்வாய்க்காலை வெட்டுவித்தார். அதில் எவ்வளவு பெரிய போர்க் கப்பலாயிருப்பினும் போகும்படியான ஆழமும் அகலமுமுள்ளது. அவ்வாய்க்காலின் கிழ்க்கோடியிலுள்ள கீல் என்னும் துறைமுகத்தில் போர்க்கப்பல்கள் விதவிதங்களாய் நிருமிக்கும் க்ருப்சாலைகளும் ஜெர்மன் இம்பீரியல் சாலைகளும் கட்டப்பட்டிருக்கின்றன. இது தவிர பெரும் பீரங்கிகள் செய்வதற்கென்றேயுள்ள தொழிற்சாலைகளும் இங்கிருக்கின்றன. இங்கிருக்கும் ஒரு தொழிற்சாலையில் பதினாயிரம்பேர் வேலை செய்கிறார்களென்றால் அங்கு நடக்கும் வேலை இத்தன்மையது என்று அறிந்துகொள்ளலாம். இது தவிரவும் எல்ப் நதியின் முகத்துவாரத்தில் உள்ள ஹாம்பர்க் என்னும் நகரமும்

ஒரு முக்ய துறைமுகப்பட்டணம். இங்கும் கப்பற்றொழிற் சாலைகள் அனேகமிருக்கின்றன. கப்பற்றொழிலை விருத்திசெய்து ஜெர்மன் நாவாய்கள் மிக்க ப்ரஸித்தியடையச் செய்ததற்கு இப்பொழுதிருக்கும் ஜெர்மன் சக்ரவர்த்தியே காரணம். இப்படி எவ்வளவோ உத்ஸாஹத்துடன் ஜெர்மன் நாவாய்ப்படைகள் விருத்தி செய்யப்பட்டனவேயாயினும்—அவைகள் எல்லாவிதத்திலும் ப்ரிடிஷ் போர்க்கப்பல்களைவிடச் சிறந்தவையெனக் கருதப்பட்டனவேயாயினும்—போர் தொடங்கியபிறகு அவைகளால் ஒன்றும் செய்யக்கூடவில்லை. அவைகள் வெகு கம்பீரமாய் கீல்வாய்க்காலில் அணிவகுத்து ஆனந்தகரமான காட்சியை விளைவித்தனவெனினும் தம் துறைமுகங்களினின்றும், அப்படிச் சற்று வெளியேறினும் எல்ப் நதியின் முகத்துவாரத்தினின்றும் நடுக்கடலில்வந்து போர்புரிய வரவில்லை. ப்ரிடிஷ் படைகள் வெகு பரபரப்புடன், ஆனாலும் வெகு ஸாவதானமாய் வடகடலுள் இங்கிலாந்தின்கரையைக் காக்கவேண்டி ஜெர்மன் நாவாய்களை வரவொட்டாமல் தடுத்து அடைத்துவிட்டன. இங்கிலாந்திற்கும் ஜெர்மனிக்கும் யுத்தம் தொடங்குவதற்கு முன்னமேயே ஜெர்மானியர் கொண்டிருந்த எண்ணங்கள் வீணாய்ப் போயின. இங்கிலாந்தின் கீழ்க்கரையைக் காப்பதற்கென்றுள்ள கப்பல்களை நாசம் செய்யும்படியாக டார்பீடோக்களையும் ஸப்மெரீன்களையும் அனுப்ப எண்ணியிருந்தார்கள். அவைகள் வருவதற்கு விரோதமாக ப்ரிடிஷ்படைகள் வடகடலில் வந்து சேரவும் அவர்கள் தங்கள் துறைமுகங்களிலிருந்து வெளிவர

முடியவில்லை. தாங்கள் நிலத்தில் போர்செய்து வெற்றி யடைந்தபிறகு கடலில் கப்பற்போர் செய்யலாமென்று இருந்தனர்போலும்! தாங்கள் பெரிய கப்பல்களையும் மற்றும் பல ஆயுதங்களையும் வெளியில் வடகடலில் கொண்டுவந்து நேருக்கு நேரே போர்புரிய முடியாத தைக் கண்டு வேறுவிதமாய்த் தங்கள் காரியத்தை முடிக்க எண்ணங்கொண்டார்கள். கடற் சுரங்கம் என்பது ஒருவித கொடும்படை. அது ஒரு உருண்டை வடிவானது, அல்லது குழல்போன்றுள்ளது. அதனுள் வெடிமருந்து முதலிய அபாயகரமான வஸ்துக்கள் போட்டு நிரப்பப்பட்டு ஸமுத்திரத்தில் எட்டு அல்லது ஒன்பது அடி ஆழத்தில் விடப்பட்டு இருக்கும், அல்லது எவ்வளவு ஆழம் வேண்டுமானாலும் விட்டுவிடலாம். கப்பல்களின் அடிப்புறம் இச்சுரங்கங்களில் தட்டினால்போதும். உடனே அச்சுரங்கம் வெடித்து மேலுள்ள கப்பலை—அது எவ்வளவு கனத்த இருப்புத் தகட்டினால் செய்யப்பட்டிருந்தபோதிலும் தூள்தூளாகச் செய்துவிடும். இம்மாதிரியான சுரங்கங்கள் செய்து எதிரிகளது போர்க்கலங்கள் தம் துறைமுகத்தையடைந்து அல்லது தம் நீர்நிலையினுள் பிரவேசித்து தம் கப்பல்களுக்குச் சேதம் விளைவிக்கக் கூடாதென்ற கருத்துடன் தம் துறைமுகவாயில்களில் கடலில் போட்டிருப்பது வழக்கம். அவைகள் எதிரிகள் கப்பல்களென்று தெரிந்தால் மாத்திரமே வெடிக்கும்படியாயும் அமைக்கப்பட்டிருந்தன. ஸாதாரண வியாபாரக் கப்பல்களாயிருக்கும்பக்ஷத்தில் அவைகளால் யாதொரு சேதமும் வராமலிருக்கும்பொருட்டு அனேகமாய் ஜாக்

கிரதையுடனிருந்தார்கள். தவிரவும் யுத்தத்தில் ஸம்பந்தப்படாத நாடுகளுக்கும் இன்னின்ன இடங்களில் சுரங்கங்கள் போடப்பட்டிருக்கின்றன என்று தெரிவிப்பதும் வழக்கம். இத்தகையசுரங்கங்கள் தாமே வெடிக்காமல் கடற்கரையில் உள்ள ஒருவர் ஒரு யந்திரத்தில் வேலை செய்வதினாலேயே வெடிக்குமாம். ஆனால் தற்காலத்தில் உபயோகிக்கப்பட்டுவரும் சுரங்கங்களோ யாவருடைய கப்பல்களாயிருப்பினும் அவைகள் வியாபாரக்கப்பல்களோ, போர்க்கப்பல்களோ தம்மைச் சேர்ந்தவையோ, எதிரியைச்சேர்ந்தவையோ அல்லது யுத்தத்தில் ஸம்பந்தப்படாத நாட்டினுடையதோ எவையாயிருந்தாலும் அவைகளைத் தட்டினதும் நாசம்தான். முன்சொன்னவண்ணம் அவை தற்காப்பினிமித்தம் தம் நீர்நிலைகளினிடையே போடவேண்டியிருக்க சிறிதேனும் ஒன்றும் யோசனை என்பதின்றி வடகடலில் வெகு தூரம் வரையில் இவைகளைப்போட்டு விட்டனராம் ஜெர்மானியர். வடகடலில் ப்ரிடிஷ் போர்க்கப்பல்களிருக்க ஜெர்மன் கப்பல்கள் இவைகளை எப்படிப் போட்டுவந்தன என்ற சங்கைபிறக்கலாம். அதற்கு ஏற்ற உபாயத்தை ஜெர்மானியர் அறிந்துள்ளார்கள். யுத்தத்தில் சிறிதேனும் ஸம்பந்தப்படாத ராஜ்யத்தின் கொடியைத் தம் கப்பல்களின் மீது நாட்டிக்கொண்டு இந்த கொடிய வேலைகளைச் செய்தனராம். தவிர வடகடலில் அடிக்கடி மூடுபனி வந்து கவிந்து கொள்வதுண்டு. இப்படியிருக்கும்போது ஒருவருக்கும் தெரியாமல் வெகு துரிதமாய் வெளிவந்து தம் வேலையைச் செய்து விட்டு உள்ளே துறைமுகங்களுக்குச் சென்றுவிட்டனராம்.

சில நடுவுநிலைமை வஹித்துள்ள ராஜ்யங்களது கப்பல் கள், அனேக வியாபாரக்கப்பல்கள் இன்னும் அனேக போர்க்கப்பல்கள் இச்சுரங்கங்களில் தட்டுப்பட்டுமூழ் கிப்போயின. இங்கிலிஷ்காரரும் இப்படிக் கொடிய செய் கைகளைச்செய்வதைப்பழித்து ஒன்றும்செய்யாதிருந்த வர் சின்னாட்கள் பார்த்தார்கள். வீணாப்ச் சேதம் அதி கப்படும்போலிருந்தது. உடனே அவர்கள் போட்ட சுர ங்கங்களை எடுத்துவிடுவதற்கும் தாங்களும் அத்தகைய சுரங்கங்களைப் போட்டுவிடுவதற்கும் தீர்மானித்தார்க ளாம். இரண்டும் கொடிய செயல்கள்தாம். போட்டிருக் கும் சுரங்கங்களை எடுப்பது இலேசான காரியமன்று. எடுக்கும்போது அவைகளின்மீது பட்டால் அக்கப்பல் களும் போய்விடவேண்டியதுதான். இரண்டிரண்டுகப் பல்கள் ஒரு ஆகாயவிமானத்துடன் இந்த வேலைசெய்ய வேண்டுமாம். கடலில் விதைக்கப்பட்டிருக்கும் இக் குண்டுகள் ஆகாயவிமானத்திலிருந்து பார்க்கப்படுமா னால் தெளிவாய்த் தெரியுமாம். இதைக் கடலில் உள்ள தம் கப்பல்களுக்குத் தெரிவிக்க அவைகள் சுரங்கங்களை ஒன்று கூட்டி அழித்து விடுவார்களாம். இம்மாதிரி யான வேலையே பெரும்பாலும் நடந்துவந்ததே யொ ழிய மிகவும் முக்யமானகடற்போரே நடக்கவில்லை. தம் கரைகள் வெகு பத்திரமாய்க் காக்கப்பட்டுவருகின் றனவென்னும் தைரியத்துடனும், எதிரிகள் தம் எல் லைக்குள் நாடமாட்டார்கள் என்ற எண்ணத்துடனும் சில ஜெர்மன் போர்க்கப்பல்கள் தாராளமாய் நடமாடிக் கொண்டிருந்ததை யறிந்த ப்டிரிஷ் கப்பற்படைகள் ஹெலிகோலாண்ட் என்னும் தீவிற்கருகில் அவைகளை

நெருங்கிப் போர்புரியவும் அங்கு பெரும்போர் நடந்து ஜெர்மன் கப்பல்கள் வீழ்த்தப்பட்டன. அநேக ஜெர் மானியர் உயிரிழந்தனர். அக்கப்பற்படையின் தலை வன் கடைசிவரையில் போர்புரிந்தும் தன் வீரர்களை நோக்கி அவர்களையும் கடைசிவரையும் போர்புரியும் படியாகத் தூண்டுதல்செய்தும் தன்தீரத்தை வெளிப் படுத்தினனும். மொத்தத்தில் வடகடலில் விசேஷ மான போர் ஒன்றுமில்லையெனவே சொல்லவேண்டும். எதிரிகளின் சுரங்கம் வைக்கும் கப்பல்களும், கொடிய ஆயுதங்களைக்கொண்டு வந்து பகைக் கப்பல்களின்மீது செலுத்தும் பற்பல போர்க்கப்பல்களும் ப்ரிடிஷ் எல் லைக்குள்ளாவது அல்லது துறைமுகங்களுக்காவது எங்குபோய் சேதம் விளைக்குமோவென்று இரவும் பக லும் காவல் காத்துக்கொண்டிருக்கின்றன. இப்படி இருக்கும் தறுவாயில் அநேக சிறிய ஸம்பவங்கள் நடக்காமலிருக்குமா? இருதிறத்தாரது கப்பல்காவற் படைகள் ஒன்றையொன்று ஸந்தித்தால் அவைகளுக் குள் ஒருவித கலஹம் நிகழவேண்டியது ஸஹஜந் தானே. இது தவிர வடகடலிலிருக்கும் கப்பற்படை கள் துணைத்தரைப்படைகளுக்கு வெகு அனுகூலமா யிருந்தன. ஜெர்மானியர் ஆண்ட்வெர்ப் நகரத்தைப் பிடித்து ஆஸ்டெண்ட் முதலிய கடற்றுறைமுகங்களின் மீது தம் படைகளைச் செலுத்தி டன்கர்க், கலே முத லிய கடற்கரைப் பட்டணங்களைப் பிடிக்கப் பாய்ந்த போது பெரிய கப்பற்படைகள் கடற்கரைக்கருகே கொணர்ந்து நிறுத்தப்பட்டு அவைகளினின்றும் கொ டிய குண்டுகள் கணக்கில்லாமல் வீசி யெறியப்பட்டன.

முற்றுகையில் உபயோகிக்கின்ற பெரும் பீரங்கிகளைச் காட்டினும் வேகத்திலும் பலத்திலும் இவைகள் சிறந்தவையாதலால் மிகுந்த சேதத்தை யுண்டுபண்ணின. இது இப்படியிருக்க ஜெர்மானியர் தம் சேஷ்டைகளைச் செய்யாமற் போகவில்லை. தம் சிறு டார்பீடோக்களையும் ஸப்மெரின்களையும் கடல் நீர்மட்டத்திற் கடியிற் செலுத்தி இங்கிலாந்தின் கடற்படைகளின் மீதும் துறைமுகங்களுக்கும் செலுத்துகின்றனராம்.

வடகடலின் நடவடிக்கைகள் இப்படியிருக்க, மத்யதரைக்கடலில் உள்ள எதிரிகளின் போர்க்கப்பல்கள் எங்கும் தப்பி வெளியில் அட்லாண்டிக் வழியாய் ஜெர்மன் கப்பற்படைகளுடன் சேராவண்ணம் ஜிப்ரால்டர் என்னும் முக்ய நாவாய் தங்குமிடத்திலிருந்து மேற்பார்வையிடப்பட்டு வந்தது. மத்யதரைக் கடலில் மிகவும் வேகமானதும் ஆனாலும் மிக்க பலம் பொருந்தியதுமான பயங்கரத் தோற்றத்தையுடைய கீபன் என்னும் போர்க்கப்பலும் ப்ரேஸ்லா என்ற மற்றொரு கப்பலும் இருந்தன என்று முன்னரே குறிப்பிட்டுள்ளோம். அவைகளை ப்ரிடிஷ் கப்பல்கள் கைப்பற்ற எண்ணங்கொள்ள அந்த ஜெர்மன் கப்பல்கள் அப்பொழுது நடுவுநிலைமையுள்ள ராஜ்யமாயிருந்த டர்க்கியைச் சேர்ந்த டார்டனேல்ஸ் ஜலஸந்தியையடைந்தன. பிறகு எங்கு அகப்பட்டுக்கொள்கிறோமோ எனப் பயந்தோட, மற்று என்ன காரணங்கள் உள்ளனவோ—அவைகள் டர்க்கிக்குச் சொந்தமானவைகளாய் விலைகொடுத்து வாங்கப்பட்டனவாம். பிறகு டர்க்கியும் யுத்தத்தில் பிரவேசிக்கும்போது இந்த போர்க்கப்பலேதான் கருங்

## கடலில் நடக்கும் கடும்போர்

கடலுள் நுழைந்து ரஷியாவிற்குத் தீங்கிழைத்துவந்து ஒடெஸ்ஸா நகரின்மீது குண்டுகளை எறிந்தது. ஆனாலும் ஓரிடத்தில் ஒருவேளையிருந்து மற்றொருவேளை மறைந்துகொண்டு இருந்தபடியால் அவைகள் சில நாள் இஷ்டப்படி திரிந்தன. ஆனாலும் கீபன் ஒரு முறை கண்டுபிடிக்கப்பட்டதும் தவிர அதின் ஒருபாகத்திற்குச் சேதமும் உண்டாக்கப்பட்டது. சின்னாட்களுக்குமுன் டார்டனெல்ஸ் ஜலஸந்தியிடத்தும் கடல் சுரங்கங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன என்ற ஸங்கதி தெரியவந்தது. சிறிது சேதமடைந்த கீபனும் தன்னை ஸரிப்படுத்திக்கொண்டு பிறகு மறுபடியும் கருங்கடலின் துறைமுகங்கள் (ரஷியாவிற்குச் சேர்ந்தவைகள்) மீது குண்டுகளை வீசி யறிவதாகவும் பேமே் என்னும் துறைமுகத்தில் உள்ள பெட்ரோலியப் பெருந்தொட்டிகளை சேதப்படுத்திவிட்டது எனவும் தெரியவருகிறது. இதனிடையில் ஆஸ்ட்ரியாவுக்குள்ள போர்க்கப்பல்கள் அதன் துறைமுகங்களினின்றும் வெளிவர முடியாமல் தடுக்கப்பட்டன. ஆஸ்ட்ரியாவைச்சேர்ந்த டேல்மேஷியக்கரையில் உள்ள கட்டேரோ என்னும் துறைமுகமும் மற்றும் அந்தக்கரையைச்சேர்ந்துள்ள பலவிடங்களும் துணைக்கப்பல்களால் தாக்குற்று தகர்க்கப்பட்டன. இவையெல்லாவற்றையும் பொறுக்கமுடியாதவராய் எட்ரியாடிக் கடலிலும் சுரங்கங்கள் பரப்ப ஆரம்பித்தார்கள். இதில் ஒன்றுமறியாப் பேதையர்களாகிய அனேகர் அகப்பட்டுத் தவித்தனர்.

கடற்போரே நடந்து இருதிறத்தாருக்கும் அதிக சேதமில்லையெனினும் மற்றவழிகளில் அனேகமான

நஷ்டங்கள் ஏற்பட்டுள்ளன. ஜெர்மனிக்கு உலகத்தின் வியாபாரங்களையெல்லாம் தானே நடத்தவேண்டிய எண்ணம் உண்டென்று முன்னமேயே குறிப்பிட்டுள் ளோமல்லவா ? இந்தப் போர் கிளம்பினபிறகு வியாபார மும் நின்றுவிட்டது. ஆங்காங்கு வெளியில் இருந்த வியாபாரக்கப்பல்கள் ஜெர்மனிக்கோ அல்லது எங்கு அவைகள் போகவேண்டுமோ அவ்விடங்களுக்குப் போகவொட்டாமல் தடுக்கப்பட்டு அவைகளும் அவை களிலுள்ள பண்டங்களும் சிறைப்பொருளாகப் பிடிக் கப்பட்டன. அக்கப்பல்களைச்சேர்ந்த மாலுமிகளும் வேலையாட்களும் ஜெர்மானியரா யிருப்பரேல் அவர்க ளும் சிறைப்படுத்தப்பட்டு வெகுபத்திரமான இடத்தில் காக்கப்பட்டனர். உலகத்திலுள்ள எல்லா முக்யமான வியாபார வழிகளையும் இங்கிலிஷ்காரரே மேல்பார்த்து வருகின்றனராதலால் அவர்களைத் தப்பிப் போவதற்கு முடியவில்லை. மத்யதரைக்கடலின் மேற்குக் கோடியில் ஜிப்ரால்டரும் மத்தியில் மால்டாவும் கீழ்க்கோடியில் போர்ட்ஸேட், ஸூயஸ் முதலானவைகளும் செங்கட லின் கோடியில் ஏடனும், மற்றுஇன்னும் கிழக்கே இந் தியாவைக் கடந்து சென்றால் வங்காளவிரிகுடாவி லிருந்து பஸிபிக் மஹா ஸமுத்திரத்தில் நுழையும் போது சிங்கப்பூர் முதலியவைகளும் இருப்பதை கவ னிப்பவர்களும், ஆங்காங்கே சிதறுண்டு இருந்தபோதி லும் தாய்நாட்டின்மீது மிக்க அன்புபூண்டொழுகும் குடியேற்றநாடுகள் இருப்பதையும் பார்ப்பவர்களும் உலகவியாபாரத்திற்கே—உலகவியாபாரத்தில் முதன் மை வஹிப்பதற்கே யுள்ளது க்ரேட் ப்ரிடன் என்று

சொல்லாமலிருப்பார்களோ? இப்படி முக்ய கடல் வழிகளைத் தம் ஆதீனத்திலோ அல்லது மேற்பார்வையிலோ கொண்டுள்ளதனால்தான் ப்ரிடிஷ் வியாபாரம் சீரழியாமல் இருந்துகொண்டுவருகிறது. பகைவரது வியாபாரம் அடியோடேயே நின்றுவிடலுமாயிற்று. ஆனாலும் இருதிறத்தாருக்கும் நஷ்டமென்பதில்லாமல் போகவில்லை. ஜெர்மன் நாவாய்கள் வடகடலிலிருந்து—வடகடலினுள்ளேயே—வராமற்போகும்படி செய்துவிட்டபோதிலும், கிழக்கே பஸிபிக் ஸமுத்திரத்திலும் மற்று ஜெர்மன் ஆதீனநாடுகளிலுமுள்ள போர்க்கப்பல்களும் ஆங்காங்கே அடைபட்டுக்கிடந்தபோதிலும் சிற்சில கப்பல்கள் எப்படியோ தப்பித்து வெளிவந்து ப்ரிடிஷ் வியாபாரக் கப்பல்களுக்கும் வியாபாரத்திற்கும் சேதம்விளைவித்தன என்பதை ஒருவரும் சொல்லாமலிருக்கமாட்டார். இப்படி வெளிவந்துள்ள ஜெர்மன் கப்பல்கள் எல்லாம் க்ருய்ஸர் வகையில்தான் பெரும்பாலும் சேர்ந்தவையாய் இருக்கின்றன. இவை பெரும் போர்க்கப்பல்களைப் போன்றிராமல் சற்றுச் சிறியவையாய் வேகமாயெறியக்கூடிய குண்டுகளுக்கு வஸதியுள்ள சிலபீரங்கிகளைமட்டும் ஏற்றிக்கொண்டும் மற்று டார்பீடோ முதலிய கொடிய ஆயுதங்களைக்கொண்டும் உள்ளன. ஸாதாரணமாய் வெகுவேகத்துடன் போகக் கூடியவை. இவைகள் கடலையும் கரையையும் காப்பதுமன்றி எதிரிகளின் கப்பல்களைத்துரத்தித் தேடிப்பிடிப்பதற்கும் உபயோகமானவை. ஸாதாரணமாய்த்திருடர்கள் முடிச்சுமாறிகள் ஜனங்களுக்கு யாதொரு தீங்கு மிழையாவண்ணமும் அப்படிப்பட்டவர்களை ஓடித்

தேடுவதற்கும் சக்தியும், வேகமும், அப்படிப்பட்டவர்களைப் பிடிக்கும்பொழுதே தண்டிக்கும்பொருட்டும் தங்களைக் காப்பாற்றிக்கொள்ளும்பொருட்டும் ஏற்பட்டுள்ள போலீஸ் காவலாளிகள்போலவே இக் க்ரூய்ஸர்களும் வேலைசெய்யக்கூடியவை. இம்மாதிரியான ஜெர்மன் க்ரூய்ஸர்கள்தாம் அனேகமாய் வெளிவந்து சேஷ்டைகள் செய்துகொண்டிருந்தன. இவைகள் பார்வைக்குச் சிறியவையாயிருப்பினும் செய்யும் தீங்குகளோ பொறுத்தற்கரியன. இத்தகைய சில்லறை ஆயுதங்களடங்கிய கப்பற்படைகளை ஆங்கிலத்தில் மசகப்படைகள் என்று கூறுவார்கள். கொசுக்களைப்போலச் சிறியவையா யிருப்பினும், அவைகளைப்போல ஒரு தட்டில் அனேகமாய்த் தொலைத்துவிடலாமாயினும், அவைகள் கொசுக்களைப்போலவே சுரீல் என்று சில சமயங்களில் வேலைசெய்து விடுகின்றன. இம் மாதிரி நடந்தவைகளில் முக்பமானவற்றை மட்டும் இங்கு கூறுவோம்.

வடகடலிலிருந்து ப்ரிடிஷ் கப்பற் படைகளையும் ஏமாற்றிவிட்டு வெளிக்கிளம்பின ஜெர்மன் க்ரூய்ஸர்கள் கார்ல்ஸ்ரூஹே, ட்ரேஸ்டன், ந்யூரம்பேர்க் முதலிய ஒன்பது எனச் சொல்லப்படுகின்றது. அவைகளில் முதல் சொல்லப்பட்டுள்ள கார்ல்ஸ்ரூஹேமாத்திரம் அடுத்தடுத்து பத்துப் பதின்மூன்று ப்ரிடிஷ் கப்பல்களைமட்டும் பிடித்து நாசம் விளைத்திருக்கிறது. ப்ரிடிஷ் போர்க் கப்பல்களாயிருந்து அவைகளுடன் போர்புரிந்து ஜயமடைந்தால் வெகுநேர்மைதான். எத்தகைய யுத்தாயுதங்களும் இல்லாத வியாபாரக்கப்பல்களைப் பிடிப்

பதனல் என்னவந்துவிட்டது? வியாபாரந்தானே நஷ்டம்! ஆனாலும் இவ்வித வியாபாரக்கப்பல்களைப் பிடித்து அவைகளைக் கடலிலமிழ்த்திவிட்டால் ப்ரிடிஷ் ப்ரஜைகளுக்குப் பீதியுண்டாய் தங்கள் வியாபாரத்தை விட்டுவிடுவார்கள் என்றும் இதனாலேயே ப்ரிடிஷ் வியாபாரம் வேரற்றுப் போகும் என்றும் நினைத்தனர் போலும்! இதற்கெல்லாம் அஞ்சுபவரா ப்ரிடிஷ் நாட்டார்? தங்கள் வியாபாரத்திற்கு வேண்டிய ஸகல ஏற்பாடுகளையும் முன்னினும் சீராகச்செய்வதும் தவிர இந்தக் கொசுக்களையும் நசுக்கிவிடமுயன்றிருக்கின்றனர். மசகங்களின் கடி வெகு கடுமையாயிருப்பினும் கடித்த சிறிது நேரத்திற்கெல்லாம் அவைகள் நசுக்கப்படுகின்றனவென்பது போல் வியாபாரம் வீணாய் அழிந்த போதினும் அவைகள் ஒவ்வொன்றாய்ப் பிடிக்கப்பட்டு வருகின்றன. அவைகளும் ஸமுத்திர ராஜனுக்கு அர்ப்பணம் செய்யப்படுகின்றன. இந்த ஜெர்மன் க்ரூய்ஸர்களுக்கும் இவைகளைத் துரத்திப் பிடிப்பதற்கென்று சென்றுள்ள ப்ரிடிஷ் படைகளுக்கும் தென் அட்லாண்டிக் மஹாஸமுத்திரத்தில் தென் அமெரிகாவின் தென்கிழக்குக் கோடியின் புறம்பேயுள்ள ப்ரிடிஷ் ஆதீனமான பாக்லெண்ட் தீவுகளுக்கருகாமையில் கடும்போர் நடந்து ஜெர்மன் கப்பல்களில் சில பிடிபட்டுக் கடலில் அமிழ்த்தப்பட்டன. அடுத்த நாள் மற்றொன்றும் அமிழ்த்தப்பட்டது. கடலில் தாராளமாய் ஸ்வேச்சையாக விடப்பட்ட பகைப்போர்க்கப்பல்கள் வெகுசில. அவைகளையும் பிடிக்கமுயன்றுதான் வருகிறார்கள். தென் அமெரிகாவுக்கு மேற்கே சிலி

தேசத்தின் கரைக்கருகாமையில் ஜெர்மன் கப்பல்களுக்கும் ப்ரிடிஷ் கப்பல்களுக்கும் மிகவும் கொடிய யுத்தம் நேரிட்டு இருதிறத்தாருக்கும்மிகுந்த நஷ்டங்கள் உண்டாயின.

எல்லாவற்றிலும் வெகு விநோதமானதும், மிகுந்த துணிகரச் செயல்களைச் செய்ய விரும்பி அப்படியே செய்து முடித்த எம்டன்போன்ற கப்பல்களின் நடவடிக்கைகள் ஜெர்மனியின் அந்தரங்க எண்ணங்களையும் அவைகளை முடிப்பதற்கு அவர்கள் செய்துள்ள ஏற்பாடுகளையும் எடுத்து விளக்கமாய்க்காட்டுகின்றன. மற்றவை விஷயத்தில் நம் நாட்டாருக்கு ஒன்றும் தெரியாத தேனும் எம்டன் நம் நாட்டருகில் செய்த சேஷ்டைகள் தெரிந்திருக்கலாம். வங்காள விரிகுடாவில் எப்பொழுதும்போல் பிரயாணிக்கப்பல்களும் வியாபாரக்கப்பல்களும் போவதும் வருவதுமா யிருக்கின்றன. ரங்கூனுக்குப்போகும் கப்பல்கள்—சிங்கப்பூர் போகும் கப்பல்கள்—எல்லாம் வெகு அமைதியாகவேயிருக்கின்றன. திடீரென சில வியாபாரக்கப்பல்கள் — இங்கிலீஷ் வியாபாரக்கப்பல்கள் — ஏதோ வேறொருகப்பலால்—யுத்த கப்பலால் நிறுத்தப்பட்டுள்ளன. அவைகளிலுள்ள ஸாமான்களில் முக்யமானவைகள்மாத்திரம்—அதிலும் தங்களுக்கு அவசியம் வேண்டிய நிலக்கரி—தனக்குஸஹாவாய் ஏற்படுத்தப்பட்டுள்ள மற்றொரு கப்பலில் இறக்கப்படுகின்றது. பகைவரது ஆட்களையே தமக்கு வேலை செய்யச் சொல்லுகின்றனர். எல்லாம் இறக்கியாய் விட்டது. இனி இக்கப்பல்களின் ஆபீஸர்களை என்ன செய்கி

றது. நல்ல காலம் அதோ மற்றொரு கப்பல்—ஒரு நார்வே தேசத்துக் கப்பல் — வருகின்றது! அதில் ஏற்றப் படுகிறார்கள். அவர்கள் செய்த வேலைக்கும் கூலி கொடுக்கப்படுகின்றது! ஆ! இதென்ன விந்தை! இவர்களை ரங்கூனில் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டுமாம்! இவர்களுக்காக வேண்டிய சார்ஜுக்கும் ஏற்பாடு செய்கிறார்களே! இப்பொழுது இக்கப்பல்களை என்ன செய்கிறார்கள்! குண்டுகள்போட்டுக் கடலில் அமிழ்த்துகிறார்களா? ஆம்! ஆம்! ஆனால் இவர்களுக்கு நன்றாய் சுடத்தெரியவேயில்லை. கிடக்கட்டும்! இப்பொழுது அவ்விடத்தைவிட்டு வேகமாய் தெற்கு, தென்மேற்கு மூலையாய்வருகின்ற இவ்விநோதமான கப்பலுக்கு—என்ன, எல்லா விஷயங்களும் தெரியும்போலிருக்கிறது! எப்படியோ ஏமாற்றுகிறார்கள்! சென்னையில் இரவு மணி ஸுமார் ஒன்பதேகாலுக்கு சில குண்டுகளை வீசியெறிகிறார்கள்! ஆஹா, என்ன பயங்கரமான காட்சி! வெளிச்சத்தைப் பாருங்கள்! என்ன? மண்ணெண்ணெய்க் குளங்களா தீப்பிடித்துவிட்டன? சென்னையில் உண்டான அல்லோலகல்லோலத்திற்கு அளவுமுண்டோ? இப்படி அமளி செய்துவிட்டு இக்கப்பல் தெற்கே வெகு வேகமாய்ப் போகின்றது! மறுநாள் காலையில் புதுச்சேரிக்கருகில் தென்படுகிறது. பிறகு போன இடம் தெரியவில்லை. இன்னம் சிலநாட்களுக்குள் முன்மாதிரியே சில கப்பல்களைப்பிடித்து மினிகாய் என்னும் தீவுகளுக்கருகில் அமிழ்த்திவிட்டதாகத் தெரியவருகிறது. எப்பொழுதும் வெகு மரியாதையுடனும் கண்ணியத்துடனும் கம்பீரத்துடனும் நடந்துகொண்டார்கள் எம்

டனின் ஆபீஸர்கள் என்று சொல்லுகிறார்கள். பிறகு மறுபடியும் அது செய்யும் வேடிக்கைகளில் ஒன்றை மாத்திரம் சொல்லி முடிப்போம். மினிகாய்த் தீவுக ளுக்கருகில் அது செய்த நடவடிக்கைகளுக்குப்பின் ஒன்றும் தெரியவில்லை. ஆனால் சில தினங்களுக்குப் பிறகு பினுங்கு துறைமுகத்திலிருந்த இரண்டு போர்க் கப்பல்களுக்கருகில் ரஷியக்கொடியை பறக்கவிட்டுக் கொண்டு வேகமாய் நெருங்கி எதிர்த்ததாம். இரண்டு முறை டார்பீடோக்களைச் செலுத்தி அவைகளைத்தாக் கவும் அவைகள் இதன்மீது குண்டுகளை எய்து தாக்கின. ஆனாலும் அவைகள் கடலில் அமிழ்ந்துபோயின. பிறகு அப்படியே கிழக்கிந்தியதீவுகளில் ஒருசிறு கூட்ட மாகிய கோகோஸ் என்பவைகளில் இருக்கும் தந்திக் கம்பிகளை இது அறுக்கப் பிரயத்தனஞ் செய்தபோது ஆஸ்ட்ரேலிய போர்க்கப்பலாகிய ஸிட்னியால் எதிர்க் கப்பட்டு கரையில் உடைபட்டுவிடவும் தீயிடப்பட்டது. சிலகாலம் இந்தியகடல்களில் பெரும்பயத்தை விளைத்து வந்த இச்சிறிய க்ரூய்ஸரின் காலம் முடிந்துவிட்டது. வியாபாரிகளும் மகிழ்ச்சியடைந்தனர். மற்ற கடற்போர் அவ்வளவு பிரதானமற்றவை எனக்கருதி அவைகளைப் பற்றிச் சொல்லாது விடுத்தோம். கடலில் நடக்கும் கடும்போர் இத்தன்மையது என்று விவரமாய் அறிய வேண்டுமாயின் 'விவேக போதினி'யில் காணலாம்.



## பன்னிரண்டாம் அதிகாரம்

### இந்தியாவும் யுத்தமும்

ஐரோப்பாவில் ஆஸ்ட்ரியாவுக்கும் ஸெர்வியாவுக்கும் யுத்தம் ஆரம்பித்திருக்கும்பொழுதே உலகத்திலுள்ள மற்றநாடுகளெல்லாம் இது சீக்கிரத்தில் முடியுமோவென்று ஸந்தேகப்பட்டுக்கொண்டிருந்தன. பிறகு வ்யவஹாரங்கள் முற்றிவிடவும், இது பெரும்போராகவே முடியுமென்பது வெளியாயிற்று. ப்ரிடிஷ் ராஜ்யத்தைச் சேர்ந்த நாடுகளெல்லாம் ப்ரிடன் இந்த ஸமயத்தில் எந்த நடவடிக்கையை மேற்கொள்ளும் என்று வெகு ஆவலுடன் பார்த்திருந்தன. தங்கள் உடன்படிக்கையையும் ஸத்தியத்தையும் கண்ணியத்தையும் காப்பதினிமித்தமும், எளியோரை வலியோர் வருத்தாமல் தடுப்பதினிமித்தமும் க்ரேட் ப்ரிடன் ஜெர்மனியுடன் யுத்தத்திற்குக் கிளம்பிவிட்டது என்ற செய்தி எங்கும் பரவவும் இங்கிலாந்தின் நடத்தையைப் புகழ்ந்து எல்லா ப்ரிடிஷ் நாடுகளும் மகிழ்வடைந்தன. க்ரேட் ப்ரிடனுக்குரிய குடியேற்ற நாடுகளும், இந்தியாபோன்ற அவர்கள் ஆதீனத்திலுள்ள மற்ற தேசங்களும் ப்ரிடன் மேற்கொண்டவழியைப் புகழ்ந்து பேசி தம் தாய்நாட்டிற்கு வேண்டிய பொருள்களைத் தயாரித்துவருவதாக வாக்களித்தன. பொன்விளையும் பூமியாகிய ஆஸ்ட்ரேலியாவிலிருந்து யுத்தத்திற்கு வேண்டிய மனிதர்களும் குதிரைகளும் தருவதாகவும், தம்முடைய கப்பற்படைகள் தாய்நாட்டின் ஸேவைக்காகவே உள்ளன என்றும், இங்கிலாந்திற்குவேண்டிய

உணவுப் பொருள்களாக தான்யங்களும் மற்றும் கால் நடைகளும் அனுப்புவதாகவும் வாக்களிக்கப்பட்டது. மேற்கே, கனடாவிலிருந்தும், ந்யூபௌண்ட்லாண்டி லிருந்தும், தென் ஆப்ரிக்கா, ந்யு ஸீலண்ட் நாடுகளிலி ருந்தும் ஏராளமான ஸைன்யங்களும், யுத்தத்திற்கு வேண்டிய ஸாமக்ரியைகளும், மற்றும் முக்யமாய் இங் கிலாந்திற்கு வேண்டிய ஆகாராதிகளுக்குத் தேவை யான தான்யாதிகளும் சேர்ப்பதாய்ச் செய்தி வந்தது. இத்தகைய அன்பைத் தாய்நாட்டினிடம் இதுவரை எந்நாடும் செலுத்தினதாகத் தெரியவில்லை. அந்தந்த நாடுகள் அனுப்புவதற்கென்று உத்தேசித்தவைகளுக்கு அதிகமாகவே உதவி யாதொரு தூண்டுதலுமில்லாமல் வந்தது. இங்கிலாந்துக்கு நேர்ந்த கஷ்டநஷ்டங்கள் தமக்கே நேர்ந்தவையெனக் கருதி எல்லாம் ஒரே மனத்தனவாய் ஏக காலத்தில் வந்துதவினது எக்காலத் தும் மறக்கக்கூடியதன்று. 1914-ம் வருஷம் ஸெப்டம் பர் 4௳ கில்ட்ஹாலில் இங்கிலிஷ் ப்ரதம மந்திரியா கிய மிஸ்டர் ஆஸ்க்வித் இந்தியரின் ராஜவிச்வாஸத் தைப்பற்றி பின் வருமாறு சொல்லியிருக்கிறார்:—" நம் முடைய ஸஹோதரத்வத்தை உறுதிப்படுத்தவும் நம் வ்யவஹாரங்களைத் தமதாகவே செய்துகொள்ளவும் அவர்கள் கொண்ட தீர்மானத்தை, இதுவரையில் எப் பொழுதும் சரித்திரத்தில் இதற்கு நிகரில்லையென்று சொல்லத்தக்க ஸ்வயேச்சையுடனும் ஒருமைப்பாடுட னும் நம் ஸ்வராஜ்ய நாடுகள் காட்டியிருக்கின்றன. பணம், பொருள்—ஏன், இவைகள் எல்லாவற்றிலும் மேலான—தமது முதல்தரமான ஆண்பிள்ளைகளின்

வன்மை, தேகம், அதிர்ஷ்டம், அவர்கள் உயிர் இவை களையே அர்ப்பணம் செய்வது தங்களுக்குக் கடமை யல்ல—இது தான் தங்கள் உரிமை, பாத்யதையையும் தங்கள் இஷ்டத்தையும் பொறுத்ததுமானதென்று கானடா, ஆஸ்ட்ரேலியா ந்யூ ஸீலண்ட், தென் ஆப் ரிக்கா, ந்யூபௌண்ட்லண்ட், ஆகிய இடங்களிலிருந்து ராஜ்யத்தின் மக்கள் ஸாதிக்கிறார்கள்.'' இப்படி ப்ரிடிஷ் ராஜ்யத்தின் எல்லா பாகங்களிலிருந்தும் தாய் நாட்டுக் குப் பலவகையான உதவி வந்துகொண்டிருந்தனவாம். இதோ இவர்கள் கானடா நாட்டு காலாட்படைகள். இவர்கள் மிகவும் குளிர்ந்த தேசத்திலிருந்து வாழ்வதி ணுலும் மற்று மிகவும் உழைப்பாளிகளாதலினுலும் இவர்களில் ஒருவனே ஜெர்மானியர் மூவருக்கு பதில் சொல்வான்! இவன் ஆஸ்ட்ரேலியா தேசத்திலிருந்து வந்தவன்; குதிரைப் படையில் மிகத் தேர்ச்சி யடைந் தவன்! இவன் ந்யூ ஸீலண்டிலிருந்து வருபவன். படைக்கலங்களில் பயிற்சி யடைந்தவன். இதோ இவர் கள் தாய்நாட்டிற்குவேண்டிய தான்யங்களைக் கப்பலில் ஏற்றுகிறார்கள்! இவர்கள் குதிரைகளை ஏற்றுகிறார்கள்! என்று ஒவ்வொருவருடைய முயற்சியையும் உத்ஸா ஹத்தையும்பற்றிச் சொல்வோமாணுல் அது வளர்ந்து கொண்டே வரும்.

இவைகள் இவ்வளவு உத்ஸாகத்துடன் க்ரேட் ப்ரிடனுக்கு உதவி செய்வதில் முனைந்திருக்க, ப்ரிடிஷ் ராஜ்ய மணிமுடியின் ஒளி மணியாயுள்ள இந்தியா மாத்திரம் இவைகளுக்குப் பின்னிற்குமோ? ராஜபக் தியே பிறந்து வளர்தற்கிடமாய் சரித்திரத்தாலு மறிய

வொண்ணுக் காலந்தொடங்கி வீரச்செயல்களினும் தர்மம், ஸத்யம் இவைகளைக் காத்து துஷ்டநிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் செய்து தேசாபிமானத்துடன் விளங்கியுள்ள இந்தியாமாத்திரம் இத்தகைய போரைப் பார்த்துக்கொண்டு சும்மா யிருக்குமோ? சக்ரவர்த்தியாருடைய ஆளுகைக்குட்பட்டதல்லவா? ப்ரிடிஷ் ஆளுகையின்கீழ் தானனுபவித்திருக்கும் நன்மைகளையும் மறக்கக்கூடுமோ? தவிர, இந்த யுத்தம் தர்மத்தின்பொருட்டும், ஸத்யத்தின்பொருட்டுமே நடக்கப்போகின்றதல்லவா? ஆம், ஆம்! இந்தியாவிலிருந்து அந்தப் புராதன தர்மங்கள் இன்னம் கழிந்துபோகாமல் சிறிது மங்கியிருந்தவை இப்பொழுது பளிச்சென்று கொழுந்துவிட்டு ஜ்வலிக்கின்றன.

இங்கிலாந்துக்கும் ஜெர்மனிக்கும் யுத்தம் தொடங்கிவிட்டதென்று இந்தியாவிற்கு ஸமாசார மெட்டியதும் ஆங்காங்கு பெரிய நகரங்களிலும் ராஜதானிகளிலும் இந்தியர்கள் ஸபைகள்கூட்டி தமது ராஜபக்தியைத் தெரிவித்ததுமன்றி தாம் க்ரேட் ப்ரிடனுக்கு எந்த விதமான உதவிவேண்டுமானாலும் செய்வதாகவும் தெரிவித்தனர். இந்திய பத்திரிகைகள் வாயிலாகவும் இவ்வித ராஜபக்தி வெளிக்காட்டப்பட்டது. இந்தியாவின் ராஜபக்தி இத்தகையது என்று இதுவரையில் வெளியில் காட்டாமலிருக்கவேண்டியிருந்தது. ஏனெனில் அதற்கு ஏற்ற ஸந்தர்ப்பம் ஒன்றும் வாய்க்கவில்லை. ராஜவிச்வாஸத்தை என்றும் மறவாத இந்தியர்கள் ப்ரிடனுக்குதவியாகும் பொருட்டு வெளிநாடுகளுக்குப் போயிருப்பினும் இத்தகைய போரைப்

போன்ற பெரும் போருக்குச் சென்றனரில்லை. ஆகவே, அப்படி ஐரோப்பாவிற்குச் சேன்று உலகத்திலுள்ள மற்ற ப்ரிடிஷ் ராஜ்யங்களினின்றும் வரும் படைகளுடனும் ப்ரெஞ்ச் பெல்ஜியப்படைகளுடனும் கூடிக்கலந்து அவர்களுக்கு ஸஹாக்களாய்ப் போர்செய்ய நேர்ந்த ஸந்தர்ப்பத்தை விடாமல் இதையே பெரிய கௌரவமாக மதித்து தமக்கும் அப்பாத்யதை இருக்கவேண்டுமெனத் தெரிவித்தனர்.

அதற்கேற்ப நம் நாட்டின் நன்மைகளையே நாடி உழைத்து, தம்முயிர், மனைவி மக்களினும் அருமையாகவே இந்திய நாட்டைப் பாவித்துவரும் காருண்ய ப்ரதிநிதியவர்களும் இந்தியரின் ராஜவிச்வாஸத்தையும் அவர்களுடைய எண்ணங்கள் கோரிக்கைகளையும் இங்கிலாந்திற்கு அறிவித்தனர். இந்தியாவின் ஸ்வதேச அரசர்களும் யுத்தத்தைப்பற்றிக் கேள்விப்பட்டதும் இதே மாதிரியான ராஜவிச்வாஸத்தால் தூண்டப்பட்டவராய்த் தம் நாட்டின் 'வருமானம்' முதலியவைகளையெல்லாம் போரில் உபயோகப்படுத்தும்பொருட்டு ஒப்புவித்ததுமன்றி, தாமே நேரில் யுத்த களத்திற்குச் சென்று தம் ப்ராசீன கீர்த்தியை ஐரோப்பாவிலும் நாட்டும்பொருட்டு தமக்கு அந்த உரிமையைக் கொடுக்க வேண்டுமெனக் கேட்டுக்கொண்டனர். ராஜப்ரதிநிதியும் அவர்களுடைய உதவியை அங்கீகரித்து மிகவும் மனமகிழ்ந்தவராய்த் தமது அரசருக்கும் இச்சந்தோஷ ஸமாசாரத்தைத் தெரிவித்தனர். ஜார்ஜ் மன்னரும் இந்திய ராஜபக்தியை முன்னரே அறிந்துள்ளவராயினும், ஸமயத்தில் தக்க உதவிகொடுப்பதாய் முன் வந்துள்ள

இந்தியரின் செய்கைக்கும் இந்திய உள் நாட்டு அரசர்களின் நடத்தைக்கும் அவர்களை மெச்சி, "நம் ஏகாதிபத்யத்தின் ஐக்யத்தையும் கண்ணியத்தையும் காப்பாற்றும்பொருட்டு என் ப்ரஜைகள் ஒருமைப்பாடுடன் கிளம்பி முன் வந்த அநேக ஸம்பவங்களில், என்னுடைய இந்திய ப்ரஜைகளும் நம் ஆதிபத்யத்தின் கீழ் ஆட்சிபுரியும் சிற்றரசர்களும் என்னுடைய செங்கோலினிடத்தில் செலுத்திய விச்வாஸத்தையும் அவர்கள் நம் ராஜ்யத்தின் பொருட்டுத் தம் உயிரையும் ஸொத்தையும் தாராளமாய் அர்ப்பணம் செய்ததையும் தவிர வேறொன்றும் என்மனதில் பதியவில்லை. யுத்தத்தில் முன்னிருக்க வேண்டுமென்று அவர்கள் ஏகோபித்துக் கேட்டுக் கொண்டது என் ஹ்ருதயத்தில் பாய்ந்து, எனக்கு ஏற்கெனவே நன்றாய்த் தெரிந்துள்ளபடி, என்னையும் என் இந்திய ப்ரஜைகளையும் ஒன்று சேர்க்கும் அன்பும் விச்வாஸமும் அதனாலேயே, உச்சஸ்தானத்தையடையும்படி செய்துவிட்டிருக்கின்றன" என்று தம் இந்திய ப்ரதிநிதிக்குத் தெரியப்படுத்தினார்.

இவ்வண்ணம் தாம் நேராக தம் ஸைன்யங்களுடன் யுத்தத்திற்குப் போவதென்று முன் வந்தவர்கள் இந்தியாவின் சிற்றரசு பேரரசுகள் எல்லாரும், மற்ற கனதனவான்களும். ஸ்வதேச நாடுகளை ஆண்டுவரும் தலைவர்களோ எழுநூறுக்கு மேற்பட்டிருக்கின்றனரென்றால் மொத்தத் தலைவர்களின் எண்ணிக்கையையும் கூறவேண்டுமோ? ப்ரஜைகளில் அநேகர் தங்களை யுத்தத்திற்கு வாலண்டியர்களாக சேர்த்துக் கொள்ள வேண்டுமென்றும், வேறு சிலர் இந்தியப்படைகள்

## இந்தியாவும் யுத்தமும்

ஐரோப்பாவுக்குப் போகவேண்டியதாகையால் இந்தியாவின் பாதுகாப்பைத் தாமே பார்த்துக்கொள்ளும் பொருட்டு அதற்குத் தங்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்றும் கூறினார்கள். இங்கிலாந்திலுள்ள இந்தியரும் இந்திய மாணவர்களும் தாமும் யுத்தத்திற்கு வந்து சேருவதாகவும் தங்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்கள். இந்தியப்படைகளை ஐரோப்பாவுக்குக் கொண்டுபோக வேண்டியது அவசியமென்பது தவிர, தங்களுக்கும் அவ்விதமான ஒரு கௌரவத்தைத் தரவேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். ஆப்பிரிக்காவிலிருந்து அல்ஜீரியத் துருப்புகள் ப்ரான்ஸுக்கு உதவியாய்க் கொண்டுவரப் படவில்லையா? அதேமாதிரி ஏன் தாங்களும் போகப் படாது என்று கூறினார்கள். குறு நிலமன்னரும் பாமர ஜனங்களும், இந்தியரும் ஆங்கிலேயரும், ஹிந்துவும் முஹம்மதியனும், ஒவ்வொருவரும் ஜாதிமதபேதமின்றி ஏகோபித்து ப்ரிடிஷ் படையில் சேர்ந்து போர் புரிவதில் நான்முன்னே நீ முன்னே என்று முந்தினார்கள். கடைசியில் இந்திய சைன்யங்கள் இரண்டு, யுத்தத்திற்கு அனுப்பப்படுமென்றும் அதனுடன் செல்லும் இம்பீரியல் ஸர்விஸ் ட்ரூப்ஸ் எனச் சொல்லப்படும் ராணுவங்களும் (இவைகள் இந்திய ஸ்வேதச அரசர்களால் ஏகாதிபத்யத்தின் ஸேவைக்கெனவே வைக்கப்பட்டுள்ளவை) அவைகளுடன் சில இந்தியத் தலைவர்களும் செல்வார்கள் என்றும் அறிவிக்கப்பட்டது. இந்தியாவில் மிக்கத் தேர்ச்சியுள்ள ராணுவங்கள்தாம் தேர்ந்தெடுக்கப்பட்டன. அவைகளில் முக்யமானவை ஸிக்,

படான், கூர்க்கா இவைகளே. இவைகள் மூன்றும் இந்தியாவின் கீர்த்தியை எக்காலத்திலும் அழியாமல் காத்து வந்தவைகள். ஸீக்கியர் முதலில் போர்த் தொழிலென்பதையே யறியாதவராயிருந்து மத விஷயங்களில் சீர்திருத்தம் செய்த நானக், குரு கோவிந்த் முதலிய பத்து ஆசார்யர்களின் சிஷ்யர்களாய்ப் பயிரிடுங்குடிகளா யுள்ளவர்கள் பதினேழாம் நூற்றாண்டினிறுதிக் காலந்தொட்டு அரங்கஸீப் முதலிய மொகலாய சக்ரவர்த்திகளால் மிகக் கொடூரமாய் நடத்தப்படவே அக்கொடுமையினின்றும் தம்மைக் காப்பாற்றிக் கொள்ளுநிமித்தம் படைத்தொழிலை மேற்கொண்டு அதையே தம் விரதமாகக்கொண்டனர். பிறகு அநேக கஷ்டங்களினின்றும் தப்பி, சிறந்த வீரர்களாய்விளங்கி, பின்னால் லாஹூர் ஸிம்ஹமெனப் பெயர்பெற்ற ரஞ்ஜீத்ஸிங்கின் ஆளுகையை அங்கீகரித்து மிகவும் வீரத்துடனும் செல்வாக்குடனும் வாழ்ந்து வந்தார்கள். பிறகுதான் இவர்கள் ஆங்கிலேயருடன் போர்புரிந்து தங்கள் தீரத்தை அனேக யுத்தங்களில் காட்டியபிறகு ஆங்கிலநண்பராய் அடங்கிவிட்டனர். அதுமுதற்கொண்டு இவர்கள் இங்கிலீஷ்படைகளில் சேர்த்துக்கொள்ளப்பட்டு ஆங்கிலப் படையின் அணியாய் விளங்குகின்றனர். பட்டாணி ஜாதியாரும் இதேமாதிரி அனேக முறை ஆங்கிலேயருடன் எதிர்த்துப்போர்புரிந்து கடைசியில் இங்கிலிஷ் படையில் சேர்ந்துள்ளார். இவர்கள் தைர்யத்தையும் பலத்தையுங்கண்டு ஆச்சரியப்படாதவர்கள் கிடையாது. கூர்க்கா ஜாதியார் இவர்களெல்லாரினும் ஒருவிதத்தில் சிறந்தவரெனவே சொல்லவேண்

டும். இவர்கள்உயரத்தில்ஐந்தடிக்குமேலில்லை. இவர்கள் ஹிமாசலத்தின் தென் சரிவுகளிலுள்ள நேபாளத்தில் இருக்கும் வீரர்கள். இவர்கள் ஆதியில் ராஜபுதனத்திலிருந்ததாகவும் பிறகு இந்தியாவின்மீது முஹம்மதியர் படையெடுத்துவந்தபோது நேபாளம் சென்று குடியேறினவர்களாகவும் தெரியவருகிறது. அங்கே தம் ராஜ்யத்தைஸ்தாபித்துவெகுஜயசாலிகளாக ஆண்டுவந்தார்கள். இவர்களுக்கும் இங்கிலீஷ்காரருக்கும் ஒரு முறை கொடிய யுத்தம் நேர்ந்துவிட, மஹா தைர்யமாய்ப் போர்புரிந்தார்கள். பிறகு இருதிறத்தாருக்கும் ஸமாதானமேற்படவும், கூர்க்க ஜாதியார் அனேகர் இந்திய இங்கிலிஷ் ஸைன்யத்தில் சேர்ந்து இங்கிலாந்தின் பெருமையை அனேக யுத்தங்களில் காத்துள்ளனர். இத்தகைய சிறந்த ஸைன்யங்கள்தாம் ஜெர்மானியரை எதிர்க்கும்படி புறப்பட்டன. இவர்களுடன் சென்ற அரசர்களின் ப்ரதாபங்கள் உலகமே வியக்கக் கூடியன. இவர்கள் யாவரெனில் இந்தியாவில் அனேக தலைமுறைகளாய்க் கீர்த்திபெற்றுள்ள ஜோட்பூர், பிக்கானேர், கிஷன்கார், ரட்லாம், பாடியாலா முதலியநாட்டரசர்களும் இன்னும் அனேக வீரர்களும்தாம். ஆதிமுதற்கொண்டு ஜோட்பூர்ஸமஸ்தானம் ராஜபக்தியிலும் தேசாபிமானத்திலும் சிறந்து விளங்கிவருகின்றது. இந்த ராஜபுத்திரவீரர்கள் எதிரிகளுக்குச் சற்றேனும் பின்வாங்காது, தம் உயிரினும் தம் கீர்த்தியும் அதற்குக் காரணமானவீரச்செயல்களுமேப்ரதானமெனக்கொண்டுள்ளவர்கள். மிகவும் கீர்த்திபெற்றுள்ள மொகலாய சக்ரவர்த்தியாகிய ஆக்பர் பல தடவைகளில் இவர்களைப்

போரில் வெல்லமுடியாமல் கடைசியில் தம் பெருந் தன்மையாலும் வீரத்தினுலுமே நேசம்செய்துகொண் டார். இவர்கள்தாம் மொகல் ராஜ்யத்தைக் கடைசி வரையில் பாதுகாத்து, அரங்கஸீப் இவர்களை ஸரி யாய் நடத்தாமல் போய்விட்டபோதிலும், அவரிடத் தில் பல தடவை அனேக தொந்தரைகளை அனுப வித்தபோதிலும், சக்ரவர்த்திக்குச் சிறிதேனும் த்ரோ ஹம் நினையாது மிகவும் விச்வாஸத்துட னிருந்தனர். "தம் படுக்கையில் ஒரு தலைவனுவது இறவாத இந்த யுத்தகால முழுவதிலும் ராடோர் (ஜோட்பூர் ராஜவம்ச) குணத்தில் மேலாகக் காணப்பட்ட தளராத பக்தியை இன்னும் எந்த ஜாதியாரது சரித்திரத்தைத் தேடினு லும் காண்பதரிது. அப்படித் தேடுவதும் வீணுய்த் தான் முடியும். இந்திய வீரருக்கு தேசாபிமானமில்லை யென்று நினைக்கிறவர்கள் இம்முப்பது வருஷச் சண் டையின் சரித்திரத்தைப்படித்து வேறெந்த தேசத் தின் சரித்திரத்துடனுவது ஒப்பிட்டுப்பார்த்து பெருந் தன்மையுள்ள ராஜபுத்ரனிடத்தில் நியாயமாய் நடந்து கொள்ளட்டும். தேசாபிமானம், ஸ்வயநயமில்லா ராஜ பக்தி இவைகள் இடைவிடாமல் இருப்பதை இச்சரித் திரங்கள் தெரிவிக்கின்றன. ராஜபுத்ரரது கீர்த்திக் குள் அடங்குபவை யெல்லாவற்றிற்கும் சிறந்த உதா ரணமாய் இருக்கின்றனன் வீரனுகிய துர்க்கதாஸ். அவ னைப்பற்றியும் அவன் பேரைப்பற்றியும் இப்பொழுதும் உள்ள வியப்பிற்குக் காரணம் அவனிடத்தில் உள்ள சௌர்யம், ராஜபக்தி, கண்ணியம், இவைகளுடன் கூடி கஷ்டகாலத்திற்குத் தகுந்தபடி நடந்துகொள்ளக்கூடிய



ஹாலண்டிலுள்ள ஹேக் என்னும் நகரத்தில்
ஸமாதான ஸங்கம் கூடுமிடம்





யுத்தமுனைக்குச் செல்லும் வீரர்களை ராஜகுடும்பத்தார் பார்வையிடுதல்



டார்பீடோவைச் செலுத்தல்

சாதுர்யம் ஆகிய இவைகள்தாம். ராஜபுத்ராருக்கு மிக ப்ரியமுள்ள பழிக்குப்பழி வாங்கலும்கூட அவன் உண்மைக் கௌரவ எண்ணங்களைத் திருப்பவில்லை. யுத்தத்தில் தன்னுடைய எதிரி தன் கையில் சிக்குண்ட போதிலும், தன்னுடையாகைவரால் தன்ஸஹோதரன் கொடுங்கொலை செய்யப்பட்டபோதிலும், அவன் ஜீவ காருண்யத்தில் யாதொரு மாறுதலும் ஏற்படவில்லை. ''

இம்மாதிரியே இந்த வம்சத்தில் ராஜபக்தியும் தேசாபிமானமும் ஒருங்கு சேர்ந்து, தேசாபிமானத்திற்குத் தேசாபிமானத்தைக் காட்டி, தம்நாடு க்ஷேமாபிவிருத்தியடைவதையே மனதிற் கொண்டிருப்பதுடன் தம்மரசனுக்குக் காண்பிக்கவேண்டிய பக்திக்கும் சிறிதேனும் பழுதுவராமல் பார்த்து வந்தனர். ரணகளத்தினின்று ஓரடியும் பெயர்த்துவைக்காமல் தம் உயிர்நீங்கும்வரை போர்செய்து மிருக்கின்றனர். இன்னொருபோரில் ஆறு ராஜபுத்ர ஸஹோதரர்களிருந்து போர்புரிந்து, ஒருவரின்பின் ஒருவராய் ஐந்துபேர் போர்க்களத்தில் இறந்துவிடவும், ஒருவர் மாத்திரம் மிருந்தனராம்! இப்படிப்பட்டவர்களது வம்சத்தில் தோன்றினவர்களே இப்போருக்குப் போயிருக்கிறார்கள். ஜோட்பூர் மஹாராஜா தம் வம்சத்தின் கௌரவத்தை ஐரோப்பாவிலும் நிலைநிறுத்தச் சென்றிருக்கிறார். இவர் தவிர இவரோடு சென்ற பிக்கானேர், கிஷன்கார் முதலிய ஸமஸ்தானாதிபதிகள் இந்த வம்சத்தையே சேர்ந்த மற்றக் கிளைகளாவர். ஜோட்பூர் அரசருக்கு வயது பதினாறேயினும் அவர் போர் முனைக்குச் சென்றிருத்தல் இங்கிலாந்திலும்

இந்தியாவிலும் வியப்பை விளைத்திருக்கிறது. அதைப் போலவே, ஜோட்பூர் ராஜப்ரதிநிதி (ரீஜண்ட்) ஆகிய ஸர் ப்ரதாப் ஸிங் அவர்களுக்கு வயது எழுபதாயிருப் பினும் தம்மரசனுக்கு ஸேவைசெய்யும் உரிமையைத் தள்ளிவிடுதல் கூடாது என்று கேட்டனராம். இப் படிக் கீர்த்திபெற்ற மஹாவீரர்களை போருக்குப் போயிருக்க இங்கிலீஷ் கவர்ன்மெண்டார் எடுத்தகாரி யம் ஜயமாகாமற்போகுமா? ஜெர்மானியர் இந்தியா வின் உண்மை நிலைமையறியாமல், இப்படிப்பட்ட பெரும்போரில் க்ரேட் ப்ரிடன் அகப்பட்டுத் தத்தளிக் கும்போது இந்தியா ப்ரிடிஷாருக்கு விரோதமாய்க் கிளம்பும் என ஆனந்தங்கொண்டிருந்தனராம். ஆனல் இந்தியத் துருப்புகள் தங்களை எதிர்க்கவருகின்றது எனக் கேள்விப்பட்டு ரொம்பவும் பீதியடைந்தார் கள் எனவும் சொல்லப்படுகிறது. இந்த யுத்தத்திற்கு இந்தியாவிலிருந்து நேரேபோகமுடியாத சில அரசர் களும் கனவான்களும் தம் விச்வாஸத்தைக்காட்டித் தமது ராணுவங்களையும் தம் நாட்டின் பொருள்களை யும் உதவினதும் தவிர, யுத்தத்தில் பலவிதமாய் ஏற் படும் செலவுகளுக்கு வேண்டிய பண உதவியும் செய் தார்கள். இதனடுவே ஆங்காங்கு போர் ஸம்பந்தமாக உண்டாகும் அனேக செலவுகளுக்காக—போருக்குப் போவோருடைய குடும்ப ஸம்ரக்ஷணை, போர்வீரர் களின் உடை, ஆயுத முஸ்தீப்புகள், அவர்கள் இறந்து போனலோ அல்லது காயப்பட்டாலோ அவர்கள் குடும் பங்களுக்கும் வேண்டிய செலவுகள் முதலிய ஸகல மான செலவுகளுக்கும்—பண்டுகள் ஏற்பட்டன. ப்ரி

ன்ஸ் ஆவ் உ"வெல்ஸ் பண்டு, இம்பீரியல் ரேலீப் பண்டு, மதராஸ் சண்டை பண்டு என்னும் பல ஸங்கங்கள் சண்டையின்நிமித்தம் ஏற்பட்டன. இவைகளுக்கெல்லாம் தாராளமாய் எல்லா அரசர்களும் பணம் கொடுத்தது மன்றி, இத்தகைய பண்டுகளைத் தம் நாட்டிலும் ஸ்தாபித்து பணம் சேகரிக்கலாயினர். சிறிய ராஜ்யங்களாயிருப்பினும், பெரியவைகளாயிருப்பினும் தம்மால் கூடியவரையில் உதவி புரிய முன் வந்தது மிகவும் சிலாகிக்கத்தக்கது. மைஸூர் மஹாராஜா அவர்கள் 50-லக்ஷம் ரூபாய் கொடுத்தனர். சில ராஜாக்கள் தம் ராஜ்யத்தில் உண்டாகின்ற தான்யங்களைக் கொடுத்தனர். பிக்கானேர் மஹாராஜா, தாமே நேரில் யுத்தத்திற்கு வந்ததுமன்றி தம் ஒட்டகப்படைகளையும் இந்திய கவர்ன்மெண்ட் வசம் ஒப்புவித்தார். அதேமாதிரியே பஞ்சாப், பெலுசிஸ்தானம் இவைகளிலுள்ள இந்தியத் தலைவர்கள் தம் ராணுவங்களை ஒப்புவித்தார்கள். ரீவா மஹாராஜா தம் துருப்புகள், தம் வரும்படி முதலியவைகளைக் கொடுத்ததுமல்லாமல் தமது சொந்த நகைகளையும் கொடுத்துப் பணமாக்கி உபயோகப்படுத்திக் கொள்ளலாமென்று சொல்லியுள்ளார். இது தவிர காஷ்மீர் மஹாராஜா ஏராளமான பணம் கொடுத்ததுமன்றி தம் பிரஜைகளுக்கும் இந்த யுத்தத்தைப் பற்றியும் இந்திய உதவியைப் பற்றியும் விஸ்தாரமாய் எடுத்துக்கூறி அவர்களுடைய உதவியையும் தமதுடன் சேர்த்தனுப்பியுள்ளார். இவர்தவிர இங்கிலீஷ் ராஜ்யத்தினின்றும் தனியேயுள்ள நேபாள ராஜ்யமும் கூர்க்கா ஸைன்யங்களுக்கு வேண்டிய ஸாமக்ரி

யைகளைத் தருவதாகத் தெரிவித்தது. ஸைன்யங்களில் காயப்பட்டவர்களுக்குச் சிகித்ஸை செய்வதற்கு உபயோகமாயிருக்கும்படி (க்வாலியர், இண்தூர் முதலிய மஹாராஜாக்களின் இஷ்டப்பிரகாரம்) ஒரு கப்பல் தயார்செய்து கொடுப்பதாகச் சொன்னார்கள். அப்படியே ஏராளமான பணம் வசூல் செய்யப்பட்டு 'லாயல்டி' (ராஜபக்தி) என்னும் கப்பல் தயாரித்து, பம்பாயிலிருந்து அனுப்பப்பட்டது. அவர்கள்போலவே மற்ற ராஜதானிகளிலும் பிரபுக்களும், பாமரர்களும், ஆண்பெண் இருபாலாரும், பள்ளிக்கூடமாணவர்களும், தொழிற்சாலை வேலையாட்களும் பெரும்போருக்குச் செல்லும் தம் நாட்டாருக்கு எவ்விதத்திலேனும் உதவ வேண்டுமென்று தம்மாலானவைகளைச் செய்துவருகிறார்கள். இப்போருக்குத் தாமே சென்று போர்புரிய வேண்டுமென்று ஒருபக்கமும், ஜீவகாருண்யத்தையே மேற்கொண்டு போரில் காயமடைந்தவர்களுக்கு உதவிபுரியவேண்டுமென்று மற்றொருபக்கமும், ப்ரிடிஷ் ப்ரஜை என்ற ஸ்வதந்திரத்தைத் தானுமனுபவிக்கிறவன் என்றதைக் காட்டவேண்டுமென்கிற ஆவல் இன்னொருபக்கமும் தூண்ட, இந்தியாவிலுள்ள ஒவ்வொருவரும் எவ்விதத்திலாயினும் இந்த ஸமயத்திற்கேற்ப நடக்கவேண்டுமென்று எண்ணினார்கள். இவர்களுடைய வேண்டுகோளையும் உதவியையும் கவர்ன்மெண்டாரும் அங்கீகரித்து அவைகளைத்தகுந்த ஒழுங்குடன் செய்வதற்கு ஏற்பாடும் செய்யலானார்கள். நம் ராஜதானியிலிருந்து அனேக மெடிகல் காலேஜ் மாணவர்களும் சிறந்த வைத்திய சாஸ்திரிகளும் கொண்டுள்ள

'மதராஸ்' என்னும் ஆஸ்பத்திரிக் கப்பல் ஒன்று தயாரித்து அனுப்பப்பட்டது.

இவ்வண்ணம் பலவிதமாய் இந்திய ராஜபக்திக் கிளர்ச்சி யடைந்துகொண்டிருக்கும்போது ஸுமார் 70,000 வீரர்களுக் கதிகங்கொண்ட இந்திய ராணுவம் இந்திய அரசர்களுடன் புறப்பட்டது. என்ன கோலாஹலம்! என்ன விமர்சை! இவர்களுக்கென்றே கொண்டுவரப்பட்டுள்ள கப்பல்களில் ஏற்றப்பட்டு கிரமப்படி இவர்கள் ப்ரான்ஸ்தேசம் போய்ச்சேர்ந்தார்கள். ராணுவப் பகுதிகள் சில, ஈஜிப்டு தேசத்திற்கும் சென்றன. இந்தியாவைக் காட்டிலும் ஐரோப்பாவில் வேறுவிதமான சீதோஷ்ணநிலை யுள்ளதாதலால் அதினின்றும் அவர்களைக் காக்கும்படியாகப் பலவித ஸாதகங்களும் அவர்களுக் கேற்படுத்தப்பட்டன. மத்ய தரைக்கடலில் ப்ரான்ஸின் தெற்குக்கரையில், வெகுகாலமாய் ப்ரஸித்திபடைந்திருக்கும் மார்ஸேல்ஸ் என்னும் துறைமுகத்தில் இவர்களும் வந்துசேர்ந்தனர். இவர்களை நல்வரவேற்றுபசரிக்க அந்நகரமும் மிகவும் விசேஷமாய் அலங்கரிக்கப்பட்டிருந்ததாம். இதுவரையில் இந்தியராணுவங்களை எப்பொழுதும் கண்டிராத அந்நகரவாஸிகள் மிகவும் களிப்படைந்தவராய் இவரது உடைகளையும் தோற்றத்தையும் இந்திய அரசர்களின் அழகையும் கம்பீரத்தையும் கண்டுவியந்து பூமாரிபெய்தனராம். இவர்கள் மார்ஸேல்ஸ் நகர் வீதிகளில் அணிவகுத்துப் போகும்போது ப்ரஞ்ச்நாட்டின் துணையாக இந்தியர் வந்துள்ளதைக் கண்டு ஆனந்த பாஷ்பம் சொரிந்தனராம். இவர்கள் நகருக்கு வெளியே கூடா

ரங்களில் தங்கியிருக்கும்போது தாம் கண்டகாட்சி எக்காலத்தும் காணு அற்புதக்காட்சியெனக் கூறுகின்றனர். இவர்களது கம்பீரத் தோற்றமும் நடையுடையுமே அநேகரது வியப்பை யுண்டுபண்ணிற்று. அவர்கள் நாட்டில் இந்தியப்படைகள் எக்காலத்தும் காலெடுத்து வைத்தவையல்லவே!

மற்றவர் சொல்லியென்ன! இந்திய கம்பீரமும் இந்தியரின் வீரமும், இந்தியரின் கீர்த்தி ப்ரதாபங்களும் உலக முழுவதுமே பரவி எதிரொலி செய்யும் படிக்குயுத்தரங்கத்தில் இவர்கள்செய்த ஸாஹஸச்செய்கைகள் அனந்தம். இவர்களது ஸாமர்த்தியத்தைப்பற்றி லார்ட் கர்ஸனும் புகழ்ந்துபேசினதற்கேற்ப நடந்துகொண்டார்களென்றால் நாமே அவர்களைப்பற்றி ஒன்றும் சொல்லவேண்டியதில்லை. வங்காளக் குதிரைவீரர்கள் என்னும் இந்தியப்படை, ஜெர்மானியரின் அணிவகுத்துநின்ற படைகளின்மீது மிகவும் வேகமாய்ப் பாய்ந்து ஊடுருவிச்சென்றது. அவ்விதமாய் எதிரிகளைத் தாக்குவதில் விசேஷ ஸாமர்த்தியமுடையவரென்று சொல்லப்படும் ஸ்காட்லண்ட் ஹைலாண்டர்ஸ் (ஸ்காட்லண்ட் வடபாகத்தில் வசிக்கும் மலைநாட்டுவீரர்கள்)கூடத் தாழ்ந்தவர்கள் என்று சொல்லப்படும்படியாயிருந்ததாம். நம்மிந்திய ஸேனைவீரர்கள் எதிரிகள் அருகில் நெருங்கி கைகலந்து போர்செய்வதில் சிறந்தவர்கள் என்று இப்போது காட்டியுள்ளனராம்! தம் உயிரையும் திரணமாகக்கருதி பகைவர்மத்தியில்போய் அவர்களுக்குப் பயத்தை விளைவித்து வந்துவிட்டனரென்றும் ஸமாசாரம் வந்திருக்கிறது. தம்முடனி

ருக்கும் ஐரோப்பிய துணைப் போர்வீரர்கள் இரவில் அயர்ந்திருக்கும்போது எதிரிகளுக்குத் தெரியாமல் பூனைபோல் நெருங்கி திடீரென அவர்கள்மேல் விழுந்து சின்னாபின்னப்படுத்தினரென்றும் இந்த ஸாஹஸத்தைக்கண்டு விழித்தெழுந்த ஆங்கிலவீரர்கள் இவர்களைப் புகழ்ந்தனரென்றும் இன்னும் பற்பல வீரச் செயல்களைச்செய்தார்கள் என்றும் இவைகளைக் கண்டவர்கள் சொல்லுகிறார்களாம். தாம் போயிருக்கும் நாடு பலவிதங்களில் வித்யாஸமுள்ளதாயிருப்பினும் அதில் பழகினவர்கள்போலிருந்தும், ஐரோப்பாவிற்கே மிகவும் நவீனமாயிருக்கும் யுத்தமுறைகளை அனுசரித்தும் வருகிறார்கள் நம்மவர்கள். இது தவிர இவர்கள் எங்கேயாவது அபாயமான ஸ்திதியில் அகப்பட்டுவிட்டால் சிறிதேனும் புத்தி தடுமாற்றமின்றி தப்பித்துக் கொள்ளும் ஸ்வபாவத்தைப்பற்றியும் வியந்து சொல்லப்படுகிறார்கள். அவைகளை விவரித்தால் பெருகுமென்றஞ்சி விடுத்தலாயிற்று. எத்தகைய காயங்களுக்கும், குளிருக்கும் (இந்த யுத்தம் மாரிகாலத்திலும் நடக்கின்றது. ஐரோப்பிய மாரிகாலம் மஹா பொல்லாதது. வெகு குளிராயிருக்கும். நீர்நிலைகள் எல்லாம் சில ஸமயங்களில் உறைந்துபோகும். உறைபனியுண்டாவதுமுண்டு. இந்தக்காலத்தில் நம் இந்தியரானுவத்தைப் பார்க்கவேண்டுமென்று வந்த லார்ட் ராபர்ட்ஸ் தம் உடம்பைச் சற்று கவனிக்காமற் போகவேதான் காலகதியடைந்துவிட்டாரல்லவா ?) இவர்கள் பின்வாங்காமல் பொறுத்திருக்கின்றனரென்றால் இது இவர்களுக்குப் புதிய அனுபவங்களல்லவே ! இவை தவிர தனித்

தனியே இந்தியவீரர்கள் காட்டிய தீரமும், அதற்காக அவர்கள் அடைந்த ஸன்மானமும் ஹவில்தார் கங்கா ஸிங் எனும் போர்வீரர் "விக்டோரியா க்ராஸ்" என்னும் அரிய பட்டத்தைப்பெற்ற இந்தியருள் முதல்வராய் இருக்கிறார் என்பதனால் விளங்கும். இது மாத்திரமா? இவர்களின் பெருந்தன்மையையும் இவ்வளவு என்று சொல்லக்கூடவில்லை. ஜெர்மானியரை ஒருவன் இகழ்ந்ததைக்கேட்ட இந்தியவீர னொருவன் "அவர்களை அப்படி இகழவேண்டாம். ஐந்து வல்லரசுகளுடன் போர்செய்யக்கூடிய அவர்கள் தேசம் பெருந்தேசமல்லவா? ஜெர்மானியரைப்போல் யுத்தம்செய்து ரணகளத்தில் மடியக்கூடியவர்கள் சுத்தவீரர்களல்லவா?" என்று கூறினனும். இப்படிப் பெருந்தன்மை, கண்ணியம், சௌர்யம் இவைகளுடனும் போர்புரிந்து தம் உயிரை ரணகளத்தில் துறக்கவேண்டியகாலம் நேரிட்டிருப்பினும் சிறிதேனும் லக்ஷ்யம்செய்யாது போர் புரிந்து வருகின்றனர். இக்கடும்போரில் அனேக உயிர்ச்சேதங்கள் இருந்தபோதிலும், இந்தியாவின் பெருமையும் இந்தியரும் மற்ற நாட்டினரைப்போல பல நல்வழிகள் பொருந்திய நாகரிகப்பாங்கும் கொண்டுள்ளவர் என்று நிலைநின்றிருக்கின்றன. உலகத்தில் எவ்வெவ்விடங்களில் போர் நடந்துவருகின்றதோ அவ்வவ்விடங்களுக்கெல்லாம் இந்தியர்கள் சென்றிருந்தபோதிலும் இந்திய ஸைன்யத்தின் பெரும் பாகம் ப்ரான்ஸ் தேசத்தில் யுத்தமுனையில் நின்று போர் புரிந்துவருகின்றது. யுத்தமோ நிற்பதாகக்காணோம். இருகட்சியிலும் விழுந்துவிட்டவர்களின் ஸங்க்யை அதிகம். அனேக



ட்யூக் ஆவ் வெல்லிங்டன்: நூறு வருஷங்களுக்கு முன்னே வாட்டர்லூ சண்டையில் ப்ரிடிஷ் கீர்த்தியை புஷ்டிப்படுத்தின மஹாவீரர்.



லார்ட் நெல்ஸன்: ஸுமார் நூறு வருஷங்களுக்கு முன்னே ப்ரிடிஷ் ஸாகராதிபத்யத்தையும் தேசாபிமானத்தையும் விளக்கிக்காட்டிய மஹாதீரர்

# இந்தியாவும் யுத்தமும்

குடும்பங்கள் நாதனற்றும், ஆண்மக்களற்றும் போய் விட்டன. அனேக கனவான்கள்—ஐரோப்பிய இந்திய கனவான்கள்—உயர்ந்தபதவியிலிருப்பவர்கள்—தம் மக்களையிழந்து பரிதவிக்கின்றனர். அப்படிப்பட்டவர்களில் நம் காருண்ய ராஜப்ரதிநிதியவர்களும் இருப்பதைப் பற்றி மிகவும் அனுதாபப்படுகிறோம்.

இந்தியாவின் நன்மையையும் இந்தியரின் விருத்தியையுமே மனதில்வைத்து உழைத்துவரும் இம்மகோபகாரிக்குப் பலவித இடுக்கண்கள் நேரிட்டதும் பகவானின் சோதனைபோலும்!

இத்தகைய கொடிய யுத்தம் இன்னம் நினைத்தற்கரிய சேதங்களை உண்டாக்கி உலகத்தில் பெருந்தீமைகளை விளைவிக்காமல் இதனுடன் இதை நிறுத்தி, எங்கும் ஸமாதானம்பரவி, ஒற்றுமையுடன் எல்லாரும் வாழும்படி அருள்புரியவேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றோம். ஆனல் ஒரு முடிவுக்கு எப்பொழுது வருமென்பதுதான் ஸந்தேகம்!



# அனுபந்தம் 1

## தரைப்படையின் அமைப்பு

தரைப்படையில் காலாள், குதிரைப்படை, பீரங்கிப்படை என்று பலவகையுண்டு. பல தேசங்களில் தரைப்படைகள் பலவிதமாய்ப்பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பகுதிக்கும் வெவ்வேறு தொகையுள்ள வீரர்கள் இருப்பார்கள். காலாட்படைகள் 'பெயனட்' (Bayonet) சொருகிய துப்பாக்கிகள் கொண்டுசெல்பவர்கள். தூரத்திலிருந்துகொண்டு சுட்டு எதிரிகளை வீழ்த்துவார்கள். அருகில்நெருங்கிப் போர்செய்ய நேரிட்டால் துப்பாக்கியால்சுடுவதுமன்றி 'பெயனட்' டாலும் குத்துவார்கள். யுத்தகளத்தில் எதிரிகளது குண்டுகள் படாவண்ணம் மறைந்து போர்செய்ய அகழிகள்தோண்டி அதினின்று போர் செய்வதுண்டு. இவைகள் வெகு நீளமாயும் ஆழமாயும் அணியணியாயுமிருக்கும். இவைகளைத் தோண்டுவதற்கு யந்திரங்கள் உபயோகிக்கப்படுகின்றனவாம்.

குதிரைப்படை வீரர்களுக்கு துப்பாக்கி அல்லது கைத்துப்பாக்கியும் கத்தி அல்லது ஈட்டி களும் உண்டு. இவர்கள் எதிரிகளின்மீது விசையாய்ப் பாய்ந்து விழுந்து அவர்களைத்தாக்கிப் பிரித்துத் துரத்துவது வழக்கம். எதிரிகளின் நடவடிக்கைகளைக் கவனித்துத் தெரிவிப்பதற்கும் இவர்கள் உபயோகப்படுகிறார்கள். ஸாதாரணமாய்ப் பகைவரது காலாட்கள் அல்லது குதிரைவீரர்கள் வருவதைத் தடுக்கும்பொருட்டும் அல்லது தாமதப்படுத்தும்பொருட்டும் பலவித உபாயங்கள் செய்வதுண்டு. கூர்மையான இருப்பு முட்கள் பொருத்தப்பட்ட கம்பிகளுள்ள பலவித வேலிகள் போட்டுத் தடுப்பது ஸர்வ ஸாதாரணமாயிருக்கின்றது.

பீரங்கிப்படையிலும் பலவகையுண்டு. பெரும்

## 1. தரைப்படையின் அமைப்பு

பீரங்கிகள், சிறு பீரங்கிகள், யுத்தகள பீரங்கிகள், முற்றுகை பீரங்கிகள் என்று பலவிதமாய் இவைகள் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஸாதாரணமாய் யுத்தத்தில் பீரங்கிப்படைகள் காலாட்களின் பின்புறமிருந்து கொண்டு குண்டுகளை எதிரியின்மீது செலுத்தி நாசத்தை விளைக்கும். எதிரிகள் சற்றுக் களைத்ததும் காலாட்கள் அவர்களைத் தாக்குவார்கள். சில பீரங்கிகள் ஒன்று சேர்ந்து இருப்பதற்கு 'பாட்டரி' (Battery) என்று பெயர். சில பீரங்கிகளிலிருந்து குண்டு ப்ரயோகம் செய்வதென்றால், யந்திரங்களின் உதவியும் மின்சாரத்தின் உதவியும் வேண்டும்.

ஸைன்யங்களில் மற்ற வீரர்களும் உண்டு. யுத்தம் நடப்பதென்றாலும் ஸைன்யங்கள் இடம்விட்டுப்பெயர்வதென்றாலும் அதற்கு அனேக காரியங்கள் அத்யாவசியமாகின்றன. பாதைகள் போடுதல், பாலங்கள் கட்டுதல், போக்குவரவுக்குரிய ஸகல வழிகளையும் கவனித்து அவைகளுக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தல், எதிரிகளின் பாலங்கள், கோட்டைகள் முதலானவைகளைத் தகர்த்தல், அகழிதோண்டுதல், யுத்த ஸமாசாரங்களை வெளிப்படுத்துவதற்கு வேண்டிய ஏற்பாடுகள்செய்தல், போர்ப்பிரதேசங்கள் போன்றவைகளின் படங்கள் தயாரித்தல் இவைகளுக் கென்றெல்லாம் வீரர்கள் நியமிக்கப்பட்டு யுத்த உடையுடன் ஆயுதபாணிகளாய் ஸைன்யங்களுடன் செல்வார்கள்.

தவிர ஸைன்யங்களின் ஸாமான்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டுபோவதற்கும் ஆகாராதிகளை ஸித்தப்படுத்துவதற்கும் யுத்தத்தில் காயமடைந்தவர்களை எடுத்து சிகித்ஸை செய்வதற்கும் தனித்தனி ஆட்களும் ஸிப்பந்திகளும் ஸைன்யங்ளில் உண்டு. மற்றும் ஸைன்யங்களுக்கு வேண்டிய ஸௌகர்யங்களைக் கவனிக்கவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. விரிக்கிற் பெருகும்.

## அனுபந்தம் 2

### கப்பற்படையின் அமைப்பு

கப்பற்படைகள் ஸாதாரணமாக பலவித 'ஸ்க்வாட்ரன்' (Squadron) அணிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொன்றிற்கும் ஒரு தலைவனுண்டு. ஒவ்வொரு கப்பலுக்கும் தலைவனிருப்பது போலவும் ஒவ்வொரு கப்பற்படையின் பகுதிக்கும் தலைவன் இருப்பதுபோலவும் இவைகளுக்கெல்லாம் தலைமை வஹித்துள்ள பெரிய உத்யோஹஸ்தர் உண்டு. இவைகள் தேசப் பாதுகாப்புப்படை யென்றும், மற்று அட்லாண்டிக், மத்யதரைக்கடல் முதலிய நீர் நிலைகளிலிருக்கும் படைகள் எனவும் பிரிக்கப்படுவதுண்டு. கப்பற்படைத்தலைவரது கப்பலிலிருந்து கொடிகளைக் கொண்டு ஸம்ஜ்ஞைகள்செய்து ஆக்ஞாபிக்க, மற்றவைகள் ஆக்ஞை பிரகாரம் போர் செய்யுமாம். கப்பற்படையில் அடங்கிய போர்க்கப்பல்கள் பலவகைப்படும். அவைகளில் சிலவற்றின் அமைப்பு கீழே கூறப்படுகிறது:—

ட்ரெட்நாட்:—இந்தப் பதத்திற்கு ஒன்றுக்கும் அஞ்சாதது என்றுபொருள். இது தற்காலத்தில் கட்டப்பட்டுள்ள பெரும் போர்க்கப்பல்களுக்குப் பெயராய் வழங்கி வருகின்றது. இவை பார்க்கப் பயங்கரமான தோற்றத்தை யுடையவை. இவைகளை மிதக்கும் கோட்டைகள் என்றே சொல்லவேண்டும். மிகவும் உறுதியான—சுமார் 11 அல்லது 12 அங்குல கனமான எஃகுத் தகட்டினாலான கவசமுடையவையாய் எப்படிப்பட்ட குண்டுகளினின்றும் காத்துக்கொள்ளும்படி செய்யப்பட்டிருக்கின்றன. கப்பல் நீளம் ஸுமார் 500 அடிக்குக் குறையாமலிருக்கும். இவைகளில் மிகச் சிறந்த பீரங்கிகள், 12 அல்லது 13 அங்குலப் பெரும் பீரங்கிகளும், சிறு பீரங்கிகளும் வைக்கப்

பட்டு, டார்பீடோ குழல்களும் கொண்டுள்ளன. கப்பலின் மேல்தட்டில் உயர்ந்த கோபுரமாதிரி கட்டப்பட்டு அதிலேதான் நீண்ட பெரும் பீரங்கிகள் அமைக்கப்பட்டிருக்கும். பெரும் பீரங்கிகளும், அதற்கு வேண்டிய ஸாமான்களும் கொண்டுள்ளவையாதலால், இவை அதிவேகமாய்ப் போகா. மணிக்கு 21 நாட்டு (ஒரு நாட் என்பது ஒன்றே யரைக்கால் மைல்) க்குமேல் போவது அரிது. நீரை அமுக்குவதாலுண்டாகும் சக்தியினாலேயே இப்பீரங்கிகள் இயக்கப்படுகின்றன. இவைகளின் தோற்றமும் பெரும்பிசாசுகளைப்போன்று பயங்கரமாயிருக்கும். ஒரு ட்ரெட்நாட் கட்டி முடிக்க வேண்டுமானால் 1,813,000 பவுன் பிடிக்குமாம். இக்கப்பல்களிலேயே, பலத்திற்கும் இவைகளின் வேகத்திற்கும் நிறைக்கும் ஏற்ப, பற்பல வித்யாஸங்கள் உண்டு.

**க்ரூய்ஸர்கள் :**—இவை யுத்தக் கப்பல்களான போதிலும், இவைகள் போருக்கென்றே அமைக்கப்படாமல் வியாபாரக் கப்பல்களைக் காப்பதற்கும் எதிரிகளைத் துரத்தி யடிப்பதற்கும் எதிரிகளின் கப்பல்களுக்கும் துறைமுகங்களுக்கும் தீங்குவிளைத்து ஓடிப்போய்த் தப்பித்துக் கொள்வதற்கும் உபயோகமாகும்படி செய்யப்பட்டிருக்கின்றன. ஆகவே அதிகமான பாரங்கள் இதில் ஏற்றப்படமாட்டா. இவைகளுக்கு வேண்டிய நிலக்கரி முதலியவைகளை வைக்கும்படி ஸகாவாய் மற்றொரு கப்பலை கூடக் கொண்டு செல்வதுண்டு. பெரும் பீரங்கிகளும் வைக்கப்படுவதில்லை. சிறியவையும், ஆனால் வேகத்துடன் குண்டுகளை எறியக்கூடியவையுமான பீரங்கிகள் வைக்கப்பட்டிருக்கும். எல்லாக் கப்பல்களையும்விட க்ரூய்ஸர்கள்தாம் வேகமாய்ச் செல்லக் கூடியவை. இவைகளின் வேகத்தையும் கனத்தையும் இவைகள் கொண்டிருக்கும் ஆயுதங்களையும் உத்தேசித்து பற்பல வேறுபாடுகள் இவைகளில் உண்டு.

இவைகள் செய்வதற்கும் 20 லக்ஷம் பவுன்களுக்கு மேல் செலவாகும்.

**ஸப்மேரீன் :**—இது தண்ணீருக்குள் மறைந்து செல்லக்கூடிய ஓர் அற்புதக் கப்பல். அது ஆகாயத்தி லிருந்து பார்க்கப்படுமானால் நீரில் செல்லும் ஒரு திமிங் கிலத்தைப்போல் காணப்படும். அது எஃகினாலும், வெளியிலிருப்பன தெரியும்படி கனத்த கண்ணாடிகளா லும் செய்யப்பட்டுள்ளது. கண்ணாடிகளுக்குப் பாது காவலாய் உறுதியான எஃகுக் கவசங்கள் உண்டு. பகைக் கப்பல்களை எதிர்க்க வேண்டுமாயின், நீரடி யிலேயே சென்று அருகில் நெருங்கியவுடன் தான் வைத்திருக்கும் டார்பீடோ குழல்களைச் செலுத்தி விடும். அதனுள்ளே யுத்தாயுதங்களும் வைக்கப்பட் டிருக்கும். நீரதனுள் நுழையாதபடியும், உள்ளி ருப்பவர்களுக்குத் தகுந்த காற்று வசதிகள் இருக் கும்படியும் ஏற்பாடுகள் மிக்க ஸூக்ஷ்மமாய் அமைக்கப் பட்டிருக்கின்றன. இது ஸாதாரணமாய் நான்குமணி நேரம் நீருக்குள் மூழ்கியிருக்கலாமாம். ஆனால் நூத னமாய் ஒரு மாதமும் நீரடியிலேயே இருக்கும்படி யான ஸப்மெரீன்களும் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின் றன. இவைகளில் கப்பலிற்குவேண்டிய சுத்த ஆகா யம் கொண்டுபோகும் கருவிகள் மீனுக்குள்ள ப்ராண வாயுவைப்பிரிக்கும் ஜில் (Gills) என்ற ச்வாஸக்கருவி கள் போலிருக்கின்றனவாம். இதன் நீளம் ஸுமார் 130 அடியிருக்கும்.

**டார்பீடோ.**—இது மீன் அல்லது சுருட்டுப் போ ன்ற ஒருவகை யுத்தகலம். இதை ஒவ்வொரு போர்க் கப்பல், க்ரூய்ஸர்களிலும் எடுத்துக்கொண்டு போவ துண்டு. இது 14 அடி நீளமும் 18 அங்குல குறுக்களவும் உள்ளது இந்தக் குழலில், நிறைய வெடி மருந்தும் கண்ணாடித் துண்டு, ஆணி, குண்டுகள் முதலிய மிக வும் பயங்கரமான வஸ்துக்களும் போடப்பட்டிருக்

கும். இதை எடுத்து, இது கொள்ளக்கூடிய குழலில் வைத்து யந்திரத்தை இயக்கினால் நீரில்தள்ளப்பட்டு மணிக்கு 48 மைல்தூரவீதம் வெகு விசையாகச்சென்று எதிரியின் கப்பல் அடியில் தாக்கும். உடனே டார்பீடோ வெடித்து கப்பலிற்குக் கொடிய சேதத்தை உண்டாக்கும். ஸுமார் 2000 கஜம் வரையில் போகக் கூடிய சக்தியையுடையது. டார்பீடோ, அவைகளில் சில தன் ஸ்வசக்தியினாலேயேதான் நீரில் செல்ல வேண்டும்.

டெஸ்ட்ராயர்:— இது இந்த டார்பீடோக்களையும் அழிக்கக்கூடிய சக்தியையுடையது. பகைக் கப்பல் களைத் தாக்கவும், அவைகளினின்று தப்பித்தோடவும் வேண்டிய ஏற்பாடுகள் அமைந்திருக்கின்றது. ஸுமார் 256 அடி நீளமிருக்கும். இதிலும் சில சிறு பீரங்கி களும் டார்பீடோக்களும் வைக்கப்பட்டிருக்கும்.

வெடிகுண்டு கடற் சுரங்கங்கள்:—இவை எதிரி களது கப்பலை நாசமடையச் செய்வதற்கென்று அமைக் கப்பட்டவை. அவைகளில் சில, உருவத்தில் உருண் டையாய் மிதவையாகவும், மற்றவை பீப்பாய் போலவு மிருக்கும். இவை நிறைய கொடிய வெடிமருந்து, குண்டு முதலியவைகளைப்போட்டு மிதக்க விடுவார் கள். அல்லது, ஜலமட்டத்திற்குச் சிறிது ஆழத்தில் இருக்கும்படி செய்வார்கள். இவைகள் ஸாதாரணமாய் பழங்கப்பல்களில் கொண்டுபோகப்படும். கப்பலின் மேல்தட்டிலிருந்து மெதுவாய் பின்புறத்திலிருக்கும் ஒரு சரிவுபலகையின் வழியாக நீரில் தள்ளிவிடப் படும். இவைகளின்மீது கப்பல்கள் தட்டினால்போதும். எவ்வளவு உறுதியாயுள்ளவைகளானாலும் சின்னாபின் னமாய்த் தகர்க்கப்படும். (இவைகள் கடல்களில் போ டப்படுவதைப்பற்றிய தேசா தேச விதிகள் பலவுண்டு.) இவைகளை எடுப்பதும் மிகவும் அபாயகரமானது.

இவைகள் சிதறிக்கிடக்கும் பரப்பில் இரண்டிரண்டு கப்பல்கள் சேர்ந்து வேலைசெய்யும். உறுதியான இரும்புக் கம்பிகள் இக்கப்பல்களிலிருந்து கடலில் விடப்பட்டு பிணைக்கப்பட்டிருக்கும். இவைகள் நீரில் ஆழச் செல்வதற்கு இரும்புக்காற்முடிகள் தொங்கவிடப்பட்டிருக்கும். இக்கம்பிகளை நீரில் இழுத்தால் இவைகளில் இக்கடற் சுரங்கங்கள் அகப்பட்டு ஒன்றோடொன்று மோதி வெடித்துவிடும். அல்லது அவை சமீபத்தில் நீர்மட்டத்தில் வந்தால் அவைகளைச் சுட்டு வெடிக்கச் செய்வார்கள். அபாயமும் ஒருவாறு நீங்கிவிடும்.

---

## அநுபந்தம் 3

### ஆகாயப்படை

தற்காலத்து வழங்கிவரும் ஆகாயக்கப்பல்களில் முக்கியமானவை இருவிதம். அவை ஏரோப்ளேன் (Aero-plane) டிரிஜிபில் (Dirigible) என்பவை. இவை இரண்டிற்கும் அனேக தாரதம்யங்கள் உள. ஏரோப்ளேன் அதிக பளுவைத் தாங்காது. ஆனால் வேகமாய்ப் போகும்; 60, 70 மைல் போகிறதாம். ஆகவே எதிரிகள் பீரங்கிகளினின்று எளிதில் தப்பித்துக்கொள்ளலாம். குண்டுகள் அதன்மேல் பட்டாலும் சீக்கிரத்தில் கீழ் வீழ்த்தப்படாது. டிரிஜிபில் என்பதோ பெரும் பளுவைத் தாங்கக்கூடியது. வேண்டுமாயின் ஒரேயிடத்திலேயே ஆகாயத்தில் நிறுத்தி, பார்க்க வேண்டியவைகளை நன்றாய்ப்பார்த்து குறிவைத்து வெடி குண்டுகளைப்போட்டு சேதம் விளைக்கலாம். ஆனால் பூதாகாரமாயும் வேகம் ஸுமார் 45, 50 மைல்களுக்கு அதிகப்படாததாயும் இருத்தலால் கீழிருக்கும் எதிரிகளும் ஸுலபமாய் அதைத் தரைக்குக் கொணர்ந்துவிடலாமாம். ஏதாவது ஒரு பாகம் சேத



கடற்சுரங்கங்கள்



சிறுப் முற்றுகை பீரங்கி



டவுன் ஹால் ; லோவேய்ன்

மடைந்தாலும் பிறகு உபயோகப்படுவது ப்ரயாஸை. யுத்தகாலங்களில் காலாள், நாவாய்ப்படைகளுக்குத் துணையாய் வேவுபார்த்து எதிரிகளின் பலாபலங்களை யும் நடவடிக்கைகளையும் எளிதில் அறிவதில் ஏரோ ப்ளேன்களே மிக்க ஸாதகமாயிருக்கின்றன.

---

## அநுபந்தம் 4

### ஆயுதங்கள் முதலியன

இந்த யுத்தத்தில் உபயோகப்பட்டுவரும் ஆயுதங்கள் அநேகமிருந்தன. ஆயினும் அவற்றில் முக்கியமானவை களைப்பற்றி சுருக்கிக்கூறுவோம். முதலாவது, வெடி குண்டுகள் முற்காலத்தவைபோல் வெறும் பளுவான இருப்புக்குண்டுகளாயிராமல் கனத்த இருப்புத்தகட்டி னால் ஆக்கப்பட்டு அவைகளினுள்ளே வெடிமருந்து, கண்ணாடித்துணிக்கைகள், சிறு இருப்பாணிகள் முத லானவை போடப்பட்டிருக்கின்றன. உருவத்தில் ஸாதா ரணமாய் பெரிய வாழைப்பூ போன்றிருக்கும். பீரங்கி யில் போட்டு சுட்டால் மணிக்கு 96 மைல் செல்லக்கூடிய வேகத்துடன் சென்று குறிப்பிட்ட இடத்தில் விழுந்து வெடித்து அருகிலுள்ள வஸ்துக்கள் உட்பட எல்லா வற்றையும் அழித்துவிடும். இவைகளிலிருக்கும் அபாய வஸ்துக்கள் தவிர, வெடித்ததும் இதிலிருந்துபுறப்படும் கரும்புகையே மரணத்தை யுண்டுபண்ணக்கூடியதாம். இவைகளை எறிகின்ற பீரங்கிகளும் பயங்கரமானவை. குறுக்களவு 12 அங்குலம், 15 அங்குலம், 17 அங்குலம், 23 அங்குலமுள்ள பீரங்கிகளு மிருக்கின்றன. முற்கா லத்தில் நம் வீரர்கள் உபயோகித்த ஆயுதங்களுக்குப் பேரிருந்ததுபோல இவைகளின் சக்திக்கேற்றவாறும், கனத்திற் கேற்றவாறும், உபயோகத்திற்கேற்றவாறும் அல்லது அவைசெய்யப்படும் தொழிற்சாலைக்கேற்றவா

றும் பற்பல நாமதேயங்களையுடையன. போரில் மோடார், ரயில் முதலிய பலவகை வண்டிகளும் உபயோகிக்கப்பட்டுவருகின்றன. இவைகளைக் குண்டுகள் சேதப்படுத்தாதவண்ணம் எஃகுக்கவசங்கள் உடையனவாயிருக்கின்றன. எல்லாவித வாஹனங்களும் யுத்தத்தில் உபயோகப்படும் என்பது எல்லாருக்கும் தெரியவேண்டியதவசியம். நாய்கள் முதற்கொண்டு, சிறு துப்பாக்கி வண்டிகளை இழுக்கின்றன என்றால் போரிலும் அற்பப் பிராணிகள் எவ்வளவு உபயோகமுள்ளவையாயிருக்கின்றன என்பதை யறியலாம். மற்ற யுத்தாயுதங்களையும் கருவிகளையும்பற்றி 'விவேக போதினி' யில் கூறப்பட்டிருக்கின்றது.

---

## அனுபந்தம் 5

### ரேட் க்ராஸ் சிகித்ஸா ஸங்கம்

இச்சங்கங்கள், யுத்தகளத்தி லடிபட்டுக் காயமடைந்து கஷ்டப்படுவோருக்கு சிகித்ஸை செய்வதற்காக ஏற்பட்டவைகள். இச்சங்கத்தார்கள், மோடார் சக்தியினு லிழுக்கப்படுகிற வண்டிகளிலும் மற்று மிக்க ஸௌகர்யங்களுள்ள வண்டிகளிலும் காயம்பட்டவர்களைத் தூக்கிப்போட்டு, பக்கங்களிலே இதற்கென்று ஏற்படுத்தப்பட்ட ஆஸ்பத்திரிகளிலுள்ள பெரிய வைத்யர்களிடம்கொண்டுபோவார்கள். சிகித்ஸை முதலானவைகள் நல்லுபசாரத்தோடு நடத்தப்படும். இச்சங்க வண்டிகளுக்கும் மனிதர்களுக்கும் சிவப்புச்சிலுவை (க்ராஸ் + ) தான் அடையாளம். இதைக்கண்டதும் போரில் ஸம்பந்தப்பட்டுள்ள இருதிறத்தாரும் இவர்களைத் தொந்தரவு செய்யாமல் மரியாதையாகவே நடத்துகிறார்கள். இச்சங்கத்தார்கள் தேசவித்தியாஸமின்றி சத்துரு சிப்பாய்களையும், தம்மவர்களையும் ஒரேவிதமாக பக்ஷபாதமின்றி

தர்மதேவதைகள்போல் வைத்யம்செய்து காப்பாற்று கிறார்கள். வெகு பெரிய கனதனவான்களும் உத்தமி களாகிய சீமாட்டிகளும் இவ்வேலையைச் செய்கிறார்க ளென்றால், இவர்கள் காருண்யத்தையும் தயையும் பற்றி கேட்கவும் வேண்டுமோ? இதற்காக எவ்வ ளவோ லக்ஷக்கணக்கான பவுன்கள் செலவழிக்கப் படுகின்றன.

---

## அனுபந்தம் 6

### நடுநிலைமையுள்ள தேசங்கள்

இந்த யுத்தத்தில் ஸம்பந்தப்படாமல் இருக்கும் முக்யமான தேசங்கள் ஹாலெண்ட், இடலி, நார்வே, ஸ்வீடன், டென்மார்க், அமெரிகாவில் யுனைடெட் ஸ்டேட்ஸ் ஆகிய இவைகளே. மற்ற தேசங்களும் தம் நடுவு நிலைமையைக் காத்திருப்பினும் உலகவியாபாரத்திலும் நாகரிகத்திலும் சிறந்து தலைதூக்கி நிற்கும் நாடுகள் இவையே யென்பது எல்லாருக்கும் தெரியும். இப்படிப் பட்ட நடுவுநிலைமையுள்ள தேசங்களின் நடவடிக்கைக ளைப்பற்றியும் இவைகளுக்கும் யுத்தம் செய்யும் தேசங் களுக்கும் உள்ள ஸம்பந்தங்களைப்பற்றியும் வெகுகால மாய் அனுஸரிக்கப்பட்டுவரும் அனேக பழக்கங்கள் தேசாதேச விதிகளாக இருந்து வருகின்றன. முக்ய மான விதிகளின் ஸாரத்தைமட்டும் இங்குகுறிக்கிறோம். ஒரு நடுவு நிலைமையுள்ளதேசம் யுத்தத்தில் ஸம்பந்தப் பட்ட எவருக்கேனும் (மற்றவர்களுக்கு விரோதமாய்) உதவி செய்யக்கூடாது. நடுவு நிலைமையுள்ள தேசத் திலிருந்து எவ்வித உதவியும் தனியே யாரிடமிருந்தும் யுத்தத்திற்கு அனுப்படாமல் இருப்பதை இவைகள் கவனிக்கவேண்டும். யுத்தத்தில் ஸம்பந்தப்பட்டதேசங் கள் இந்த நடுவு நிலைமையுள்ள தேசங்களின் அரசரி

மையை அங்கீகரிக்கவேண்டும் என்பனபோன்றவைக ளாம். இவைகளின் விவரங்களை ஆங்காங்கு கண்டு கொள்க.

---

## அனுபந்தம் 7

### யுத்த முனைக்குச் சென்றுள்ள இந்திய அரசர்கள்

ஸர் ப்ரதாப் ஸிங்:—இவர் பம்பாய் ராஜதானியின் வடக்கேயுள்ள ஈடார் நாட்டு அரசராயிருந்து தம் நாட்டைத் தம் ஸஹோதரரது குமாரரிடம் ஒப்புவித்து விட்டு ஜோட்பூர் அரசப்ரதிநிதியாகவிருந்து மிகவும் திறனுடன் வேலைபார்த்து ஜோட்பூர் ராஜ்யத்தை தற் காலத்திய உச்சஸ்தானத்துக்குக் கொண்டுவந்தவர். மிக்க தைர்யமும், வீர பராக்கிரமும் பொருந்தியவர். ராஜபுத்ரர்களுக்குள்ள பெருந்தன்மை வாய்ந்தவர். ராஜபக்தியில் சிறந்து, தம் ஸைன்யத்துடன் இங்கிலாந் தின் பகைவரை வெல்லவேண்டுமென ஆவல் கொண் டுள்ளவர். ப்ரிடிஷ் இந்திய யுத்தங்களிலும், ஆப்கனி ஸ்தானம், சீனமுதலியதேசங்களிலும் ஸேனையில் உயர் ந்த பதவிகளை வஹித்து போரில் கைதேர்ந்தவர்.

ஜோட்பூர் மஹாராஜா:—இவருக்கு வயது பதினாறு யிருப்பினும் தம் வம்சத்திற்குரிய ப்ரதாபத்தை ஐரோ ப்பாவிலும் நிலைக்கச் செய்யும்பொருட்டு தம் அம்மான், வயது சென்ற ஸர் ப்ரதாப் ஸிங்குடன் தம் ஸைன்ய ஸஹிதம் போருக்குச் சென்றிருக்கிறார். இவருடைய ஸைன்யத்தில் உயர்ந்த க்ஷத்ரிய குலத்தைச்சேர்ந்த வீரர்கள் இருக்கிறார்கள்.

பிக்கானேர் மஹாராஜா:—இவர் தமது சமஸ்தான ஸம்ப்ரதாயத்துக்குரிய ராஜவிச்வாஸம், வீரத்வங்க ளைப் பலதடவைகளில் வெளியிட்டிருக்கிறார். சீன, ஆப்

ரிக்கா முதலிய தேசங்களில் நடந்த யுத்தங்களுக்கு இவர் போயிருக்கிறார். படிப்படியாய் உயர்ந்த கௌரவ ராணுவ உத்யோகங்களை வஹித்து இப்பொழுது கர்னல் என்னும் பதவியிலுள்ளார்.

பாடியாலா மஹாராஜா:-இவரும் வீரப்ரதாபத்தில் சிறந்த ஸிக்கிய வம்சத்தில் தோன்றியவர். பாடியாலா சமஸ்தானத்திலிருந்து அனேக முறை ப்ரிடிஷாருக்கு உதவிகொடுக்கப்பட்டிருக்கிறது. இவர்களை போர்வீரர் எனத்தகுந்த அரசகுமாரர்களும் நாரீமணிகளும் இந் நாட்டிலுள்ளார்கள் என்பது சரித்திரப் பிரஸித்தம். அவர் தாமடையவேண்டிய நிலைமைக்குத் தகுந்தவண்ணம் இளமையிலேயே பல கலைகளையும் பயின்றுள்ளார். 1910-ம் வருஷத்தில் இவர் ஸிம்மாஸன மேறினார்.

கிஷன்கார் மஹாராஜா:-இவரும் மஹாதீரர். ராஜ புத்திரத்தலைவராகிய உதயபுர ராஜரது வம்சத்து அரசகுமாரியை மணந்துள்ளார். இவரது அந்தஸ்துக் குத்தகுந்தபடி இவரிடத்தில் படைகள் இருக்கின்றன.

ரட்லம் மஹாராஜா:—இவர் ஜோட்பூர் ராஜவம்சத்தைச் சேர்ந்தவர். இந்தூரிலுள்ள டாலி கலாசாலையில் படித்தவர். இவரிடத்தில் உள்ள ஸைன்யம் சிறிதேயாயினும் மிகவும் உயர்ந்த யுத்தப் பயிற்சியையுடையது. ப்ரிடிஷ் ராணுவத்தில் இவருக்கும் கௌரவ உத்தியோகம் உண்டு.

ஜேயோரா நவாப்:—இவர் ஸ்வாட் என்னும் நாட்டிலுள்ள வீரத்தன்மை விளங்கும் வம்சத்தைச் சேர்ந்தவர். பன்னிரண்டாவது வயதிலேயே நவாப் பதவிக்கு வந்துவிட்டனராம். இவர் யுத்தப் பயிற்சியில் தேர்ச்சியடைந்து ப்ரிடிஷ் ராணுவத்திலும் சிறிது காலம் உத்யோகம்பெற்று வேலைபார்த்து மேஜர் என்னும் பதவியில் இப்பொழுது இருக்கிறார்.

ஸாசின் நவாப்:—இவரும் அரசகுமாரரது படிப்பிற்கென்று ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் ராஜ்கோட் ராஜ

குமார் காலேஜ், ஆஜ்மீர் மேயோ காலேஜ் முதலியவை களில் படித்திருக்கிறார். இம்பீரியல் கேடட் கோர் என்னும் அரசகுமார ராணுவத்தில் லெப்டினண்டாயிருக்கிறார். மிக்க தைர்யசாலி.

---

## அனுபந்தம் 8

### யுத்தத்தில் ஸம்பந்தப்பட்ட தேசாதிபதிகள்

ஐந்தாம் ஜ்யார்ஜ்:—இவரைப்பற்றி நமக்கு முன்னமேயே தெரியும். இவர்நம்சக்ரவர்த்தியாயிருந்த ஏழாம் எட்வர்டின் இரண்டாவது குமாரர். கப்பற்றொழிலைப் பின்பற்றி அதில் மிக்க சாமர்த்தியம் காட்டிவந்தார். ஸாகராதிபத்யத்தைக் கைக்கொண்ட ஆங்கிலநாட்டிற்கு கப்பற்றொழிலிற்றேர்ந்த அரசரிருப்பது மிகவும் பாராட்டற்பாலதல்லவா? இவர் தம் குடிகளிடத்தில் மிக்க அன்புபூண்டுள்ளவர். நிரம்ப கல்விமான். சாந்தமும் ஸமாதானமும் எங்கும் பரவவேண்டியதென்ற கொள்கையையுள்ளவராய் அதற்காகத் தம்மாலியன்றவரை உழைத்துள்ளார். முக்யமாய் இவர் தம் இந்திய ப்ரஜைகளிடத்தில் கொண்டுள்ள அன்புக்கும் ஆதரவுக்கும் எல்லையென்பது கிடையாது. உவேல்ஸ் இளவரசராயிருந்தபோது இந்தியாவிற்கு வந்து எல்லாவற்றையும் தாமே யறிந்துகொண்டதுபோக, அவர் ஸிம்மாஸனமேறின பிறகு, இந்தியரும் அம்முடிசூட்டு வைபவத்தைக் கண்டு களிக்கும்படி இந்தியாவிற்குத் தாமே விஜயஞ்செய்தது எல்லோருக்கும் தெரியும். இந்தியர் எக்காலும் மகிழ்ச்சியடையும்படி டெல்லியை இந்திய ராஜதானியாகவும் மாற்றினதுமன்றி கீழ்த்தரப் படிப்பு விஷயமாய் ஐம்பது லக்ஷரூபாய் செலவழிக்க உத்தர வளித்ததும், இந்திய ராஜவிச்வாஸத்தை இப்போழுது

அங்கீகரித்து, இந்தியப் படைகளை ப்ரான்ஸில் நேரே போய் பார்வையிட்டதும் எல்லோருக்கும் தெரிந்த தல்லவா ?

ரேமண்ட் பாயின்கேர்:-இவர் ப்ரான்ஸ் தேச ப்ரஸிடெண்ட். 1869-ம் வருஷத்தில் பிறந்தவர். தேசாபிமானம், விடாமுயற்சி, ஆழ்ந்த ஆலோசனை எல்லாம் ஒருங்கு கூடியவர். மிக்க கல்விமான். வக்கீல்வேலை முதலில் பார்த்துவந்தவர். பத்ரிகாசிரியராகவும் இருந்து வந்தார். ப்ரஞ்ச் ஜனப்ரதிநிதி ஸபையில் ஒரு மெம்பராகத் தெரிந்தெடுக்கப்பட்டு, வெகு ஸாமர்த்யமாய் வேலைகளை நடத்திவந்தார். பிறகு படிப்படியாக முக்ய அரசாங்க உத்யோகங்களில் நியமிக்கப்படவும் ஸாமர்த்தியத்துடன் அவைகளை நிர்வஹித்து வந்தார். இவருக்கு அன்யதேச வ்யவஹாரங்கள் நன்றாய்த் தெரிய வரும். 1913-ம் வருஷ முதற்கொண்டு ப்ரஞ்ச் ப்ரஸிடெண்டாக இருந்து வருகிறார்.

ஆல்பர்ட்:—இவர் பெல்ஜியநாட்டு அரசர். 1875-ம் வருஷ பிறந்தவர். அடக்கம் சாந்தம் இவைகள் குடி கொண்டவர். ப்ரஜைகளிடத்தில் மிக்க அன்பு பூண்டவர். தம் நாட்டின் விருத்தியையே மேற்கொண்டுள்ளவர். தமது ஸைன்யத்திற்குள் தாம் ஒரு ஸாதாரண போர்வீரனைப்போன்று அவர்கள் கஷ்டங்களைத் தாமும் அனுபவித்து அவர்களுக்கு உத்ஸாகமூட்டி ஜெர்மானிய வெள்ளத்தை வெகு தீரத்துடன் கடைசி வரையில் தடைசெய்த மஹாவீரர். நாட்டை யிழந்து தம் ஸைன்யத்தின் தலைவராய்நின்று போர்புரிந்து வருகிறார்.

க்ராண்ட் டச்சஸ் ஆவ் லக்ஸம்பர்க்:—ஐரோப்பிய தேசாதிபதிகளில் மிக்க இளையவர். இவ்வரச குமாரி, தம் நாட்டின் விருத்திக்காக மிகவும் உழைத்துவருகின்றனராம். ப்ரஜைகளின் விச்வாஸத்தை மிகவும் பெற்

றுள்ளார். மற்ற விவரங்களுக்கு இப்புத்தகம் 98-99-ம் பக்கங்களைப் பார்க்கவும்.

இரண்டாவது உவில்லியம்:—இவர்தான் கெய்ஸர் என்று சொல்லப்படும் ஜெர்மன் சக்ரவர்த்தி. 1859-ம் ஹு த்தில் பிறந்தவர். இளமை முதற்கொண்டே கல்விப்பயிற்சியும் யுத்தப் பயிற்சியும் இவருக்குக் கொடுக்கப்பட்டுவந்தது. எல்லா விஷயங்களிலும் நிபுணராம். மனச்சாட்சிக்கு விரோதமாக நடப்பவரல்ல. தம் நாட்டிற்கும் ப்ரஜைகளுக்கும் மிக்க நன்மைகளைச் செய்ய வேண்டுமென்ற ஆவல் இவருக்கு மிக்கஅதிகமென்றும் குடிகளிடத்தில் நிரம்ப ப்ரீதியுடையவரென்றும் சொல்கிறார்கள். தாம் செய்து முடிக்கவேண்டியதைத் தவறாமல் செய்தேதீருவார். இவருடைய பொறுமையும், சுறுசுறுப்பும் மிகவும் சிலாகிக்கத்தக்கவை என்று சொல்கிறார்கள். ராஜ்ய தந்திரத்திலும் ராணுவ விஷயங்களிலும் மிக்க நிபுணராம். பலவித சாஸ்திரங்களின்மீதும், சாஸ்திர ஆராய்ச்சி செய்பவர்களின்மீதும் இவருக்கு மிக ப்ரியமாம். ஜெர்மனியின் நாவாய்களை விருத்திசெய்வதில் மிகவும் ஊக்கங்கொண்டுள்ளவராம். இவர் விக்டோரியா மஹாராணியின் பெண்வயிற்றுப் பேரன் என்பது எல்லாருக்கும் தெரிந்திருக்கலாம்.

இரண்டாவது நிக்கோலஸ்:—இவர் ரஷிய சக்ரவர்த்தி. 1868-ம்ஹு பிறந்தவர். மிகவும் படித்தவர். ப்ரபஞ்ச வர்த்தமானங்களை நன்றாயறிந்தவர். ஐரோப்பாவில் எங்கு யுத்தம் நேரிட்டுவிடுமோ எனக்கருதி அதைத் தடுக்கத் தம்மாலியன்றவரையில் முயன்றனராம். ஆனால் அது முடியாமற் போயிற்று. ஸாதாரணமாய் ரஷியாவைக் கொடுங்கோலரசு என்று சொல்வதுண்டு. இவர் காலத்தில்தான், மற்ற ராஜ்யங்களில் உள்ள ஜனப்ரதிநிதி ஸபைபோல ரஷியாவிலும் ட்யூமா என்னும் ஸபை ஸ்தாபிக்கப்பட்டது. இவர் ஜனங்களிடத்தில் வெகு ப்ரீதியுள்ளவர்.



மிஸ்டர் ஆஸ்க்வித், இங்கிலீஷ் ப்ரதம மந்திரி



ஸர் எட்வர்ட் க்ரே, ப்ரிடிஷ் அந்நியதேச வியவஹார மந்திரி

## 8. யுத்தத்தில் ஸம்பந்தப்பட்ட தேசாதிபதிகள்

ப்ரான்ஸிஸ் ஜோஸப்:—இவர் ஆஸ்ட்ரிய சக்ரவர்த்தி. 1830-ம் ௵ பிறந்தவர். சக்ரவர்த்திக்கு வேண்டிய படிப்புகளைப் படித்துள்ளவர். ராணுவப்பயிற்சியிலும் தேர்ச்சியுண்டு. இவரே ஐரோப்பிய அரசர்களுள் வயதுசென்றவர். இவர், பாபம்! மிக்கதுரதிர்ஷ்டசாலி. வெகுகஷ்டங்களை அனுபவித்துள்ளவர். தம் ஒரே மகன், ஸஹோதரன், தம் மருமகள், தம் ஸஹோதரரது புத்ரனும் ஆஸ்ட்ரிய இளவரசுமாகிய ப்ரான்ஸிஸ் பெர்டினண்ட், அவரது மனைவி ஆகிய இத்தனைபேரையும் துர்மரணத்தில் இழந்துவிட்டனர். ஒன்றும் கொடுத்து வைக்காதவர். இவருக்காக உலகத்தில் அனுதாபப் படாதவரில்லை.

பீட்டர்:—இவர் ஸெர்வியநாட்டரசர். வயது சுமார் 70-க்குமேலாகிறது. ஸெர்வியாவில் சில கலகங்கள் உண்டானபோது இவர் அந்நாட்டினின்றும் வெளியேறி ப்ரான்ஸில் வஸிக்கநேரிட்டது. எல்லாக் குழப்பங்களும் அடங்கியபிறகு ஸெர்விய ராஜபட்டம் இவருக்கு அளிக்கப்பட்டது. ஆனாலும் மிகவும் ஸாமர்த்தியசாலியல்லவென்று சொல்லப்படுகிறது. இவர் புத்ரர் (இளவரசர்) மீது ஜனங்களுக்கு அன்பு உண்டாம்.

யோஷி ஹிடோ:—இவர் மிக்காடோ என்று சொல்லப்படும் ஜப்பான் சக்ரவர்த்தி. 1879-ம் ௵ பிறந்தவர். தற்கால முறைகளின்படி கல்வி கற்றவர். கப்பற்படை விஷயங்களிலும், ராணுவ விஷயங்களிலும் மிக்க தேர்ச்சி இவருக்கு உண்டு. ராஜாங்க விஷயத்தில் மிக்க ஊக்கத்துடன் உழைத்துவருகிறார்.

நிக்கோலஸ்: — மாண்டிநீக்ரோ என்னும் சிறு நாட்டினரசர். 1841-ம் ௵ பிறந்தவர். ஆஸ்ட்ரியா, ப்ரான்ஸ் தேசங்களில் கல்வி பயின்றவர். 1878-ம் ௵ பெர்லின் உடன்படிக்கையின் பிரகாரம் இவரது நாடு ஸ்வயேச்சையான நாடாயிற்று. நிக்கொலஸ் அரசரின்

குமாரத்திகளில் ஒருத்தியைத்தான் இடலியரசராகிய இம்மானுயல் மணந்திருக்கிறார்.

ஐந்தாவது முஹம்மத்:—இவர் டர்க்கி ஸுல்தான். 1844-ம் ௵ பிறந்தவர். வெகுகாலம் ராஜ்ய விஷயங்களையே யறியாமல் இவர் ராஜாங்கக்கைதியாக இருக்க நேரிட்டது. இவர் ஸஹோதரர் அப்துல் ஹமீதின் காலத்தில் அரசாங்கம் சீர்குலையவும், அவரை விலக்கி முஹம்மதை ஸுல்தானாக நியமித்தார்கள். இவர்காலத்திலும் அனேக கஷ்டங்கள் டர்க்கிக்கு ஏற்பட்டன. இப்பொழுது (பால்கன்யுத்தம் நடந்தபிறகு) டர்க்கியின் ராஜ்யம் ஐரோப்பாவில் குறுகிவிட்டது.

---

## அனுபந்தம் 9

### ராஜதந்திரிகள்

மிஸ்டர் ஆஸ்க்வித்:—இங்கிலாந்தின் ப்ரதம மந்திரி. 1852-ம் வருஷம் பிறந்தவர். லண்டன், ஆக்ஸ்போர்ட் இவைகளில் படித்தவர். இவர் 1886-ம் ௵ பார்லிமெண்டு மெம்பராக தெரிந்தெடுத்துக்கொள்ளப்பட்டார். இவர் பாரிஸ்டர் தொழிலிலிருக்கும்பொழுது கேஸுகள் இவரிடம் அதிகம் வாராமற்போய், வேண்டிய அவகாசம் கிடைக்க, அதை நம்மவர்போல் வீணில் செலவழிக்காமல் ராஜதந்திரவிஷயங்களில் தம் கவனத்தைச் செலுத்தி நிபுணரானார். தம் திறமையாலேயே படிப்படியாய் உயர்ந்த உத்யோகங்களில் அமர்த்தப்பட்டார். இவர் உள்நாட்டு மந்திரியாகவும் சான்ஸலர் ஆவ் தி எக்ஸ்சேகர் என்னும் பொக்கிஷமந்திரியாகவும் வேலை பார்த்திருக்கிறார். 1909-ம் ௵ முதல், ப்ரதம மந்திரியாக இருந்துவருகிறார். அதனுடன் யுத்த மந்திரி வேலையைப் பார்த்துவந்தவர் போர்நேரிடவும் தாம் அந்தப் பதவியிருந்து விலகிவிட, அதற்கென்று லார்ட் கிச்சனர் நியமிக்கப்பட்டார்.

# 9. ராஜதந்திரிகள்

**ஸர் எட்வர்ட் க்ரே:**—இங்கிலாந்தின் அன்யதேச மந்திரி. இந்த வேலையை 1905-ம் வருடமுதல், இவர் நிர்வஹித்துவருகிறார். இதற்குமுன் இவர் அன்ய தேச உதவி மந்திரியாக இருந்திருக்கிறார். அந்நிய தேச வ்யவஹாரங்களில் இவருக்கு நிகரானவர் கிடையாது. இவர் ஸாமர்த்யத்தைப்பற்றி இங்கிலாந்தின் ராஜ்யதந்திர நிபுணராய் விளங்கிய மிஸ்டர் க்ளாட்ஸ்டனே புகழ்ந்திருக்கும்போது நாம் என்ன சொல்ல வேண்டியிருக்கிறது? இவர் இந்த யுத்தத்தை நிறுத் தும்படியாகச் செய்த முயற்சிகளே இவரது பெருமையையும், ராஜ்யதந்திரத்தையும் செவ்வனே விளக்கிக் காட்டுகின்றன.

**ஏர்ல் கிச்சனர்:**—இங்கிலாந்தின் யுத்தமந்திரி. இவர் 1850-ம் வருஷத்தில் பிறந்தவர். ஆப்ரிக்காவில் நடந்த பல யுத்தங்களில் இவர் ஸேனைத்தலைவராக நியமிக்கப்பட்டனர். அவைகளில் ஒன்றிலாவது தம் காரியத்தை முடிக்காமல் வரவில்லை. தென் ஆப்ரிக்கா யுத்தத்தில் லார்ட் ராபர்ட்ஸின்கீழ் உத்யோகம் பார்த்துவந்தார். பிறகு அவ்விடத்திலேயே இரண்டு வருஷம் ஸேனைத் தலைவராய் இருந்துவந்தார். பிறகுதான் அவர் இந்திய ஸேனாதிபதியாக வந்தது. இந்திய ஸேனாதிபதியாயிருந்த இவரது நடவடிக்கைகளைப்பற்றி நம்மவரில் பலருக்கும் இன்னும் ஞாபகமிருக்கும். இவர், தாம் நினைத்ததை என்ன இடையூறுகள் நேரிட்டபோதினும் பிடிவாதத்துடன் முடித்தே தீருவார். ராணுவத்தில் சில சீர்திருத்தங்கள் செய்யப்படவேண்டுமென்று இவர் ஒரு யோசனை கொண்டுவரவும், இவருக்கும் லார்ட் கர்ஸனுக்கும் இயையாமற் போய்விடவே, லார்ட் கர்ஸன் தம் வேலையை ராஜிநாமா கொடுத்துவிட, கிச்சனர் தம் காரியத்தில் ஸித்தியடைந்தார். பிறகு இவர் ஈஜிப்ட்தேசத்தில் ப்ரிடிஷ் மேற்பார்வையினதிகாரியாய்ச்சென்று அனேக சீர்திருத்தங்கள் கொண்டுவந்

தார். இவரது அனுபவ முதிர்ச்சியை அங்கீகரித்தே இவர், காலஞ்சென்ற எர்ல் ராபர்ட்ஸின் ஆலோசனையின்கீழ் யுத்த மந்திரியாக நியமிக்கப்பட்டுள்ளார்.

**உவின்ஸ்டன் சர்ச்சில்**:—இங்கிலாந்தின் கப்பற்படை மந்திரி. 1874-ஹு பிறந்தவர். 1895-ஹு ராணுவத்தில் சேர்ந்து இந்திய எல்லைநாட்டுயுத்தங்களிலும் ஆப்ரிக்கா யுத்தங்களிலும் போர்செய்து ப்ரஸித்தியடைந்தவர். ப்ரிடிஷ் ராஜாங்கத்தில் முக்யஉத்யோகங்களை வஹித்து வந்திருக்கிறார். ப்ரிடிஷ் கப்பற்படைகளை மிகச்சிறந்தவைகளாகச் செய்யவேண்டுமென்பது அவர் கருத்து.

**லாய்ட் ஜார்ஜ்**:—இங்கிலாந்தின் பொக்கிஷமந்திரி. 1863-ஹு பிறந்தவர். 1908-ஹு முதல் இதே பொக்கிஷ மந்திரியாகவே இருந்துவருகிறார். இவர் வியாபார வ்யவஹாரங்களிலும் பண விநியோக விஷயங்களிலும் மிக்க நிபுணர்.

**விவியாணி**:—இவர் ப்ரான்ஸின் ப்ரதம மந்திரி. மிகுந்த கல்விமான். மற்ற தேசத்து மந்திரிகளைக் காட்டிலும் இலக்கியங்களில் தேர்ச்சியுள்ளவர் என்று சொல்லப்படுகிறது. மிகவும் ஸாது.

**டேல்காஸி**:—இவர் ப்ரான்ஸ் தேசத்தின் அன்னிய வ்யவஹார மந்திரி.

**டாக்டர் வான் பெத்மான் ஹால் உ(வே)க்**:—ஜெர்மனிதேசத்தின் ப்ரதம மந்திரி (இம்பீரியல் சான்ஸலர்). 1856-ஹு பிறந்தவர். இவரும் ஜெர்மன் சக்ரவர்த்தியும் பால்ய முதற்கொண்டு ஆப்தநண்பர்களாம். இருவரும் **பான்** என்ற நகரில் உள்ள ஸர்வகலாசாலையில் படித்தவர்களாம். இவர் தம் அறிவு, ஸாமர்த்திய முதலியவற்றின் உதவியால் முதன்மந்திரியானார். நிரம்பப் படித்தவர். இவரது நடவடிக்கைகளைப்பற்றி முன்னமேயே குறிப்பிட்டுள்ளது நண்பர்களுக்கு ஞாபகமிருக்கலாம்.

**ஹேர் வான் ஜாகௌ**:—ஜெர்மனியின் அன்னியதேச

வ்யவஹார மந்திரி. இவரும் கெய்ஸருக்கு வேண்டிய வர். இவருக்குத் தனியே காரியங்களைச்செய்யும் ஆற்றலிருந்தபோதிலும், ஜெர்மனியில் மாத்திரம் இவர் கெய்ஸர் வார்த்தைக்கு எதிர் சொல்வதில்லையாம்.

**கௌண்ட் லியோபோல்ட் பேர்க்டோல்ட்:**—ஆஸ்ட்ரிய மந்திரி. ஹங்கரியில் பிறந்தவர். ராஜ்யதந்திர நிபுணர். காலஞ்சென்ற ப்ரான்ஸிஸ் பெர்டினண்டு என்னும் இளவரசரது ஆப்த நண்பர். இவர் மந்திரி ஸ்தானத்தில் இருக்கும்போது, இப்போர் நிகழ்ந்தது மிகவும் ஆச்சரியமெனச் சொல்லப்படுகின்றது.

**நிக்கோலஸ் பாசிட்ச்:**—ஸெர்வியநாட்டு மந்திரி. வயது சென்றவர்; ஸுமார் 65 வயதிருக்கலாம். விசேஷ தாராள நோக்கங்கள் உள்ளவர். ஸெர்வியாவின் அபிவிருத்திக்கு இவரே காரணமென்று சொல்லவேண்டும். ஆங்கில முறைகளையே இவர் மேற்கொண்டவர்.

**ஸாஸனுப்:**—ரஷிய அன்யதேச வ்யவஹார மந்திரி. இவர் ஸமாதானத்தையே நாடியுள்ளவர். பிற தேச வர்த்தமான விஷயங்களில் ஸர் எட்வர்ட் க்ரே மாதிரியே மிகவும் நிபுணர்.

**கௌண்ட் ஒகூமா:**—ஜப்பான் தேசத்து மந்திரி. 1838-ம் வருஷத்தில் பிறந்தவர். இளமை முதற் கொண்டே கல்வி கற்க ஆரம்பித்து ஐரோப்பியபாஷைகளிலும் பயின்றுள்ளவர். ஆங்கில ராஜாங்க முறைகளை அனுசரிக்கவேண்டுமென்று அதற்காகப் பாடுபட்டவர். அநேக முக்யமான உத்யோகங்களில் இருந்திருக்கின்றனர். தேசத்தின் அபிவிருத்தியை நாடி வெகுவாக உழைத்திருக்கிறார். பல தடவைகளில் மந்திரியாக இருந்திருக்கின்றனர். கல்வி விஷயத்திலும் தேசத்திற்காக உழைத்திருக்கிறார். அநேக பள்ளிக்கூடங்கள் இவர் முயற்சியினாலேயே ஸ்தாபிக்கப்பட்டுள்ளன. எதிலும் தாராள மனஸுடையவர். நம் இந்தியரின் மீது மிகவும் அன்புள்ளவர்.

# அனுபந்தம் 10

## ஸேனாதிபதிகள்

காலஞ்சென்ற எர்ல் ராபர்ட்ஸ்:—*இவர் 1832-ம் வருஷத்தில் கான்பூரில் பிறந்தவர். மிகவும் நுட்பபுத்தியுள்ளவர். ராணுவத்தில் படிப்படியாய் உயர்ந்த பதவிகளையடைந்து இந்தியஸேனாதிபதியாயும் ப்ரிடிஷ் ஸேனாதிபதியாயும் இருந்து அனேக சீர்திருத்தங்கள் செய்ததுமன்றி பெரிய யுத்தங்களில் வெற்றிபெற்றும் வந்தவர். மற்ற நாடுகளைப்போல இங்கிலாந்திலும் ராணுவப் பயிற்சி கட்டாயப்படுத்தப்படவேண்டுமென்ற கொள்கையுடையவர். இவர் ஸைன்யங்களைப் பார்த்துக் களிக்க வேண்டுமென்று யுத்தகளம் வந்து அச்சமயத்தில் ந்யுமோனியா கண்டு இறந்துபோனார். இவரது சரித்திர விவரத்தை 1914-ம் வருஷ டிஸம்பர்மீ 'விவேக போதினி'யில் காணலாம்.*

ஸர் ஜான் ப்ரஞ்ச் :—*இங்கிலீஷ் படைத்தலைவர். 1852 வருஷ பிறந்தவர். 1866 வருஷ முதல் நான்கு வருஷ காலம் கப்பற்படையிலமர்ந்து வேலைபார்த்து வந்தார். ஆனால் தரைப்படை என்றால் இவருக்கு விருப்பம அதிகம். பிறகு அனேக போர்களில் பற்பல உத்யோகங்களிலிருந்து போர் புரிந்திருக்கின்றார். ஆப்ரிக்காவில் நடந்த அனேக யுத்தங்களில் பிரக்யாதியடைந்தார். போவர் யுத்தத்தில் கிம்பர்லி முற்றுகையின் போதும், ப்ளுயம்பான்டென், ப்ரிடோரியா இவைகளைப் பிடிக்கும்போதும், போவர் வீரனாகிய க்ரான் ஜீயைப் பிடிப்பதற்கும் வெகு தீரத்துடன் தம் படையைக்கொண்டு போர்புரிந்தார். காரியங்களை முடிக்கும் துணிவிலும், சுறுசுறுப்பிலும், புத்திசாதுர்யத்திலும் இவருக்கு ஒருவரும் நிகரில்லையெனவே சொல்ல வேண்டும்.*

ஜெனரல் ஜாப்ரே :—*ப்ரஞ்சுபடைத் தலைவர். இவ*

# 10. ஸேனாதிபதிகள்

ரும் 1852-ஆம் வருஷத்திலே பிறந்தவர். இருபது வயதிற்குள்ளேயே போரில் கைகலந்து யுத்தம் செய்திருக்கிறார். 1870-ஆம் வருஷத்தில் நடந்த ப்ரஞ்ச் ஜெர்மன் சண்டையில் இவர் போர்செய்த திறமையைக்கண்டு இவருக்கு மேல்உத்யோகங்கள் கிடைத்தன. கோட்டைகள் கட்டுவதும் அகழிகள் தோண்டுவதுமான முக்யவேலைகளின் மேற்பார்வை உத்யோகம் இவருக்குக்கிடைத்தது. ஆசியா ஆப்ரிக்கா கண்டங்களிலும் தரைப்படைகளில் இவர் உத்யோகம் பெற்றிருந்தார். கணித சாஸ்திரத்தில் மஹா நிபுணர். இவர் காரியங்களை ஆரவாரம் யாதொன்றுமின்றி ஸாவதானமாய்ச் செய்வதில் ஸமர்த்தர். தம் தொழிலில் மிகவும் கண்ணுங்கருத்துமாக இருப்பவர். கபடமற்றவர்.

க்ராண்ட் ட்யூக் நிக்கோலஸ் :—இவர் ரஷிய ஸேனாதிபதி. மிக்க சிறப்புவாய்ந்த போர்ப்பயிற்சியுடையவர். 1877-ம் வருஷத்திலேயே இவருக்கு படைத்தலைமை கிட்டிவிட்டதென்றால் இவர் தேர்ச்சிக்குக் கேட்கவும் வேண்டுமோ? ரஷ்ய-டர்க்கி யுத்தத்தில் வெற்றிபெற்றதினிமித்தம் சிறந்த கௌரவபட்டங்கள் கொடுக்கப்பட்டார். ரஷிய-ஜப்பானிய யுத்தத்திலும் படைத்தலைமை வஹித்திருக்கிறார். ஆகையால் யுத்தத்தில் இவருக்கு மிக்க அனுபவம் உண்டு. ஸைன்யங்களைப்பற்றிய எல்லா வ்யவஹாரங்களும் இவருக்கு நன்றாய்த் தெரியுமாம்.

ஜேனரல் புட்நிக் :—ஸெர்விய படைத் தலைவர். இவருக்கு வயது அறுபதாகிறது. ஐரோப்பாவிலுள்ள எல்லா முக்கிய தேசங்களுக்கும் சென்று, கல்வி, முக்யமாய் யுத்தப் பயிற்சி, பெற்றுள்ளார். மற்ற தேசங்களில் எவைகள் நல்லவைகள் என்று தோன்றினவோ அவைகளைத் தம் நாட்டில் கொண்டுவந்து அனுஸரித்திருக்கிறார். இவருக்கு ஐந்து பாஷைகள் நன்றாய்த்

தெரியுமாம். போர்வீரர்களுக்கு இவரைக் கண்டால் வெகு ப்ரியமாம்.

**ஜெனரல் வான் மால்ட்க்** :—ஜெர்மன் யுத்தத் தலைவர். இவருக்கு வயது அறுபத்து நான்காகிறது. இவரது பெயரை வஹித்த கௌண்ட் வான் மால்ட்கைப் போலவே இவரும் மஹா நிபுணர். சிறுவராயிருக்கும்போதே நல்ல உத்தியோகத்திலமர்ந்து அதி சீக்கிரத்தில் பற்பல கௌரவங்களைப் பெற்று கீர்த்தியடைந்தார். ஜெர்மன் சக்ரவர்த்திக்குப் பிறகு இவர் தாம் செல்வாக்குள்ளவர். ஜெர்மனியின் தரைப்படை சிறந்ததாயிருப்பதற்கு இவரது விடாமுயற்சியும் சுறு சுறுப்புமே காரணம். காரியங்களை எவ்விதத்திலாயினும் முடித்துவிடுவார். இவருக்கும் கெய்ஸருக்கும் மிகுந்த நட்பு முன் இருந்தது—இவரது வார்த்தையைக் கேட்காமல் ஜெர்மன் சக்ரவர்த்தி நடந்து விட்டு, இவர்மீதும் கோபித்துக் கொண்டனராம்.

**ஜெனரல் வான் ஹீட்ஸன்டார்ப்** :—ஆஸ்ட்ரிய படைத்தலைவர். இவர் யுத்தத்திற்குக் காரணமாயிருந்தவராகத் தெரியவருகிறது. வயது சென்ற ஆஸ்ட்ரிய சக்ரவர்த்திக்கு நல்ல ஆலோசனை சொல்வதுபோல் ஆஸ்ட்ரியா ஸெர்வியா இந்த இரண்டு நாட்டிற்கும் போரை மூட்டிவிட்டனர்.

---

## அனுபந்தம் 11

### கப்பற்படைத் தலைவர்கள்

**ஸர் ஜான் ஜெலிகோ** :—ப்ரிடிஷ் கப்பற்படைத் தலைவர். இவர் 1859-ம் வருஷத்தில் பிறந்தார். இவர் பற்பல உத்யோகங்களை கடற்படையில் வஹித்து வந்திருக்கிறார். பதின்மூன்றாவது வயதிலேயே கப்பற்படையில் சேர்ந்துவிட்டார். இவருடைய ஸாமர்த்யத்திற்

காக மெச்சி அநேக பரிசுகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. ஆசியா ஆப்ரிக்கா கண்டங்களில் அநேக முறை மிகவும் சாதுர்யமாகப் போர்புரிந்திருக்கிறார். கப்பற்படையின் உயர்தர உத்யோகங்களிலிருந்து அநேக கௌரவபட்டங்கள் பெற்றிருக்கின்றனர். தற்காலத்து ப்ரிடிஷ் கப்பற்படைகளின் தேர்ச்சிக்கும் சிறப்புக்கும் அவைகளின் தலைவராயிருக்கும் இவர் தாம் காரணம். தம் அனுபவ முதிர்ச்சியால் உலக வ்யவஹாரங்களையறிந்து அதற்கேற்ப நடப்பவர்.

போவே-டி-லாபேரியர்:—ப்ரஞ்ச் கப்பற்படைத்தலைவர். இவருக்கு வயது அறுபத்தொன்றாகிறது. ப்ரஞ்ச் கப்பற்படையெல்லாம் மத்ய தரைக்கடலில் இருக்கிறது. அவைகள் இதுவரையில் எந்தப் போரிலும் ஸம்பந்தப்படாமலிருந்த போதினும் ஸமயம் வாய்த்தால் நன்றாய்ப் போர்புரியும் என்று சொல்லப்படுகிறது. ஏனெனில் கப்பற்படைத்தலைவராய் இருக்கும் இவர் முப்பது வருஷ அனுபவமுள்ளவர். அநேக கப்பற்படை உத்யோகங்களை வஹித்து மிகுந்த சிறப்புவாய்ந்திருக்கிறார். மிகவும் தைர்யசாலி.

ஷி கிடு டேவா:—ஜப்பானிய கப்பற் படைத்தலைவர். 1855-ம் வருஷத்தில் பிறந்தவர். 1882-ம் வருஷத்தில் இவரது கப்பற்படிப்பு முற்றியது. அது முதற்கொண்டு படிப்படியாய் உயர்ந்த கப்பற்படை உத்யோகத்தில் அமர்த்தப்பட்டார். அநேக பரிசுகள், பட்டங்கள் பெற்றுள்ளார். கப்பற்படைப் படிப்பிற்குத் தலைவராகவும் இருந்திருக்கிறார். ரஷிய-ஜப்பானிய யுத்தத்தில் கப்பற்படையின் மூன்றாவது அணிக்குத்தலைவராயிருந்தார். 1911-ம் வருஷ முதற்கொண்டு முதல்படையின் தலைவராக இருந்துவருகிறார்

வான் டர்பிட்ஸ்:—ஜெர்மானிய கப்பற்படைத் தலைவர். இவருக்கு வயது அறுபத்துநான்காகிறது. ஜெர்மன் கப்பற்படையில் வேலை கற்றுக்கொள்ளுபவராக

1865-ம் வருஷத்தில் சேர்ந்தார். 1891-ம் வருஷம் பால்டிக் துறைமுகத் தலைவரானார். 1897-ம் வருஷம் கப்பல் மந்திரியானார். 1899-ம் வருஷம் முதற்கொண்டு வைஸ் அட்மிரல் என்னும் கப்பற்படையின் தலைவராய் இருந்துவருகிறார். இவருடைய முயற்சியினாலேயே தற்காலத்திய ஜெர்மன் நாவாய்கள் விருத்தியடைந்தனவென்று சொல்லவேண்டும். ப்ரிடிஷ் கப்பற்படைகளை எப்பொழுதும் வியந்து அவைகளையே தமக்கும் மாதிரியாக வைத்துக்கொண்டனராம். ஜெர்மன் சக்ரவர்த்திக்கு ரொம்பவும் வேண்டியவராம். இவருடைய வார்த்தைக்கு ஒருவரும் எதிர்சொல்லமாட்டார்களாம். மிகவும் ஸாமர்த்தியசாலி என்று சொல்லப்படுகிறது.



## முக்ய ராஜ்யங்களின் விஸ்தீரணம் ஜனத்தொகை.

| ராஜ்யங்கள் தேசங்கள் | விஸ்தீரணம் சதுரமைல் | ஜனத் தொகை. | ஒருசதுரமைலுக்குஜனத் தொகை. | ப்ரதான நகரம் |
|---|---|---|---|---|
| ப்ரிடிஷ் ராஜ்யம் | 13,123,712 | 435,000,000 | 32 | லண்டன் |
| யுனைடெட் ராஜ்யம் | 120,651 | 45,250,000 | 374 | |
| இந்தியா | 1,773,170 | 315,000,000 | 158 | டெல்லி |
| கானடா | 3,730,000 | 7,250,000 | 2 | ஒட்டாவா |
| ஆஸ்ட்ரேலியா | 3,063,041 | 5,000,000 | 2 | மெல்போர்ன் |
| தென் ஆப்ரிகா | 473,100 | 6,000,000 | 13 | ப்ரிடோரியா |
| ஆஸ்ட்ரியா | 134,634 | 29,000,000 | 222 | வியன்னா |
| ஹங்கரி | 125,400 | 21,000,000 | 170 | புடாபெஸ்ட் |
| பெல்ஜியம் | 11.400 | 7,500,000 | 658 | ப்ரஸ்ஸல்ஸ் |
| ப்ரான்ஸ் | 207,100 | 40,000,000 | 193 | பாரிஸ் |
| குடியேற்ற நாடுகள் | 3,800,000 | 44,000,000 | 11 | |
| ஜெர்மன் ராஜ்யம் | 208,780 | 65,000,000 | 311 | பெர்லின் |
| குடியேற்ற நாடுகள் | 1,134,240 | 15,000,000 | 13 | |
| ஜப்பான் | 140,200 | 50,000,000 | 356 | டோக்யோ |
| அடங்கியநாடு | 95,700 | 15,100,000 | 187 | |
| லக்ஸம்பர்க் | 1,000 | 260,000 | 260 | லக்ஸம்பர்க் |
| மான்டினீக்ரோ | 5,800 | 500,000 | 85 | ஸெடிஞ்ஜ் |
| நெதர்லாண்ட்ஸ் | 12,761 | 6,000,000 | 407 | ஹேக் |
| குடியேற்ற நாடுகள் | 832,500 | 38,000,000 | 46 | |
| போர்ச்சுகல் | 35,500 | 5,500,000 | 155 | லிஸ்பன் |
| குடியேற்ற நாடுகள் | 804,000 | 10,000,000 | 12 | |
| ரஷியா | 8,400,000 | 164,000,000 | 19 | பீட்ரோக்ராட் |
| ஸெர்வியா | 34,000 | 5,000,000 | 143 | பெல்க்ரேட் |
| ஸ்பெய்ன் | 194,7000 | 20,000,000 | 103 | மாட்ரிட் |
| டர்க்கி | 695,000 | 20,000,000 | 29 | கான்ஸ்டாண்டிநோபுல். |

# முக்ய ராஜ்யங்களின் ஸேனாபலம்

| ராஜ்யம் | யுத்தப்பயிற்சி முறை | போர்ப்படையில் இடை விடா பயிற்சி | 1913௵த்து திருப்பு களின் பலம் | யுத்தகாலத்தில் திருப்புபலம்முதலிரண்டணி மாத்திரம் | படைகளின் திட்டச் செலவு |
|---|---|---|---|---|---|
| | | | | | பவுன் |
| ஆஸ்ட்ரிய-ஹங்கரி | எல்லா-கட்டா | 2-3 ௵ | 425,881 | 810,000 | 22,193,204 |
| பெல்ஜியம் | மிலிஷியா<br>எல்-கட் | 1 1/3-2 ௵ | 43,000 | 180,000 | 2,790,550 |
| ப்ரான்ஸ் | எல்லா-கட்டா | 3-௵ | 545,963<br>74,900 | 1,250,000 | 36,550,000 |
| ஜெர்மனி | ஷை | 2-3௵ | 672,000 | 2,250,000 | 60,000,000 |
| ஜப்பான் | ஷை | 2-3௵ | 230,000 | 750,000 | 9,966,607 |
| நெதர்லண்ட்ஸ் | மிலிஷியா<br>வலுக்கட் | 8 1/2-24௴ | 47,660 | 125,000 | 2,711,500 |
| போர்ச்சுகல் | ஷை | 15-30 வாரம் | 32,000 | 100,000 | 1,971,210 |
| ரஷியா | எல்லா-கட்டா | 3-4 1/3 ௵ | 1,500,000 | 1,200,000<br>250,000<br>180,000<br>275,000 | 67,200,210 |
| ஸெர்வியா | ஷை | 1 1/2-2௵ | 30,038 | 195,000 | 1,127,641 |
| ஸ்பெயின் | ஷை | 1-3௵ | 135,500 | 350,000 | 7,575,283 |
| டர்க்கி | ஷை | 3-4௵ | 220,000 | 360,000 | 8,000,000 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஐக்யமாகாணங்கள் | வாலண்டரி | 4-7 வரு | 95,000<br>121,000 | 65, 000<br>95, 000 | 30,000,000 |
| க்ரேட் ப்ரிடன் | ஷை | 7-வரு | 162,251<br>251,195 | 275, 000 | 28,220,000 |
| இந்தியா | ப்டிரிவ்ஷ் இந்தியத் துருப்பு வால | 3-வரு | 77,500<br>159,100 | 77, 500<br>200, 000 | 18,000,000 |
| ஆஸ்ட்ரேலியா | மிலிஎல்லாகட் | 16 நா வருத்துக்கு | 105,000 | 150, 000 | 2,500,000 |
| கானடா | மிலி-வாலண்டரி | வரு 12-16 நாள் | 71,200 | 75, 000 | 1,520,000 |
| தென் ஆப்ரிகா | மிலி வாலண் | வரு 8-15 நாள் | 20,000 | 28, 000 | 1,150,000 |

குறிப்பு:—இந்த அட்டவணையில் காணப்படுபவைகள் முக்ய அம்சங்களையே காட்டுகின்றன.

எல்லா கட்டா வலுக்கட் — எல்லாரும் கட்டாயமாய் பயில வேண்டியது.

மிலிஷ்யா—குடிகளே படையில் பழகி வருவது.

வாலண்டரி—இஷ்டமுள்ளவர்கள் சேர்ந்து பயிலுதல்.

## 1914-ம் வருஷாரம்பத்தில் உலகத்து முக்ய ராஜ்யங்களின் கப்பற் படைகள

| கப்பற் படைகள். | ப்ரிடிஷ் ராஜ்யம். | | ப்ரான்ஸ் | | ருஷியா. | | ஜெர்மனி. | | ஆஸ்ட்ரியா. | | இடலி | | ஐக்கிய மாகாணங்கள். | | ஜபான். | | டர்க்கி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | முடிந்தது. | நடந்துவருகிறது. | முடிந்தது. | நடந்துவருகிறது. | மு | ந | மு | ந | மு | ந | மு | ந | மு | ந | மு | ந | |
| யுத்தகப்பல்கள் | 55 | 11 | 21 | 7 | 9 | 7 | 33 | 7 | 13 | 3 | 9 | 5 | 33 | 4 | 17 | 1 | 5 |
| க்ரூய்ஸர்கள் :— | | | | | | | | | | | | | | | | | |
| யுத்தக்ரூய்ஸர்கள் | 7 | 3 | 0 | 0 | 0 | 4 | 3 | 3 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 4 | 8 |
| கவசமுள்ளவை | 34 | 0 | 20 | 0 | 6 | 0 | 9 | 0 | 3 | 0 | 9 | 0 | 14 | 0 | 13 | 0 | 2 |
| பாதுகாப்பு I | 17 | 0 | 0 | 5 | 0 | 6 | 6 | 0 | 0 | 0 | 0 | 0 | 3 | 0 | 2 | 0 | 2 |
| ,, லேசானவை | 8 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 15 |
| ,, II | 40 | 7 | 4 | 0 | 0 | 2 | 30 | 4 | 3 | 3 | 2 | 1 | 15 | 0 | 13 | 0 | 8 |
| ,, III | 16 | 0 | 5 | 0 | 2 | 0 | 11 | 0 | 3 | 0 | 11 | 2 | 0 | 0 | 4 | 0 | 13 |
| பாதுகாவலில்லாத | 5 | 0 | 0 | 0 | 0 | 0 | 4 | 0 | 3 | 0 | 0 | 0 | 3 | 0 | 4 | 0 | |
| (Scouts) ஒற்றுபார்க்கும் கப்பல்கள் | 8 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 1 | 2 | 3 | 0 | 0 | 0 | |
| டார்பிடோ கப்பல்கள் | 28 | 1 | 4 | 0 | 3 | 0 | 0 | 0 | 11 | 0 | 3 | 0 | 2 | 0 | 3 | 0 | |
| டார்பிடோ படவு டெஸ்ட்ராயர்கள் | 191 | 38 | 73 | 11 | 96 | 45 | 123 | 9 | 12 | 6 | 22 | 10 | 46 | 14 | 59 | 0 | |
| டார்பிடோ படகுகள் | 109 | 0 | 165 | 0 | 26 | 0 | 80 | 0 | 60 | 8 | 76 | 24 | 22 | 0 | 50 | 0 | |
| ஸப்மெரீன் | 61 | 22 | 73 | 8 | 29 | 19 | 23 | 15 | 6 | 0 | 12 | 8 | 25 | 22 | 13 | 2 | |

# புத்தக விளம்பரம்

---

## முராளீதரன்

ஓர் இந்திய மாதால் எழுதப்பட்டது

*மிகவும் ஆனந்தத்துடன் எல்லோரும் கருதக்கூடிய மாசற்ற இளம்பருவத்தின் இன்பமும், நம் மதத்திற்குரிய சிறந்த விவாஹவிமர்சைகளும், அவ்விவாஹ காலத்தில் ஏற்படும் கோலாஹலங்களின் அழகும், ஜகத்ரக்ஷகியாய், ஸகலஜீவதயாபரியாய் ஜகன்மாதாவாய் விளங்கும் ஈச்வரியின் சிறப்பும், அவளது பக்தியிலீடுபட்டு நிற்கும் பக்த கோடிகளின் உயர்வும், கடற்கரைக் காட்சியும், உண்மை நட்பின் பெருமையும், ஊரா ருடன் வீண்வம்பு பேசுவதனுல் வரும் தீங்கும், அன்புள்ள காதலர்களின் மனோநிலையும், பொறுமையின் சிறப்பும் எளிய நடையில் இந்நாவலில் சித்திரப் படங்களுடன் நன்கு விளக்கிக் காட்டப்பட்டிருக்கின்றன.* **விலை அணு 10**

### குண்டலகேசி அல்லது
### "தற்கொலியை முற்கொன்றவள்"

*தமிழ் மொழியிலே "பஞ்சகாவியங்கள்" என்று கற்றோரால் பெரிதும் பாராட்டப்படும் நூல்கள் சிந்தாமணி, மணி மேகலை, சிலப்பதிகாரம், வளையாபதி, குண்டலகேசி என்பனவாம். இவற்றுள் ஒன்றான "குண்டலகேசி" என்னும் நூல் இக்காலத்தில்இல்லை; பண்டைக் காலத்திலேயே அஃது இறந்தொழிந்ததுபோலும்! ஆனால், அந்நூல் எதைப்பற்றிக் கூறுவதென்பது, இப்போது காணப்படும் சில செய்யுட்களைக் கொண்டும், பிற சாதனங்களைக்கொண்டும் ஒருவாறு அறியக் கிடக்கிறது. அவைகளை ஆதாரமாகக்கொண்டு ஸ்ரீமாந் நாகை - ஸி. கோபாலகிருஷ்ண பிள்ளை அவர்கள் இந்த நாவலை மிக உயர்ந்த செந்தமிழ் நடையில் எழுதியுள்ளார்கள். இது சரித்திரசம்பந்தமான நாவலாகும். பௌத்தமததர்மங்களைப் பற்றியும் தமிழ் நன்மக்களின் பண்டைக்கால வழக்க ஒழுக்கங்களைப்பற்றியும் இந்நாவல் விவரித்துக் கூறுகிறது. இந்நாவலின் கம்பீரமும் அழகும் வாய்ந்த இனிய வசன நடை, படிப்போர் மனத்தைப் பெரிதும் பரவசப்படுத்தும் படியான வகையில் அமைந்திருக்கின்றது.* **விலை அணு 6**

---

## அமரஸிம்ஹன் அல்லது சிங்களத்துச் சீமான்

இது ஓர் உயர்ந்த செந்தமிழ் நாவல். அலக்ஸாண்டர் டூமாஸ் (Alexander Dumas) என்னும் பெயர்பெற்ற மேனாட்டுக் கதாசிரியரால் இயற்றப்பட்ட நாவல்களுக்குள்ளெல்லாம் மிகச் சிறந்ததும் முதன்மை பெற்றதுமான கவுண்ட் ஆப் மாண்டி கிரிஸ்டோ (The Count of Monte-Cristo) என்னும் ஆங்கில நாவலின் போக்கையே பெரும்பாலும் தழுவி இனிய செந்தமிழ்நடையில் ஸ்ரீமான் நாகை வி. கோபால கிருஷ்ண பிள்ளையால் இஃது எழுதப்பெற்றிருக்கிறது. இந் நூலாசிரியர் இதுவரை எழுதியுள்ள தமிழ் நாவல்களுள் இதுவே மிகச் சிறந்ததாகும். இந்நாவலின் அழகிய வசன நடையும், உயர்ந்த நீதி போதனைகளும், ஆச்சரியகரமான கதைப்போக்கும் படிப்பவர்க்குப் பேரானந்தம் விளைவிக்கும் இயல்பினவாகும். பெதர்-வெயிட் (Feather-weight) பேப்பர் என்னும் மிக விலையுயர்ந்த கடிதத்தில் இந்நாவல் அச்சிடப்பட்டிருக்கிறது. 340-பக்கங்கள் கொண்டது. விலை ரூ 1

## சங்கநிதி அல்லது செல்வராஜன்

ஏராளமான செல்வத்தையுடைய ஒருவன் சர்ச்சனர்களுக்குச் சகாயமும் துர்ச்சனர்களுக்குத் தகுந்த தண்டனையும் செய்யக்கூடுமென்பதும், எவ்வித பிரதி பலனையும் எதிர்பாராமல் பிறர்க்கு அரிய உபகாரங்களைச் செய்யலாமென்பதும், தனக்குத் தீங்கிழைத்தவர்களுக்குப் பதில் தீங்குசெய்யத் தனக்குச் சக்தியிருந்தும், அவர்களை மன்னித்துக் கருணைகாட்டுவதே சிறந்த குணமென்பதும், அதிலும் தனக்குத் தீங்கிழைத்தவர்களுக்கு உபகாரமே செய்தல் மகா உத்தமகுணமென்பதும் இக்கதையால் வெளியாகிறது. மேலும் துஷ்டனாகிய ஒருவன் எவ்வளவு யுக்தி, சாமர்த்தியம், செல்வம், பாவம் முதலியவைகளை யுடையவனேனும், முடிவில் எப்படியாவது பிடிக்கப்பட்டு அபகீர்த்தியும் தண்டனையும் அடைவானென்பதும், கற்புடைய உத்தமஸ்திரீகளுக்கு எத்தகைய ஆபத்துகள் வரினும் தங்கள் நெறியினின்றும் பிசகமாட்டார்களென்பதும், அவர்களுக்குக் கடவுள் எவ்வாறேனும் உதவிபுரிவார் என்பதும் இன்னும் பல அரிய நீதிகளும் இதிற் காணலாம். இக்கதை வாசிப்பவர்களுக்கு மிக்காச்சரியத்தையும் ஒருவித சந்தோஷத்தையும் தருவதோடு மனதிலுள்ள எவ்வகைப்பட்ட துயரத்தையும் நீக்கி அறிவிற்கு உணவைத் தரும். விலை அணா 12

---

மானேஜர், 'விவேக போதினி' திருவல்லிக்கேணி, சென்னை.